# MALIE ARASER CHARITHRUM.

## THE

## HISTORY OF THE HILL KINGS

### OF TINNEVELLY,

By

ARULUPPEN NULLATHUMBY, CATECHIST.

*C. M. Society.*

ISAIAH. XL11: 11.

Let the wilderness and the cities thereof lift
up their voice, the villages that Kedar
doth inhabit: let the inhabitants of
the rock sing, let them shout
from the top of the
mountains.

1, 000 Copies.

MADRAS.

PRINTED AT KALARUTHNAKARAM PRESS.

BY

W. PUSHPARATHA CHETTIAR.

1867.

My grateful acknowledgments are due to the Rev. W. T. Satthianadhan of the Church Mission, Mr. N. Cornelius Headmaster of the London Mission Central Institution and Mr. V. T. Paramasiven of the Free Church Mission, for the valuable help these gentlemen rendered me in carrying the work through the press.

I beg also to tender my hearty thanks to such charitable gentlemen as have helped me with their liberality to publish and circulate this book.

A. N.

The object of this work is to invite all who have tasted of the love of Christ, to offer the sovereign remedy for sin, even faith in the shed blood of the Son of God, not only to the Hill Kings, but to all the Hill Tribes scattered throughout this Land from the Himalayas to Cape Comorin.

## PREFACE.

This treatise owes its origin to the suggestion of the Rev. William Clark who, while I was an inspecting Catechist under him in Nullur, a district of Tinnevelly, proposed the starting of the Educational Repository, a periodical which would treat of miscellaneous subjects and be contributed by different individuals; that these articles should be systematically entered into a book, and the manuscript circulated throughout all the villages attached to Nullur and Pavoor, where the catechists were to read and expound the same to their congregations respectively, in the anticipation that happy results would accrue from the measure.

Anxious to respond to the call I chose the "Hill Kings" for my quotà, and began to write it in 1859, A. D.

For some time a feeling of uneasiness lest adequate justice should not have been done to the subject; the sense that its comprehensiveness presented a more extended scope than the one assigned by the periodical referred to; the conviction that a faithful delineation of the tribes, their deprivation of and indifference to every kind of knowledge and the prospects of Eternity would awaken compassion in the spectators of the tragedy; the desire that some how they should be reinstated in the light and liberty of

the glorious Gospel; the hope that the appliances where-by this might be effected would be amply supplied by the Christian public and that the ultimate gratification which had been long cherished of myself joining in the deputation to that hitherto neglected section of the human family, would be achieved - such considerations as these stimulated me to improve the M S. copy with many instructive and interesting additions.

To procure permanency and to facilitate such a circulation as would meet the magnitude of the appeal from the fastnesses of the Western Ghauts I endeavoured to get the copy printed. But owing to impediments personal and pecuniary, the scheme was with much reluctance suspended; and while thus despairing of the least prospect of success, He who has given his children the assurance that He will perfect the good work he hath begun in them until the day of Jesus Christ, has through a Christian Brother from Mauritius strengthened my hands and cheered me up to resume my favourite task.

In the perusal of these pages I beg it to be clearly kept in view that these Hill Kings are neither those who are found in Travancore nor those of Cottayam in the charge of the Rev. Henry Baker, but they belong to a distinct race supposed to be descended from the aborigines of the country and are of the Pandyan territory.

A. N.

# TESTIMONIALS.

## From The Rev. J. GRITTON.

*3rd March*, 1866,

Royapoorum.

I have gone through Nullathumby Catechist's History of the Hill Kings, and think it well adapted to arouse and deepen interest in a miserable and neglected people, who are perishing for lack of knowledge. May the help of Christian people who have means, enable my good brother to carry out his publication.

(Signed) John Gritton,

C. M. S.

## From The Rev. R. C. MACDONALD, B. A.

*9th April*, 1866.

Chintadra Pettah.

I have heard the interesting account of some of the Hill tribes in Tinnevelly written by our senior Catechist Nullathumby read to me. He is anxious to publish it that others may take an interest in that work in which he has himself been specially interested. I heartily wish him God speed, and trust that if the book is published it may lead many to pray for those who are from the necessities of the case, out of the reach of the sound of that Gospel, which can make glad the

heart of man, revealing to him the love of Jesus to fallen sinners.

(Signed) R. C. Macdonald,
Missionary C. M. S.

---

FROM THE REV. W. T. SATTHIANADHAN.

At the request of Nullathumby Catechist, I have read his "History of the Hill Kings" very carefully twice, and think it is calculated to promote the object for which it is intended. Its object is to stir up Christians to take an interest in these poor neglected people and establish a Mission for their spiritual well being. This little history, written from his personal knowledge and observation, gives a succinct account of their origin, the peculiarity of their manners, habits and customs, their religious belief and their deep degradation and ignorance in language very simple and homely, accompanied with earnest appeals to the feelings and sympathies of Christians. The order pursued is the following. There is a piece of poetry bearing upon a certain point in their history which is followed by a kind of commentary and closed by a few practical observations calculated to interest and impress the reader. The work is not undeserving of encouragement. Any aid given by Christian gentlemen towards its publication will be of essential service to my friend and fellow labourer in the Lord's Vineyard.

John Pereira's<br>18th June 1866. } (Signed) W. T. Satthianadhan.
Missionary C. M. S.

From The Rev Joseph Cornelius.

At the request of Nulluthumby Catechist, I read over his book on the "Hill Kings." It contains much new information and both the subject-matter and the simple style in which the whole is narrated, cannot but prove interesting to its readers. The Christian spirit also which is prevelant throughout the whole of it cannot fail to awaken the sympathy of those who long and pray for the advancement of our Redeemer's Kingdom. I hope there will be no difficulty in getting it published for the benefit of native christians.

I am very well acquainted with the author and have much pleasure in testifying to his faithfulness and diligence as a Catechist.

June 21st. 1866,<br>Madras. } (Signed.) Jos. Cornelius,<br>Missionary, C. M. S.

---

To Father, Son, and Holy ghost,<br>
The God whom we adore;<br>
Be glory as it was, and is,<br>
And shall be evermore.

# CONTENTS.

இப்புத்தகம் பார்வையிட்டு திருத்தல், இங்கிலீஷ் முதலிய விஷயத்தில் கனம் - வி - தோ சத்தியநாத ஐயரவர்களும் பிரீ சர்ச்சுமிசியோன் ம-ா-ா-பரமசிவன் ஐயா அவர்களும் லண்டன் மிசியோன் பாடசாலை தலைமை உபாத்தியாயர் ம - ா - ா - நா. கொர்னேலியு பிள்ளையவர்களும்-பலவுதவி செய்தபடியால் அவர்களுக்கு நன்றி யறியுதலான வந்தனஞ் செய்கிறேன்.

தர்மசாலிகளான பலபெரியோர் உதாரமாய்ச்செய்தபொருளுதவியால் இப்புத்தகம் அச்சிட்டு பிரசுரமாயிற்று. அதற்காக அவர்களுக்குபணிவான வந்தனம் செய்கிறேன்.

அ - ந.

## விக்கியாபனம்.

---

### ஆசிரியவிருத்தம்.

பலகாலமாயெனது யிதையமதிலே எழும்
பண்பான ஆவல்தன்னைப்
பாகமாய்கிறிஸ்துமத நேசர்கள் அறியவென்
பரிவான விக்கியாபனம்
நலமானகன்னியா குமரியோடிமையகிரி
நாட்டமித் துடர்மலைகளில்
நாதனேசுக்கிறிஸ் திறவனையறியாமல்
நவையுரும் மலையர்தம்மை
பெலமானயேசுவின் மறைதனிலிசைத்துமே
பெருகியே வாழ்ந்திருக்க
பிசகின்றிசெய்வது நம்பொறுப்பென்றுமே
பெரியோர் சகாயமதினல்
தலவனேசுக்கிறிஸ் தூழியன் அ - நல்ல
தம்பியான் நிகழ்சரிதையை
தாவியேயேற்றதின் சாரமதையறியவே
தயைபுரிவீ ரெனதன்பரே.

திருநெல்வேலிநாட்டு

# மலையரசர்சரித்திரம்.

இப்புத்தகம்

அருளப்பன் நல்லதம்பி
உபதேசியாரால்

இயற்றப்பட்டது.

---

ஏசா. சஉ: கக.

வனாந்திரமும் அதின் ஊர்களும் கேதாரியர் குடி
யிருக்கிற கிராமங்களும் சத்தத்தை உய
ர்த்தக் கடவன்; கன்மலைகளிலே
குடியிருக்கிறவர்கள் கெம்பீ
ரித்துபர்வதங்களின்கொ
டிமுடியிலிருந்து
ஆர்ப்பரிப்பா
ர்களாக.

---

காப்பி — க000.

சென்னப்பட்டணம்.

ஊ புஷ்பரதச்செட்டியாரவர்களது
கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1867.

# பாயிரம்.

திருநெல்வேலியைச்சேர்ந்த நல்லூர்சேகரத்தில் நான் விசாரணை உபதேசியா யிருந்தகாலத்தில், சபையின் அறிவு விருத்திக்கென்று வெவ்வேறுவகையான சரித்திரங்களைப் பலர் எழுதி, அவைகளைக்கோர்வையாய் ஒருபுத்தகத்திற் சேர்த்து அதற்கு கல்விக்களஞ்சியம் என்று பெயர்கொடுக்கவேண்டுமென்றும், அதை நல்லூர் - பாலூர் சேகரங்களிலுள்ள உபதேசிமார் தங்கள் சபையாருக்கு வாசித்துக்காண்பித்தால் அவர்கள் பத்தியிலும் அறிவிலும் தேறுவதுமாத்திரமல்ல, மற்றும் பற்பல நன்மைகளும் உண்டாகுமென்றும், கனம்: உல்லியம் - கிளார்க் ஐயரவர்கள் உத்தரவுகொடுத்தார்கள்; அதின்பேரில் நானும் இதை எழுதினேன்.

மலையரசருடைய பரிதாபத்தையும் அவர்களுடைய நிற்பந்தமான நிலைமையையும், மறுமையையும், கல்வியைப் பற்றிய அறிவீனத்தையும், நான் அறிந்தமட்டில் தெளிவாயெடுத்துக்காண்பித்தால் அவர்களின் காரியஞ் சகலருடைய மனதிலும் நன்ருய்ப்படுமென்று என்மனதில் எண்ணமுண்டானபடியினாலும், அவர்களை இரட்சிப்பின் மார்க்கத்தில் இழுத்து நல்லறிவில் விருத்தியடையச்செய்யவேண்டுமென்கிற ஆசை எனக்கு மிகுதியாயிருந்தபடியினாலும், அதற்கு வேண்டியசக்தி எனக்கில்லாமையால் இவ்விதமாயாவது ஒலமிட்டால் தர்மசாலிகளான உதாரவான்கள் பலர் தூண்டப்பட்டு இதுவிஷயத்தில் ஏற்பட்டுக் கொள்வார்களென்றும், அச்சமயத்தில் நானும் அவர்களோடுசேர்ந்து என் ஆவலை நிறைவேற்றிக் கொள்ளலாமென்றும், என் உள்ளத்தில் ஆசையிருந்தபடியினாலும் இந்தசரித்திரத்தை கஅடுகஅ பங்கு பங்காயெழுதி கிராமங்களுக்கு அனுப்பி வாசிக்கப்பட்டுவந்தது. ஆனால் கையெழுத்தாயல்ல அச்சிட்டு எங்குமுள்ள சகலகிறிஸ்தமான பெரியோருக்கும் தெரிவிக்கவேண்டுமெ

ன்கிற ஆசை என்னில்மிகுதியாயிருந்தாலும், பொருளுதவி முதலிய பலதடைகளினலே அந்தநோக்கம் நிறைவேறு தற்கு இடமில்லாமற்போயிற்று. ஆண்டவரே! உமதுவிஷயத்தில் எடுத்தகாரியம் இப்படியாயிற்றே, என் யோசனையை வாய்க்கச்செய்து என்னுடைய ஓலந் தேசமெங்கும் எட்டி என்நோக்கம் உமதுமகிமைக்காக நிறைவேற இசைந்த அன்பர் எழும்பாரோ! என்று செபத்தில்செய்த உடன்படிக்கையோடு காத்திருக்கையில், 1864 ல் மோரீஸ்தீவிலிருந்து சென்னபட்டிணம் வந்திருந்த உத்தமசினேகிதருந் திருச்சபையின் உபகாரியுமாகிய ஓர்பத்திமான், மலையரசர்கள் பேரில் கவலைகொண்டு அவர்களுடைய நிற்பந்தநிலமைக்காக பரிதபித்து இக்காரியத்தை அதிசீக்கிரமாக சகலருக்கும் பிரச்சித்தஞ்செய்வது நலமென்று மெய்ப்பொருள்விளங்க, கைப்பொருளீந்து இன்னமுந்தன்னலியன்ற சகாயஞ்செய்வேனென்று என்னை உற்சாகப்படுத்தி எழுப்பிவிட்டதின்பேரில், நான் திடன்கொண்டு இச்சிரியசரித்திரத்தை யச்சிற்பதிப்பிக்கத்துணிந்தேன்.

ஆதலால், திரியேகதேவனை முன்னிட்டு நிற்பாக்கியமுள்ள மலையரசரின் சரித்திரவரலாறுகளை நான் அறிந்தமட்டில் இதனடியிற் சுருக்கமாய் எடுத்துக்காட்டுகிறேன்; அதற்கு பரிசுத்தத் தேவாவியானவர்போந்த சகாயம்செய்வாராக.

இப்புத்தகத்தை அச்சிட்டு பிரசுரம்செய்ய எத்தனித்ததில் அனேகதடைகளும், பலருடைய எண்ணத்தில் வெவ்வேருன தோற்றங்களும் காணப்பட்டது. ஆனல் என் குலதெய்வமாகிய இயேசுநாதசுவாமி சகலத்தையும் நிவர்த்தியாக்கி, தமது திருநாமத்துக்கு புகட்சியாய்த் துவக்கின இக்காரியத்தை ஜெயமாய் முடியப்பண்ணினதர்க்காக அவருக்கும் பி

# பாயிரம்.

தாவுக்கும் பரிசுத்த ஆவிக்கும் சதாகாலங்களிலும் துதியும் தோத்திரமும் உண்டாவதாக.

கவனிப்பு—இப்புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறபாடல்கள் எல்லாஞ் சித்தாதிகள்பாடற் சந்தமாக மிகவும்வெள்ளையாய்ச் செய்யப்பட்டிருக்கின்றன

கற்றறிந்த பெரியோராகிய இலக்கண இலக்கிய வித்துவான்கள் பலகுறைசொல்லுதற்கேதுவிருக்கும். ஆனால் தேவன் எனக்குக்கொடுத்த அறிவின்படி அவருடைய நல்லநாமத்துக்குத்துதியும் மகிமையும் உண்டாகவும், அவருடைய மாட்சிமைசிறந்த இராசரீகம் எங்கும்பரவவும் வேண்டுமென்றுச் செய்திருக்கிறேன். இதைச் சகலருந்தயவாய் அங்கிகரித்து குற்றம்நீக்கி நற்பொருளைக் கவனித்துக் கிறிஸ்துவின் இராச்சியம் எங்கும் பரவவேண்டுமென்கிற நன்னோக்கத்துடனே வாசித்து, குழந்தைகளுடைய மழலைச் சொற்கேட்டு தாய் தந்தையர் சந்தோஷிப்பதுபோல சந்தோஷப்படும்படியாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இதனடியிலே எழுதப்பட்டிருக்கிற பாடல்களையும், அவைகளின் கீழ்வரையப்பட்டிருக்கிற வாசகங்களையும், பாட்டும் உரையும்போல் பாவிக்கவேண்டியதில்லை. அப்பாடல் வாசிப்போரின் எழுப்புதலுக்கென்று மாத்திரஞ் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனபடியினாலே இதிற்சொல்லிய நல்யோசனைகளுக்கு உங்கள் இருதயங்களைச் சாய்த்துச் சொற்சிறப்பையல்ல, பொருள்சிறப்பையே கவனிக்கும்படியாய் பிரார்த்திக்கிறேன்.

௲௮௱௯௰ ௵ அக்டோபர் ௴ ௨௫௳<br>
பிளாக்டவுன்<br>
சென்னைநகரம்.

இப்படிக்கு<br>
கிறிஸ்துவின் பணிவான ஊழியன்,<br>
அ-நல்லதம்பி உபதேசி,<br>
சர்ச்சுமிசியோன்.

# பொருள் அட்டவணை.

அதிகாரம். பக்கம்.

# பொருள் அட்டவணை.



பொருள் அட்டவணை முற்றிற்று.

---

இம்மானுவேல்முன்னிற்க.

---

# HISTORY OF THE HILL KINGS OF TINNEVELLY.

# திருநெல்வேலி நாட்டு மலையரசர் சரித்திரம்

---

காப்பு.

## விருத்தம்.

சீர்பெறுங்கிறிஸ்துநாதர்திருவடிவணங்கிப்போற்றிப்
பார்தனில்வசிக்குமாந்தர்பற்பலஅறிவாற்றேறக்
கார்தனையகற்றுங்கல்விக்களஞ்சியமதனைச்சாற்ற
நேர்மிகும்பரிசுத்தாவினித்தியன்காப்புத்தானே.

---

வெண்பா.

ஆதியந்தமில்லாஅல்பாஓமேகாவுன்
பாதமலர்தஞ்சமென்றேபணிவாய்ப்—பேதமில்லா
மலையரசர்நற்சரிதைவண்மையாய்க்கூறுதற்குத்
தலைமைக்கிறிஸ்தேசரண்.

# விக்கியாபனம்.

---

## கட்டளைக்கலிப்பா.

(க) ஆதிபாவ மகற்ற இப்பூவிலே
   ஆணியாலே அறையுண்ட நாதனே!
சூதபாதக மேரும் பழிஞரை
   சுத்தபாத மடையவென் றேமறை
ஓதுவேதியர் உள்ளத்தை எவிரின்
   உன்னதப் பலனேடைவர் பூமியி
வேதஓசை விளம்ப அருளுவீர்
   விண்ணவா மிருவித்துக தேவனே

(உ) யேசுநாத ரருளை யடைந்துமே
   ஏக மாய உலகிலிருப்பரோ!
ஈசனேடு மறை யறியாமலே
   ஈனப் பேயைவணங்கிப் படிப்பற்று
தேசச்சிரும் திருத்தமு மின்றியே
   தீயசிந்தைக ளுள்ள அரயரை
நாசகால பசாசுவிட் டன்பனை
   நாடிவாழ முயல்வது நன்மையே.

இஃது

வேதமுத்து ஆபிரகாம் உபதேசியர்ரால்
செய்யப்பட்டது.

# I. ORIGIN OF THE HILL KINGS AND THE GRANDEUR OF THEIR DWELLING PLACE.

## க - அதிகாரம்.

### மலையரசரின் பூர்வோத்திரமும், அவர்கள் வசிக்கும்ஸ்தலமகிமையும்.

---

அகஸ்தியர்பாடற்சந்தம்.

சீர்சிறந்தஆசியாகண்டத்துள்ளே
திறமானதென்னிந்துதன்னைச்சேர்ந்த
பேர்சிறந்தவளர்பாண்டியரசனாட்டில்
பெருமையுள்ளநெல்வேலிமேல்பக்கத்தில்
பார்சிறந்தபருவதங்களோடேவாழும்
பாங்கானமலையரசர்வளமைசொல்வேன்
நேர்சிறந்தஆவிதுணைவேண்டியிப்போ
நேர்மையுள்ளகிறிஸ்தவனேநெறியாய்க்கேளே

பூர்வோத்திரம்

ஆசியாக்கண்டத்தின் தென் இந்து தேசத்தில் இருக்கின்ற பாண்டியநாட்டைச்சேர்ந்த திருநெல்வேலிச் சீர்மையின்மேல் பக்கத்தில், நீண்டு அகன்று இருக்கப்பட்டாநின்ற (Western Ghauts) மேல்காத்மலைகளில், பற்பலகோத்திரத்தாரான காட்டுச்சனங்கள் வாசஞ்செய்கிறார்கள். இந்தச் சனங்களுடைய தற்காலச்சீமாக்கவனிக்கில், புராதனம்

நமதுதேசத்துக்கு வலசைவாங்கினவர்களால் காடாந்தரங்களுக்குத் துரத்தப்பட்டவர்க ளிடத்திலிருந்து இவர்கள் உற்பத்தியானவர்களாய்த் தோன்றுகிறதுமன்றி, அவர்கள்பேசும் பாஷையின் கொச்சைமொழிகளும் அப்படிப்பட்டவர்களென்றே சாட்சியிடுகின்றன.

ஸ்தலமகிமை.

அவர்கள் வசிக்குங்காவுகள், இன்பந்தரும் பூங்காவனம்போலிருக்கும். அவர்கள் இருக்கும் இடங்களைச் சுற்றிலும் அனேக நேர்த்தியான ஆறுகளும், ஓடைகளும், பற்பல அருவிகளும் பாய்வதினல், அவை நீர்வளம் பொருந்திய மகிழ்ச்சிக்கேற்ற, சோலைபோலிருக்கும்.

அன்றியும், மேகமண்டலத்தை அளாவத்தக்க உயர்ந்த விருட்சங்கள் அடர்ந்தசோலைகளுந், துஷ்டமிருகங்களால் தங்களுக்கு அபாயம் நேரிடாதபடிக்குத் துருகம்போன்ற உச்சிமலைகளுந், தண்ணீர்நிறைந்த பொய்கைகளுங், குளிர்ந்தகாற்றும், இனியகீதம் ஒலிக்கின்ற காவுகளுமாயிருக்கப்பட்ட ஸ்தானங்களில், தங்கள் குடும்பங்களுக்குப் போதுமான சிறிய குடிசைகளைக்கட்டி அவற்றின்பக்கத்தில் போஜனத்துக்கேற்ற தகுந்த பதார்த்தங்கள் விளையுந் தோட்டங்களை யுண்டுபண்ணி மகா சவுக்கியமாய் அங்கிருந்து வாழ்ந்துவருகிறார்கள். ஆ! பரமதேவனாகிய இயெகோவாவின்செய்கை எவ்வளவு பிரமிக்கத்தக்கதாக இருக்கின்றது.

சங். ௱சு-அ-௰க-௰உ-௰௩-௰எ-௰அ-ல். "மலைகள்வளர்ந்து பள்ளத்தாக்குகள் நீர் அவைகளுக்கு அஸ்திபாரப்படுத்தின இடமாய்த்தாழ்ந்தன. மலைகளுக்கு நடுவாய் ஓடப்பள்ளத்தாக்குகளில் ஊற்றுகளைவர விடுகிறீர். அவைகள்வெளியின் சீவன்களுக்கெல்லாந் தண்ணீர்காட்டும் அங்கே காட்டுக்கழுதைகள் தங்கள் தாகத்தைத் தீர்க்கும். அவைகளின் ஓரமாய் ஆகாயத்தின் பறவைகள் சஞ்சரித்துக் கிளைகளுக்குள்ளிருந்து சத்தங்காட்டும். பருவதங்களுக்குத் தம்முடைய மேல்வீடுகளிலிருந்து தண்ணீர் இறைக்கிறார். உமது கிரியைகளின் பலனாலே பூமிதிருப்தியாகும். அங்கே குருவிகள் கூடுகட்டும், பாய்மர விருட்சங்கள் கொக்குகளின் குடியிருப்பு, உயர்ந்த பருவதங்கள் காட்டாடுகளுக்கானது, கன்மலைகள் குழிமுயல்களுக் கடைக்கலம்" என்று சொல்லியிருக்கிறது.

இம்மலைகளையும் மற்றும் அவ்விடத்தில்த் தோன்றப்படும் பற்பல சிருட்டிகளையும் நோக்கும்போது, அவைகளின் அதிசயவிபரங்கள் மனிதர்நாவினால் வர்ணித்துமுடியாது. இப்படிப்பட்டகாவில் வசிக்கும் மலையரசரின் சரித்திரவரலாறுகளை யான்எழுதிவரும்படிக்கு, தேவாவியானவர் தமதருள்மழையை என்பேரில் பூரணமாய்ப்பொழிந்தருள பரம சற்குருவாகிய கிறிஸ்து இயேசுவே எனக்கருள்செய்வாராக.

## II. TIGER AND OTHER ANIMALS.

---

## உ-அதிகாரம்.

### வேங்கைமுதலிய வனஜெந்துக்கள்.

நெடியதொருகிரிதனிலேசுகித்துவாழும்
நேர்மையுள்ளஊர்விலங்கோபலவுமுண்டு
கொடியதொருவல்லியம்வேழஞ்செய்யுங்
கோஷ்டமதைக்கூறஎன்வாய்கூசுதப்பா
சடுதியதோரிடிவந்துதாக்குமாப்போல்
சகலரையுந்தயங்கிமிகவாட்டிவிக்கும்
படுத்தியதோரித்துன்பம்பலவும்நீங்க
பண்பாய்நற்கிறிஸ்தவனேபரிந்துபாரே

பலத்த அரணாகிய பருவதங்களின் மத்தியில் துருசம்போன்ற உயர்ந்த குன்றுகளின்மேல் தங்கள்வீடுகளைக்கட்டவேண்டிய காரணம் ஏனென்றால், அவர்களால் "பூச்சி" என்று சொல்லப்படுகிற கடுவாய் அல்லது வேங்கையும், யானையும்வந்து அவர்களுக்கு யாதொரு அபாயஞ் செய்யாதபடிக்குத்தானே.

மிருகங்கள்.

அந்தக் காவனத்திலே, பலசாதியான மிருகங்களுண்டு. அவையாவன:—யானை, வேங்கை, கொடிப்புலி, வரிப்புலி, சிறுத்தை, கழுதைக்குடத்தி, பன்றி, கூரான்பன்றி, முட்பன்றி, கரடி.

சவுதலைக்கரடி, காட்டெருமை, காளைமாடு, பசுமாடு, செந்நாய், நரி, குழிநரி, முதலிய துஷ்டமிருகங்களும், கலைமான், வெளிமான், புள்ளிமான், வரையாடு, சடம்பை, முதலிய பலசாதுவான மிருகங்களுமாம்.

சற்பங்கள். அன்றியும், மலைப்பாம்பு, பெரும்பாம்பு, கருங்கோழிப்பாம்பு, பெருஞ்சாரை, கரியவழலை, காட்டனலி, கூட்டனலி, நீரனலி, என அனந்த சர்ப்பங்களுமுண்டு. இப்படி எண்ணிலடங்கா விஷச்செந்துக்களும் துஷ்டமிருகங்களும் அவ்வனத்தில் சஞ்சாரஞ்செய்தபோதிலும் வேங்கையைப்போ

வேங்கை. லத் துன்பஞ்செய்யத்தக்க செந்துவேறொன்றில்லை. ஆகையினாலே அதின் பேரை முதலாய்ச்சொல்லஅஞ்சி விஷபேதிக்குக் "கசப்பு" என்றுசொல்வதுபோல இதற்குப் "பூச்சி" யென்று சொல்லுகிறார்கள்.

இத் துஷ்டமிருகம் மனிதரை மோசஞ்செய்வதில் வெகுயூகமுள்ளது. மற்ற மிருகங்களால் ஏகதேசம் அபாயம் நேரிடுமேயன்றி வேறில்லை. வேங்கைக்கு மூலாக்கினியெழும்பும்போது, அதின் கொர்ச்சிப்புப்பயங்கரமாயிருக்கும். அது எழும்பித் தனதுவாலைமுறுக்கி, நிலத்திலடித்துக் கொர்ச்சிக்குஞ்சத்தத்தினால் அக்காவுக்குள்ளே மலைகள் குலுங்கி, அதிருகிற பாவனையாயிருக்கும். அச்சமயத்தில் மரக்கிளைகளிலுள்ள, மந்திகுரங்குகளும், பூமியில் நடமாடுகிற காட்டாடு, மான்,

கடம்பை, முதலியமிருகங்களும், இராசாளியைக்கண்ட கொக்குபோல, கீழேவிழுந்து உதைத்துக்கொள்ளும். ஓடவேண்டுமானல் காலோடேகால் பின்னிக்கொண்டு, தட்டுக்கெட்டு தள்ளம்பாறிக்கீழேவிழும். உடனே இத்துஷ்டமிருகம் ஆரவாரத்துடன்சமீபித்துத், தனக்கிஷ்டமானதைப்பிடித்து அதின் குரல்வளையைக்கடித்து இரத்தபானம் பண்ணியபின்பு, அதின்மாமிசத்திலும் இஷ்டமானமட்டும் போசனஞ்செய்யும். இம்மிருகங்களுக்கு மனிதமாமிசமே அதிகப்பிரீதியானதால், சனங்கள் அங்கும் இங்கும் திரிந்துவேலைசெய்யும்போதும், பெண்கள் தண்ணீருக்கேகும்போதும், கெருடன்கோழிக்குஞ்சை உராஞ்சிப்பிடிக்கும் பாவனையாய்ச் செந்தூக்காக எடுத்துக்கொண்டுபோய்த் தன்புடையில்வைத்துப் பட்சிக்கும். அப்படியே, மாடன் என்கிற மலையரசன் பெண்சாதி தண்ணீர்எடுக்கும்படிபோன சமயத்தில், தண்ணீர்த்துறையில் நின்று அவளைத்தூக்கி எடுத்துக்கொண்டுபோய்ப் பட்சித்துவிட்டது.

அன்றியும், புருஷர்கள் வேலைகளைச்செய்து இளைப்பாறும்படி கீழே உளுக்கார்ந்திருக்கும்போதும், கவனத்தாழ்ச்சியாய் வேலைகளைச்செய்து கொண்டிருக்கும்போதும், உபாயமாய்ப் பின்னுகவந்துபாய்ந்து, வாயினுற்கவ்வித் தன்கால்களால்த்தூக்கி முதுகின்மேற் போட்டுக்கொண்டுபோய்த் தன் இருப்பிடத்தில் வைத்துப் பட்சிக்கிறதுமுண்டு. வேங்கையின் அபாயத்தைத் தெ

ளிவாய் அறியும்படியாக நான் அறிந்த பலவிசேஷங்க ளில் இதனடியில் இரண்டு சங்கதிகளைமாத்திரம் எடுத் துக் காட்டுகிறேன்.

1. கடுவாய் என்று சொல்லப்படுகிற வேங்கையினு டைய உபத்திரவம் மிகுதியாயிருந்த ஓர்காலத்தில், வா கைக்குளம் மன்னார்கோவிலிலிருந்து ஓர்மறவன் மெத் தத்துணிவோடு மற்றொருவனைத்தனக்குத் துணையாகக் கூட்டிக்கொண்டு, கடுவாய்வந்தால் என்கோடரிப்புடங் கினால் அதின்மூளைசிதற உடைத்துப்போடுகிறேனென் று மரம்வெட்டும்படியாக மலைக்குள்ச்சென்று இருவ ரும் சமீபித்த வெவ்வேறு இடங்களில் மரங்களைவெட் டினார்கள். இப்படி அவனவன் தனித்து வேலைசெய்து கொண்டிருக்கையில், தைரியசாலியாகிய மறவன் இளை ப்பாறும்படி கீழேஉளுக்கார்ந்து, தாம்பூலம்போட்டுக் கொண்டு, உல்லாசமாய்ப்பேசிக்கொண்டிருக்கவே, ஒரு தந்திரமுள்ள வேங்கையானது பின்னாலே மெதுவாய் வந்து, வீரம்பாராட்டியமறவனைச் செந்தூக்காய்க் கௌ விக்கொண்டு போகும்போது, பிடிபட்டமறவன் பக்கத் தில்நின்ற தன்தோழனைப்பார்த்து, அடே! அண்ணே, என்னைக்கடுவாய் பிடித்துக்கொண்டுபோய் விட்டது! என்று என்தாயாருக்குத் தெரிவிக்கவேண்டும்," என மகாதுயரசத்தமாய்க்கூவி, அத்துஷ்டமிருகத்துக்கு இரையாய்ப்போனான்.

2. அம்பாசமுத்திரத்துக்கடுத்த பட்டியில் ஒரு அம்பட்டனிருந்தான். அவனுக்குக் கண்தெரியாது, அவன் பனைநாரினாலே உரிகள்செய்து விற்கிறது; அவனுடையபெண்சாதியும் மகனும் மலைக்குப்போய் விறகு வெட்டி விற்கிறது. இப்படி மூவருமாக இவ்விதசீவனஞ்செய்துவருகையில், வழக்கப்படித் தாயும் மகனுமாகச்சேர்ந்து, சிவந்திபுரமலையில் விறகுவெட்டப்போனார்கள். தாய், முந்தி ஒரு கட்டுவிறகு தயார்செய்து, களத்திற் கொண்டுபோய்வைத்து வரும்படி மகனையனுப்பிவிட்டு, வேறொருகட்டு தயார்பண்ணப் போகையில், ஒரு துஷ்டக்கடுவாய் இவளைப்பிடித்துக், குரல் வளையைககடித்து, இரத்தபானஞ்செய்து, தொடையிலுள்ள மாமிசத்தைத்தின்றுகொண்டிருக்கையில், கீழே போனமகன் திரும்பி, தாயிருந்தஇடத்தில்க் காணமல்த் தேடி தாய்வைத்திருந்த கத்தியையும், அவ்விடத்தில் ஒழுகிக்கிடந்த இரத்தத்தையுங்கண்டு கூக்குரலிடவே, அதுகேட்டு, பலசனங்கள் கூடிவருகிறதை இந்தத்துஷ்டமிருகம்கண்டு ஓடிப்போய்விட்டது. அன்று இரவு அதைச்சுடும்படியாக சனங்கள் பிரயத்தனஞ்செய்து, சவத்தைச்சுற்றிக் காத்திருந்தும், அத்திருட்டுக்கடுவாயானது வராமையால் மறுநாள்காலை அவளுடையமீதி மாமிசத்தை எடுத்து அக்கினித்தகனஞ்செய்து வீட்டுக்குத்திரும்பினதாக, நான் சிவந்திபுரம் சபைவிசாரணைக்குப்போயிருந்தகாலத்தில் இந்தத்துயரமான சங்கதி

யைக்கேள்விப்பட்டேன். இன்னஞ்சொல்லவேண்டுமா னால் ஆயிரக்கணக்கான திருஷ்டாந்தங்களுண்டு. ஆனா ல்இவ்விரண்டுமேபோதும்.

யானை.

வேழம் என்கிற யானையினால் வருந்துன்பம் இவ்வ ளவு கொடிதாயிராது, சிலவேளைகளில் அம்மிருகமானது மலையரசருடைய தினித்தோட்டங்களை அழித்து, வாழை, கிழங்கு, தினை, நெல், முதலியவைகளைப் பிடுங்கி அழித்தும், கூடுமா னால் வீடுகளையும் மோதிப் பிடுங்கி எறியும். ஏகதே சந்தனக்குமுன் எதிர்ப்பட்டவர்களையும் பிடித்துக், கிழித்து, மிதித்துச்சமட்டித் தனது தும்பிக்கையால்த் தூக்கித்தூரஎறிந்துவிடும். இப்படிப்பட்ட துஷ்டமிரு கங்கள் வாசஞ்செய்யுங் காவனத்தில் மலையரசர் பூர்வா பூர்வமாயிருந்து வாழ்ந்துவருகிறார்கள்.

இப்படியே, காவனமாகிய பூலோகத்தில் வசிக் குஞ் சர்வ சனங்களையுங் கெடுத்தழிக்க வகை தேடுகிற கொடிய சத்துருவாகிய பசாசானவன் மகா மூர்க்க வெறியாயிருப்பதினாலே-கபேது. ரு. அ-ல், "தெளிந்த புத்தியுள்ளவர்களா யிருங்கள், விழித்திருங்கள், என் னத்தினாலெனில் உங்கள் எதிராளியாகிய பசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம்போல எவனையும் விழுங்கவேண்டு மென்று வகைதேடித் திரிகிறான்." என்றுசொல்லியிரு க்கிறது.

அப்படியிருக்க, மலையரசர் மலைப்புலிக்குத் தப்பி னலும், ஐயோ! இந்தத்துஷ்ட சிங்கமாகிய பசாசானவ னுக்குத் தப்பாமல் இரையாய்ப் போகிறார்களே! அவர் களை இரட்சித்து மீட்பது எவ்வளவு பெரிய தர்மம்.

## III. INDEPENDENCE OF THE HILL KINGS AND THE DISTRICTS THEY INHABIT.

---

### ௩ - அதிகாரம்.

---

மலையரசரின் சுயாதீனமும்
அவர்கள் குடியிருக்கும் ஊர்களும்.

கொச்சகம்.

நன்னயஞ்சேர் விந்தையுள்ள நல்லகிரிதன்னரனாய்
என்சொல்வேன் அரிதனையே இன்பமடமாளிகையாய்
வின்னமுள்ள ஊர்விலங்கை வீரர்படைபோல்நடத்தி
வன்னபட்சி தன்னொலியால் மகிழுற்றிருப்பார்காண்

சுயாதீனம்.

மலையரசரென்ற பெயரை இவர்கள் பெற்றிருப்பதினா லே, இராஜாக்களுக்குரிய நாடுநகர்,ரதகெ ஜதுரகபதாதி களெல்லாம் இவர்களுக் கிருக்கவேண்டியதாச்சுதே, அப்படி யுண்டோவென்று இ தைவாசிப்போர் சிந்திக்கவேண்டியதாய் வரும். அவர்க ளின் அந்தஸ்துக்குந் தற்கால ஸ்திதிக்குந் தக்கதான

பாக்கிய பவுசுகள் அவர்களுக்குண்டென்று ஓர் வகை யிற் சொல்ல ஏதுவுண்டு. எப்படியெனில், மதிள்போல் சுற்றிலும் இருக்கப்படாநின்ற பர்வதங்களைக் கோட்டை கொத்தளமாகவும், இதின் மத்தியில் தாங்கள் வசிக்குங் குன்றுகளை உன்னதமான அரண்மனைக்குரிய துருக மாகவும், அவற்றிலுள்ள விருட்சமுதலிய சோலைகளை மாடமாளிகை கூடகோபுரமாகவும், அவைகளில் வசிக் கும் பட்சிமுதலிய பறவைகளை இன்பந்தருகின்ற கீத வாத்தியரென்னும், வாசல் வித்துவான்களாகவும், அம் மலைகளில் பரவி இருக்கப்படாநின்ற மிருகசாதிகளை, சதுரங்கப் படைகளாகவும், யுத்தவீரருமாகப் பாவித்து வேற்றரசர்களுக்கு இறைபகுதி ஒன்றுங்கொடாமல் சு யாதீனராயிருந்து சுகித்து வாழ்கிறார்கள்.

இப்படிப்பட்ட சுயாதீனத்தை, மேன்மைபொருந் திய அரசியாகிய விக்ட்டோரியா இராக்கினியவர்கள் இக்காட்டுசனங்களுக்குக் கொடுத்திருந்தும், இவர்கள் மலையாளதேசத்தின்அரசனைத் தங்கள் "பொன்னுந் தம் பிரான்" என்று பெருமையாய்ப் போற்றிக் கனமாய்ப் புகழ்வார்கள்.

குடியிருக்கும் ஊர்கள்.

மேற்கூறிய சுயாதீன மலையாசனைச் சிலர்போய்ச் சந்திக்கும்படியாய் ஒருவேளை விரும்பு வார்கள். ஆனதால், அவர்கள் வசிக்கும் நகரங்களை இதனடியில் எடுத்துக் காட்டு

கிறேன். தாழையூத்து, வழுக்கம்பாறை, கொசுவோடை, கொடைமாடி அருவி, இஞ்சித்தாவளம், பட்டங்காடு, ஐந்தலை அருவி, அல்லது பாம்பன் அருவி, கண்ணாடிப் புல்த்தோட்டம், வயக்காபுல் தோட்டம் முதலிய பலஸ்தானங்களுண்டு. ஒரு இடத்திலிருந்து வேறிடத்திற்குச்செல்லவேண்டியதாயிருந்தால், நன்றாய்ப் பழகி வழக்கப்பட்டவர்கள் தவிர மற்றெவர்களும் தாராளமாய்ச் செல்லக்கூடாது. இதிற் பழகினோர் முதலாய், நூதனமாயுள்ள வேறிடங்களுக்குச் செல்லவேண்டுமானால், தாங்கள் செல்லும்பாதைகளில் கொப்பு அல்லது குழைகளை நருக்கிப் போட்டுக்கொண்டு போவார்கள். கொஞ்சமாகிலும் வழிபிசகித் திசைதப்பினால், மீண்டும் தங்கள் கிரகம் வந்து சேர்வது மகா அரிதான காரியம். ஒருவேளை துஷ்ட மிருகங்களுக்குப் பட்சணமாக வேண்டுவதாயும் நேரிடும்.

கவனிப்பு. மலைகளை, விடுசட்டும் ஸ்தானமாகவும், விருட்சங்கள் மனிதர்தாபரித்து ஒதுங்கத்தக்க அடைக்கல ஸ்தானம் அல்லது இளைப்பாறும் கிரகமாகவும் பாவித்துக்கொள்ளலாம். உன்ன. உ: ௰உ-௰௪-ல் சொல்லியபடி, புஷ்பங்கள் பூமியிற் காணப்படுகின்றன. குருவிகள் கூவுங்காலஞ் சேர்ந்து,காட்டுப்புறாவின் சத்தம் நமது தேசத்திற் கேட்கப்படுகின்றது. கன்மலையின் வெடிப்புகளிலும்,செங்குத்தின் ஒதுக்கிலுந்தங்குகிறஎன் புறாவே உன் உருவை எனக்குக் காண்பி·

உன் சத்தத்தை எனக்குக் கேட்கப்பண்ணு. ஏனெனில் உன்சத்தம் இன்பமும் உன் உருவம் அழகுமாயிருக்கின்றன, என்பதின்படி குருவிகளின்பொதுவானபலசப்தங்கள் ஒன்றாய்ச்சேர்ந்து காதில் தொனிக்கும்போது இன்பமாய் இருக்கும், என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் மிருகாதிகளைச் சேனையென்றும், யுத்த ஆட்களென்றுஞ் சொல்லக்கூடிய தெப்படியென்று சிலர் ஆட்சேபிப்பார்கள். வானமும் பூமியும் அதிலடங்கிய சகல செந்துகளும் தேவனுடைய வல்லமையை வெளிப்படுத்தி மனிதர்களின் விருப்பத்திற்கு உதவத்தக்க சேனை என்பதற்குச் சந்தேகமில்லை. தேவன் இஸ்ரவேலரை இரட்சிக்கிற விஷயத்தில் தவளை, வண்டு, பேன், வெட்டுக்கிளி இவைகளைச் சேனையாக அனுப்பினார். உ. மோசே. அ. அதி. ௧௦. அதி. ௧௩—௧அ. சிம்சோன் முந்நூறு நுழைநரிகளால் பெலிஸ்தியருடைய வேளாண்மைகளையெல்லாம் அழித்தான். நியா. ௧௫. ௪—௫. எலிசாத்தீர்க்கதரிசியைத் தூஷித்த பிள்ளைகளில் நாற்பத்திரண்டு பேரையும், இரண்டுகரடியை அனுப்பிக் கொன்றுபோட்டு அவன்புத்தி கற்பித்தான். உ. இரா. உ: உ௩, உ௪ அன்றியும், யோவேல். உ. ௪—௧௧. வரையும் பார்ப்பீர்களே யாகில், வெட்டுக்கிளியின் சேனை எத்தனை வீரமும் பராக்கிரமமுமுள்ள சேனையென்று தெளிவாய்த் தோன்றும். ஆகையால், சேனைகளுடைய கர்த்தரால்ச் சிருட்டிக்கப்பட்ட சகல பொருட்களும் அவர் தமக்

கும். அவருடைய கிருபையால் மற்றுஞ் சிருட்டிகளுக்கும் சேனையும், பற்பல விஷயங்களில்சகாயஞ்செய்து ஆதரிக்கின்ற காவலர்களுமாயிருக்கும்படிசெய்திருக்கிறார்.

## IV. THE NAMES OF THEIR TRIBES: AND THEIR LANGUAGES.

---

### ச-ம் அதிகாரம்.

அவர்கள் கோத்திரங்களும் அவர்கள் பேசும் பாஷைகளும்.

பாசமதாய் மலைதனிலே வசிக்குமந்த
பத்தமுள்ள மலையரசர் பழிஞரென்பேர்,
நேசமதாய்ப் பேசுகின்ற பாஷையப்பா
நேர்மையுள்ள தமிழு மலையாளமோடு
வாசமதாய்க் கலந்திருக்கும் பாஷையல்லால்
மற்றபடி சுத்தமலை யாளமல்ல,
வேஷமதா யித்தரையில் சுகித்துவாழும்
விந்தையுள்ள கிறிஸ்தவனே விளம்புவேன்.

இன்பந்தருகின்ற சோலைகளுள்ள மலைக்காவுகளில்சஞ்சரிக்கின்ற மலைவாசிகளின் வருணத்தார்,

கோத்திரம். மலையரசனென்றும்,மலைப்பழிஞனென்றும், மலைக்குறவனென்றும், மன்னாக்களென்றுந், தொதுவனென்றும் பின்னும் பலபேர்களால் அழைக்கப்படுகிறார்கள்

இவர்களில் சிங்கம்பட்டி, பாவநாசம், என்னும் இவ்வி டங்களில் மலையரசர் மலைப்பழினர்களும், செங்கோட் டைச் சேகரத்தில் மலைக்குறவர்களும், புளியங்குடி, வா சுதேவ நல்லூர் மலைகளில் மன்னுக்களும், இப்படியே பொதிகை மலையின் மற்ற தொடர்ச்சி மலைகளில் பின் னும் பலசாதியாரும் வாசஞ்செய்கிறார்கள்.

ஆனால் நான் மலையரசனையும் அவர்கள் காரியங்களை யுஞ் சற்றேதெளிவாய் அறிந்திருப்பதால், அவர்கள்வர லாறுகளைமாத்திரம் இப்புத்தகத்தில் எடுத்துக்காட்டுகி றேன்.

அவர்கள் பேசும்பாஷை.

அதாவது அவர்கள் பேசும்பாஷை மலையாளப்பா ஷை யென்னப்பட்டாலும், அதுசுத்த மலையாங் கிரந்தமாயிராமல், மலையாள மூந் தமிழுங் கலந்திருக்கும். இவ்வி ரண்டு பாஷையில் ஒன்றைமாத்திரந் தனிமையாய்ப்பேசி னல் அவர்களுக்குப் பொருள்விளங்கமாட்டாது. ஏனெ ன்றால் அவர்கள் உள்நாட்டிலிருந்து பிரிந்த மலைவா சிகளாயிருப்பதுமாத்திரமல்ல, நற் கல்வியைவேண்டா மென்று விலக்குவதினாலேயும், அவர்களது சொந்தப்பா ஷையே அவர்களுக்குத்தெரியாமல் நாகரீகமற்ற கொச் சைமொழிகளைச் சிறப்பற்றவிதமாய் உச்சரிக்கிறார்கள். அப்: ௨: எ. "பேசுகிற இவர்கள் எல்லாருங் கலிலே யர் அல்லவா?" மத்:௨௬.௭௩. உன்பேச்சு "உன்னைக்காட் டிக்கொடுக்கிறது." என்றவாக்கியப்படி இவர்களின்வார் த்தையே அவர்கள் பேதமையை வெளிப்படுத்துகிறது.

## V. THEIR RULERS.

## ரு. அதிகாரம்.

அவர்களைநடத்துந் தலைவர்கள்.

அன்பாகப்பொதிகைமலைதன்னில்வாழும்
ஆனதொருமலையரசர்கூட்டந்தன்னை
நண்பாகநடத்திவருங்காணியென்ற
நல்லதொருதலைவனுக்குள்ளடங்கிநின்று
வன்பாகவாதுடன்பொய்சூதுமின்றி
வணங்கியவர்சொல்வருதிதப்பமாட்டார்
தென்பாகஅல்லநட்பாய்நடத்தியாளுஞ்
சித்திரத்தைக்கிறிஸ்தவனேசீராய்ப்பாரே.

இந்தச்சரித்திரத்தில்ச்சொல்லப்படுகிற மலையரசர்கள், அகஸ்தியர் வசித்தாரென்று இந்துக்களால் பெரும்பாலுஞ் சொல்லப்படும் ஸ்தானமாகிய பொதிகைமலையின் அடிவாரங்களிலே முக்கியமாய்வாசஞ்செய்கிறார்கள். இவர்கள் "காணி" என்னப்பட்ட ஓர் தலைவனால் நடத்தப்படுகிறார்கள். அந்தத் தலைவன் கொடுக்குங் கட்டளைகளையெல்லாம் ஆட்சேபனையின்றி நிறைவேற்றுவார்கள். எக்காரியத்திலும் அவனுக்குக் கீழடங்கி, அவன் சொல் வாக்குத்தப்பாமல் நடந்துவருவார்கள். அத்தலைவர்களில்ச் சிலருடைய நாமதேயங்களை இதனடியிற் காட்டுகிறேன். மாத்தாங்காணி, ஈச்சங்காணி, ஐயங்காணி, மாத்

தாண்டங்காணி, முதலியவைகளாம். இவர்களன்றி இன்னும் அனேக தலைவருண்டு.

அல்லாமலுங் காணியென்ற தலைவனின்கீழ் ஏவல் வேலைசெய்யும் வேறொருவனுண்டு. அவன் தண்டற்காரனைப்போலிருப்பான். இவன் தலைவனின் கீழாயிருந்து ஊரின் பொதுக்காரியங்களை அவனுடைய கட்டளைப்பிரகாரம் வெகு சுறுசுறுப்பாய் நிறைவேற்றிவருவான். காணியினுடைய வீடு, தோட்டத்துக்குரிய வேலைகளைத் தலத்தின் பிரசைகளே பொதுவாய்ப்பார்த்துவருவார்கள். ஆனால் தலைவனே ஆஸ்தானகாரியங்களையெல்லாம் பொறுப்பாய்ப்பார்த்துத் தன் சனங்களுக்குச் சகாயனும், நல்லமத்தியஸ்தனும், காவலாளியுமாயிருப்பான். குடிகள் தங்கள் தலைவன் அனுமதியன்னியில் ஒன்றுஞ் சுதாவாய்ச் செய்யவும் நடப்பிக்கவு மாட்டார்கள். இப்படியிருந்தாலும் அவர்களும் மாமிச தேகிகளானதினாலே, அவர்களுக்குள்ளே பலதருணங்களில்ப் பற்பலவகையான பிரிவினைகளும் மாறுதல்களுமுண்டாகும்.

கவனிப்பு.

ஆனாலும் ஏசாயா. ௪0 : ௧௧-ல் "மேய்ப்பனைப்போலே தம்முடைய மந்தையைமேய்ப்பார். ஆட்டுக்குட்டிகளைத் தமதுபுயத்திலே சேர்த்துத் தமது மடியிலேசுமந்து, கறவலாடுகளை மெதுவாய் நடத்துவார்" என்றும். ௪௯ : ௧0-ல். "அவர்கள் பசியாயிருப்பதுமில்லை, தாகமாயிருப்பதுமில்லை. உஷ்

ணமாகிலும் வெயிலாகிலும் அவர்கள்மேற் படுவதுமி ல்லே. ஏனெனில் அவர்களுக் கிரங்குகிறவர் அவர்க ளேநடத்தி அவர்களே நீரூற்றுகளண்டைக்குக் கொண்டு போய்விடுவார்" என்றும். க பேது. உ. உரு-ல் "உங் கள் ஆத்துமாக்களுக்குமேய்ப்பரும் கண்காணியுமான வர்" என்றுஞ் சொல்லிய வாக்கியங்களேக் கவனிக்கும் போது, பரம கண்காணியுங் காவலாளியுமாகிய கிறிஸ் துவே ஆத்துமசரீரப்பிரகாரம் என்றுங் காத்துஇரட்சிக் கும் பொறுப்பாளியான தலேவனுயிருக்கிறுர். இந்த தலேவனே அந்த மலேயரசர் அறியாமலிருப்பது ஐயோ! எவ்வளவு நிற்பாக்கியம்.

## VI. THEIR STYLE OF BUILDING.

―o―

### சூ - அதிகாரம்.

அவர்கள் வீடுகட்டுகிறமுறை.

பாரப்பா மலேயரசர் கட்டும்வீடு
பண்பான சூத்திரத்தை என்னசொல்வேன்
நேரப்பா கொல்லனெடு தச்சன்வேண்டாம்
நீள்நெடுங்காப் புளாயதுபோ லிருக்கும்பாரு
தேரப்பா சுற்றுமண்தான் செருவலல்லோ
தெளிவான கொற்றனதற் கேதுக்கப்பா
ஆரப்பா எவர்குறையுஞ் சொல்லவொண்ணு
அவ்வீடு கிறிஸ்தவனே அரணுயிற்றே.

மலையரசர்கள் வீடுகட்டுகிற பாவனை மகா விந்தையுள்ளது. கொல்லன் தச்சன் அவர்களுக்கு வேண்டுவதில்லை. தங்கள் வீடு பரண் முதலிய வேலைகளுக்குச் சேர்க்கவேண்டிய உத்திரம், தூண், சட்டம், கை, குறுக்குவிட்டம், நீங்காவிட்டம், வரிச்சி, முதலிய வேலைகளை இவர்களே சுதாவாய்ச் செய்து முடித்துக்கொள்வார்கள். கட்டும் வீடு நெடுங்காப்புரை, அல்லது மாடுகள் அடைக்கிறதற்கு வழக்கமாய்க் கட்டிவருகிற மாட்டுப்புரைகள்போல சற்றே நீண்டு அகன்ற பெரிய குடிலாயிருக்கும். இவ்வீடுகளுக்குச் சுற்றுச்சுவர் மண்ணினாற் கட்டமாட்டார்கள். ஆகையினாலே இதற்குக் கொற்றன் கல்தச்சன் வேண்டியதில்லை. இவர்களே மலைக்காவுகளிற்போய் பெலமுள்ள உருண்டைக்கொம்புகளை வெட்டிவந்து, அளிப்பாய்ச்சினைப்போல நெருங்கவைத்து, பிரப்பம்நார்ரால் அல்லது நாருக்கொப்பான சில மரத்தோல்களாலே பலமாய்க்கட்டிப் பெரிதான மரத்தின் பட்டையையாவது, அல்லது விரித்த மூங்கிற் பட்டையையாவது செருவலோடு சேர்த்துக்கட்டி சுவர்போற் பலப்படுத்துவார்கள். ஏகதேசம் ஆளம்பனை ஓலையினாலும் இப்படி கட்டுகிறதுமுண்டு. அப்பால் வீட்டின் மேற்கூரையைக் கொம்பு வரிச்சிகளைக்கொண்டு கட்டியபின்பு சுக்குநாரிப்புல்லினால் மெத்தப்பக்குவமாய் மேய்ந்துகொள்வார்கள். சில விடங்களில் பெரிதான வாழை இலையினாலும் மேற்கூரைமேயப்பட்டிருக்

கும். எப்படிப்பட்ட மழையுங்காற்றும் அடித்து அதில் மோதினபோதிலும் இவைகள் விழாமல் நிற்பதுமன்றி கோடைமாரிகாலங்களில்ச் சுகமாய் வசிக்கத்தக்க கிரக மாகவுமிருக்கிறது. ஒழுக்குமுதலானவைகளால் யா தொருசங்கடம் நேரிடமாட்டாது.

கவனிப்பு.

ஆனல் உலகத்திலுள்ளமனிதர்கள் தங்களுடைய திறமைகளுக்கும் யுக்திபுத்திகளுக்கு ந்தக்கதாய்ச் சிறப்பாகவும் அல்லது சிறப்பற்றவைகளாகவும் பற்பலவகையான மாடகூடமா ளிகைகளைக் கட்டுவார்கள். எப்படித்தான் வர்ணித்துக் கட்டினபோதிலும், அல்லது கல்லின்மேல் அஸ்திபார மிட்டு வெகுஸ்திரமாய் நாட்டினபோதிலும் கட்டப் பட்டவீடும், அதைக் கட்டிய மனிதனும் என்றும் நிலை யாய் நிற்கப்போகிறதில்லை. காரியத்தைப் பார்த்தால் சகலமும் அழிவுக்குரியதாகவேயிருக்கிறது. யோபு. ச. ௰கூ. உ௰. "களிமண்வீடுகளில் வாசம்பண்ணி மண் ணில் அஸ்திபாரப்பட்டுப் பொட்டால் அரிக்கப்படுகிற வர்கள்" என்றும் "அவர்கள் காலமேதுவக்கிச் சாயங் கால மாகுமட்டும் நொறுங்குண்டு ஒருவருங் கவனியா மல் நித்திய அழிவையடைகிறார்கள்" என்றுஞ் சொ ல்லி யதைக்கவனித்து, உலகத்துக்குரிய வீட்டைச் சத மென்றெண்ணித் தங்களுடைய முழுப்பொருளையும் புத்தியையும் அதிற்செலுத்தாமல் உ. பேது. க: ௰௩.

யசு-ல் "நமது கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து எனக்குத் தெரிவித்தபடி, நான் என்கூடாரத்தைச் சீக்கிரமாய் விட்டுப்போகவேண்டும் என்றறிந்து இந்தக்கூடாரத்திலிருக்குமளவும் ஞாபகப்படுத்தலினாலே உங்களை எழுப்புகிறது நியாயமென்றுஎண்ணுகிறேன்" என்று அப்போஸ்தலன் சொல்லிய வேதசத்தியத்தைக் கவனித்துக்கொண்டு நித்திய வீடாகிய மோட்சத்தைச்சேர்ந்து கிறிஸ்துவுக்குள்ச் சுகித்துவாழும்படி ஒருவரையொருவர் எழுப்பிவிட்டு இந்த மோட்சவீட்டை மலையரசர் அடையும்படி முயற்சி செய்வோமாக.

## VII. THEIR BED AND DORMITORY.

—o—

## எ-அதிகாரம்.

அவர்கள் படுக்கைக்குரியசயன
ஸ்தானம்.

விந்தமதிலேவசிப்போர்சயனஞ்செய்ய
விருத்தமுள்ளகட்டிலுடன்பரணுமுண்டு
அந்தமதாய்நித்திரையின்சொகுசோமெத்த
ஆனதொருபுகையுமையும்புகையுமல்லால்
கந்தமணங்கரும்புஷ்பம்அணிந்தாற்போல
காணுமையோகாலேதனிற்பார்ப்போமானல்
எந்தவிதமானாலுஞ்சந்தணம்போல்
ஏற்பதையுங்கிறிஸ்தவனேஏகிப்பாரோ.

படுக்கை.

அவர்கள் படுக்கவும் உளுக்கார்ந்திருக்கவும் அட்டாளை என்று சொல்லப்படுகிற ஒருவகையான கட்டில்களையுண்டுபண்ணுகிறார்கள். எப்படியென்றால் இருகவளியுள்ள நான்கு அல்லது ஆறுகால்களைவெட்டிப் போதுமான உயரம் வைத்து நட்டு, அதின்பேரில் நெடுங்குறும் விட்டம் போட்டுக் காலுடனே நன்றாய்ச் சேர்த்துக்கட்டித் தங்களுடைய நீளத்துக்குத் தக்கதாய்ப் பெருங்குழாயுள்ள மூங்கிலைவெட்டிக் கணுவை எடுத்து மெதுவுபடுத்தி, ஊடேகீறி பாய்போல்விரித்து, மேற்கண்ட சட்டத்தின் பேரிற்போட்டு அதின்பேரிலே வசதியாய் இருந்தும் படுத்துங் கொள்வார்கள். சிலர்மூங்கிற் பட்டைகளுக்குப் பதிலாக மரப்பலகைகளைப் போட்டுக்கொள்ளுகிறதுமுண்டு.

இதுவுமன்றித் தங்கள் வீட்டினுள் பெலனும் நீளமுமுள்ள பரணையுண்டாக்கி மேற்காட்டிய விதமாய் மூங்கிற்பட்டையைப்போட்டு மெத்தைவீட்டில் நித்திரை செய்கிறதுபோலச் சுகிக்கிறதோடே போசன பதார்த்தங்களுக்குரிய விசேஷித்த சாமான்களையும் நகை நட்டுக்களையும் அங்கேவைத்துக்கொள்வார்கள்.

சயனஸ்தானம்.

அவர்கள்வீட்டின் மத்தியில் நெருப்பு மூட்டப்பட்டிருக்கும். அதின்புகையினால் வீடுநிரம்பி எங்கும் புகையுறை படர்ந்திருக்கும். தளமுஞ் செப்பனிடாமல் மேடும்பள்ளமும்

புழுதியுஞ் சாம்பலுமாயிருக்கும். அவர்கள் நித்திரையைப் பற்றிச் சொல்லவேண்டியதில்லை. கிழேபுகை மணமும் மேலே புகையுறையும் நிரம்பித் தேகாதிங்கமும் கரும் புஷ்பமணிந்தாற்போலவே யிருக்கும். அவர்கள்வீடும், படுக்கும்பாயும், கட்டும்வஸ்திரமும், ஆளும் பண்டஞ் சகலமும், கார்நிற வண்ணமாகவேயிருக்கும். அவர்கள் தங்கள் தேகத்தை நன்றாய்ச் சுத்திசெய்ய மாட்டார்கள். புருஷரும் ஸ்திரீகளும் ஏகதேசம் தங்கள் தேகத்தைக் கழுவிச் சுத்திசெய்வார்களே யல்லாது கிரமப்படி ஒருக்காலும் அப்படிச்செய்யவே மாட்டார்கள். அவர்கள் புழுதியிற்கிடந்து எப்படித்தான் புரண்டு உருண்டாலும், எவ்வளவுதூசிதான் தங்கள்மேனியிற்படிந்தாலும் கைகளினாலேசாடையாய்த்துடைத்துச் சந்தனம்போற் பாவித்துக்கொண்டு வனத்தில்வசிக்கும் மிருகாதிகளைப்போன்ற சீலமுள்ளவர்களாயிருந்துவாழ்கிறார்கள்.

கவனிப்பு.

இதைவாசிக்கும் நண்பரே! நாடுநகர்களில் வசிக்குஞ் சனங்களைப்போல விநோதமும் விலையும்பெற்ற கட்டில்மெத்தை முதலிய பஞ்சணைகளில் இருந்து அவர்கள் சுகியாவிட்டாலும் தங்கள் அந்தஸ்துக்கான சலாக்கியமாவது அவர்களுக்கிருக்கிறது. ஆனால் மகிமையின் இராசா உலகத்தில் வசித்தகாலத்தில் இம்மாத்திரசலாக்கியம் முதலாய் அவருக்கிருந்ததில்லையென்று அவருடைய விருத்தாங்

தங்களால் அறிகிறோம். லூக். உ. எ. "அப்பொழுது அவ ள்தன் முதற்பேறான குமாரனைப்பெற்று, அவனைப்பு டவைகளிற்சுற்றிச்சத்திரத்திலேவேறுஇடம் இல்லாதப டியினாலே அவனைப்பசுத்தொட்டியிலேவைத்தாள்" லூக். கூ. ருஅ. "நரிகளுக்குக்குழிகளும் ஆகாயத்தின் பற வைகளுக்குக் கூடுகளுமுண்டு. மனிதனுடையகுமா ரனோ தன்தலையைச்சாய்க்கிறதற்கு இடமில்லாதவனா யிருக்கிறான்" ஆகையால் மானிடனை ஈடேற்றும்படி இ வ்வளவுகஷ்டப்பட்ட அந்தபரமசற்குருவை மலையரசர் அறிந்தால் எவ்வளவு நன்மையாயிருக்கும்.

## VIII. DRESS OF BOTH SEXES.

———o———

## அ - அதிகாரம்.

———

அவர்களின் ஆண்பெண்கள்
வஸ்திர உடுபாவனை.
சந்தவிருத்தம்.

கன்னல்மொழி மலையரசரின்தேவிகள்
    கலையனை பூணுவர்கள்
பின்னமதின்றி ஓர் சுற்றிடு துகில்தனை
    பெல முழங்கால் மேலாம்
நன்னயப்புருஷர்கள் கலைதனையிடுப்பிடார்
    நாட்டமாங் தலைமேலே
என்னசொல்வேன் மலையரசரினதிசயம்
    ஏகிப்பார் கிறிஸ்தவனே.

மலையரசரின் தேவிகளென்று சொல்லப்படுகிற ஸ்திரீசனங்கள் இரண்டு அல்லது மூன்று கெசத்துக்கு மேற்படாத சிறிய முண்டுகளைத் தங்கள் முழங்காலுக்குமேல் ஒரு சுற்றுமாத்திரம் இடுப்பிற் கட்டிக்கொள்வார்கள். புருஷர்களோ, தங்கள் இடுப்பில் விரல்பருமனாயுள்ள அரைநாணும், நீண்ட கௌபீனமும் தரித்துக்கொண்டு வஸ்திரங்களை விசேஷித்துத் தங்கள் தலைகளிற் சுற்றிக்கொள்வார்கள். இப்படி ஏன் செய்கிறீர்கள்? வஸ்திரங்களை இடுப்பிற் கட்டக்கூடாதோ? என்றால், கூடாது, அப்படிச்செய்வது முறையீனமான காரியம் என்பார்கள். கட்டாயமாய் அவர்களை வஸ்திரம் உடுக்கச்சொன்னாலும் கொஞ்சநேரம் அப்படிச்செய்து பின்பு அவிழ்த்துக் கீழேபோட்டு உளுக்கார்ந்து கொள்ளுவார்கள்.

கவனிப்பு.

இப்படிச்செய்வது அவர்கள் அறியாமையின் சிறப்பு. கிறிஸ்துமார்க்கமென்னுஞ் சிறந்த அறிவு அவர்களில்த் தோன்றாமையால் இவ்வகையான கோலம் அவர்களுக்குப் பிரியமாயிருக்கிறது. இப்படிக்கேவலமானவிதமா யுடுத்துகிறது மனிதருடைய பார்வையில் ஓர்வகையாய்த் தோன்றினாலும் சமஸ்த அண்டங்களையும் படைத்த தேவனுடைய கண்களில் அவர்கள் அறிவுக்குரிய அலங்காரம் அம்மாத்திரமேயென்று முறைகேடாய்த்திரியும் பாலகனை நேசிக்குந்தாயடைவாய் இவர்களையும் பாவிக்க இடமுண்டு.

ஏனென்றால்ச் சிறப்பாயுடுக்கும்பாவனை அவர்களுக்குத்தெரியாது. மேற்காட்டியபடி உடுப்பதே அவர்களின் ஆசாரம். இவர்கள்மேல் தேவன் விசனப்படவு மாட்டார். புறம்பான அலங்காரத்தை அவர் விரும்பாமல் இருதய அலங்காரத்தையே நோக்குகிறார். ஆகையால், காரியத்தை அறிந்த உள்நாட்டாரே, உங்களுக்குரிய நேச அலங்காரம் எப்படிப்பட்டதாயிருக்க வேண்டுமென்று பாருங்கள். க. தீமோ. உ. கூ, கo-ல். "ஸ்திரீகளும் மயிரைப் பின்னுதலாலாவது பொன்னாலாவது முத்துக்களாலாவது விலையேறப்பெற்ற வஸ்திரத்தாலாவது தங்களை அலங்கரியாமல், தேவபத்தியைக்காண்பிக்கிற பெண்பிள்ளைகளுக்கேற்றபடியே சற்புக்குரியவஸ்திரத்தாலும்நாணத்தாலும் தெளிவானபுத்தியினாலும், நற்கிரியையினாலும் தங்களை அலங்கரிக்க வேண்டும்என்று சொல்லப்படுகிற இவ்வித அலங்காரமே அவருக்குப் பிரியம். பரிசுத்தாவியானவரால் உங்களுக்குக் கொடுக்கப்படுகிற பரிசுத்தத்தையடைந்து, அந்தப் பரிசுத்த அங்கியை உங்கள் பாவத்தால் அசுசிப்படுத்தாதிருந்தால் வெளி. ௩. ச; ரு-ல். "தங்கள் வஸ்திரங்களை அசுசிப்படுத்தாத சிலபேர் சருதை ஊரிலே உன்னோடே உண்டு. அவர்கள் பாத்திரவான்களானபடியால் என்னுடனேகூட வெண்மையான உடைகளைத்தரித்து நடப்பார்கள். ஜெயங்கொள்ளுகிறவன் வெண்மையான வஸ்திரங்களால் உடுத்தப்படுவான்நான்

ஜீவபுஸ்தகத்திலே அவன்பேரைப்பதித்து சகல பரிசுத்த தூதர் முதலிய வானசேனைகளிடத்தில் அவன்பேரை அறிக்கைபண்ணுவேன்" என்று சொல்லப்பட்டிருக்கிற சலாக்கியத்துக்குரியவர்களாவீர்கள். இப்படிப்பட்ட திவ்விய அலங்காரத்தை யடையாதவர்களாரோ அவர்களே தேவனுடைய வெறுப்புக்குரியவர்கள் ஆனதால்,

சுந்தரனேசு சூட்சமாயியும்
இந்தவெண்ணுடையை அந்தநன்மலையர்
சிந்தையிற்கொண்டு விந்தையாய்ப்பூண
எந்தையினேச ரோற்படுவதுநன்றே.

## IX. WRETCHEDNESS IN DRESS, AND DWELLING PLACE.

—o—

## கூ-அதிகாரம்.

---

### வஸ்திர இருப்பிட நிர்ப்பந்தம்.

என்னசொல்வேன்மலைதனிலேவசிக்குமந்த
ஏழைமலையரசர்களினிற்பந்தத்தை
நன்னயஞ்சேர்வண்ணான்நாவிதனுமில்லை
நல்லதொருவெண்கலையும்உடுக்கமாட்டார்
பின்னமுண்டோமுழுக்கில்லைகொசுவுமெத்தப்
பேரானசீலைப்பேன்தெள்ளும்வண்டும்
இன்னமுண்டுதுன்பங்களெல்லாம்நீங்க
எம்பரனைக்கிறிஸ்தவனேஇறைஞ்சுவாயே.

*வஸ்திரம்.*

அந்தச்சனங்களுக்கு வண்ணானில்லாமையால், அவர்களுக்கு வஸ்திரஞ் சுத்தியாவதற் குளதுவில்லை. புருஷர்கள் தங்கள்வஸ்திரங்களை ஏகதேசஞ் சாடையாய்த் துவைத்துக்கொள்வார்களேயல்லாது, ஸ்திரீசனங்கள் தங்கள்சேலைகளை சுத்திசெய்வது அபுரூபமானகாரியம். ஆனால் கிறிஸ்து மார்க்கத்தின் ஒளி அங்கேபிரகாசியாவிட்டாலும், அதின்கிரணங்கொஞ்சம் வீசிஇருப்பதினாலே, சுத்தம் அசுத்தம் என்கிறவேற்றுமை அவர்களுக்குள்ளே சற்றே விளங்கியிருக்கிறது.

அன்றியுஞ் சவரஞ்செய்துகொள்வதற்கு அம்பட்டனும் அவர்களுக்குள்ளேஇல்லை. அவர்களே சுதாவாய் ஒருவருக்கொருவர் சவரஞ்செய்துகொள்வார்கள்.

*இடம்.*

பின்னும் நான்கண்ட விசேஷமென்னவென்றால், அவர்கள் வஸ்திரம் வெள்ளாவிமுகங்காணாதபடியால் மிகுதியானசீலைப்பேன்கள் அதிற் சஞ்சாரஞ்செய்து நிலையாயிருந்து வாழுகின்றன. இன்னமுங் கூனவண்டுந் தெள்ளுப்பூச்சியும் எக்காலமும் வாதிப்பதுடன் கூட் கொசுவென்று சொல்லப்படும் ஒலுங்கானது, இராக்காலங்களில் தும்பிகை போன்ற தனது கூரியமூக்கினால் அவர்களை மிகுதியாக வாதிப்பதுமுண்டு. என்றாலும் இப்படிப்பட்ட துன்பங்கள் அவர்களுக்கு வழக்கமாய்ப்போனதினாலே அத்தனைவருத்தமாய்த்தோற்றுகிறதில்லை.

இதைவாசிக்கும் நண்பனே பரிதபிக்கப்படத்தக்க இவர்களின் நிலமையைப்பார்த்து கொர்வங்கொண்டு நகையாதே. அப்படிச்செய்தால் உன்னைச்சிருட்டித்த யெகோவாவுக்கு விசனத்தை மூட்டுவதாயிருக்குமென்று யோசித்து உன் ஆதிநிலமையைநோக்கிப்பார் எசேக். கசா. ச. "நீபிறக்கிறநாளிலே உன்பிறப்பின் சமாசாரம் எப்படி இருந்தனவென்றால், உன்தொப்புள் அறுக்கப்பட்டதுமில்லை; நீநமது பார்வைக்குபிரியப்படத் தண்ணீரினால்க் கழுவப்பட்டதுமில்லை; உப்பால்ச் சுத்திகரிக்கப்பட்டதுமில்லை; புடவைகளில்ச் சுற்றப்பட்டதுமில்லை, உனக்காகப்பரதவித்து இவைகளில் ஒன்றையாகிலும்உனக்குச்செய்ய ஒரு கண்ணும் உன்பேரில் இரக்கமாயிருந்ததில்லை; நீபிறந்த நாளில் உன் ஆத்துமா அரோசிக்கப்பட்டதினால் வெளியில் எறிந்துவிடப்பட்டாய்" ஆகையால் உன் ஆதிநிலைமையை நீ நினைத்தால் அவர்களுக்கிரங்காதிருப்பாயோ?

கவனிப்பு.

## X. THEIR RELIGIOUS ZEAL.

## ய - அதிகாரம்.

### அவர்கள்தெய்வத்தைமதிக்குதல்.

அந்தாதி.

க. ஓடுஞ்சலத்தினிலேஅழுக்கு
உடைசுத்திசெய்யாமல்த்
தேடியோர்பாத்திரந்தன்னில்சலத்தையே
தென்பாகக்கோறிக்கொண்டு.

௨ தென்பாகக்கோறிக்கொண்டப்புறந்தன்னில்த்
திடமதாய்வைத்துப்பின்னால்
வெண்மையதாசதம்வஸ்திரந்தன்னை
வெளுப்பிட்டுக்கொள்வார்கள்.

௩. வெளுப்பிடும்வகைநூதனமாமென்று
வேகமுடன்கேட்கில்
செழிப்பாயோடும்நதிக்கரையிற்பல
தெய்வங்கள்மெத்தவென்றும்.

௪. தெய்வங்கள்மெத்தவுமாசலமீதினில்த்
தீர்க்கமாய்ப்பள்ளிகொள்ளும்
செய்வதிலெங்கள்அழுக்கதில்மேவினால்
தீனமாந்தோஷமென்பார்.

௫. தீனமாந்தோஷமென்றேபகர்ந்திடும்
செல்லைமலையைப்பார்
ஞானம்நிறைந்தமெய்த்தேவனைச்சேர்ந்திடும்
நல்லகிறிஸ்தவனே.

அவர்கள் வசிக்கும் ஸ்தானங்கள்முக்கியமாய் நதிக்கரைகளை யடுத்திருப்பதினாலே, அதிலோடுஞ் சலங்களில் தங்கள் அழுக்குவஸ்திரங்களை துவைக்காமல், ஒருபாத்திரத்தில் தண்ணீர்மொண்டுத் தூரமாய்க்கொண்டுபோய் அங்கே வஸ்திரசுத்தி செய்வார்கள். ஏனென்றால் இந்நதிக்கரைகளில் பலதெய்வஸ்தலங்களும் அவைகளில் பலதேவாதிகளும் உண்டென்றும் அவர்களெல்லாரும் இந்தசலத்தில் பள்ளிகொள்ளுகிறதா

யும்; ஸ்நானஞ்செய்கிறதாயுமிருப்பதினாலே, தங்கள் அழுக்கு இந்தசலத்தின்வழியாய்ச் சென்றால் அதனால் தோஷம் உண்டாவதுமன்றி அவர்களின்கோபமும் தங்கள்பேரில் மிகுதியாயுண்டாகுமென்றுந் தீர்க்கமாய்ச் சொல்வார்கள்.

பாருங்கள், அவர்கள்படியாதவர்களும், தேவனை யறியாத காட்டுச்சனங்களுமாயிருந்தபோதிலும், அவர்கள் மூடப்பக்தியில்க் காணப்படுந்தெய்வபயம் எவ்வளவுபுகழப்படத்தக்கதா யிருக்கிறது. பிரயோசனமற்ற அற்பக்காரியத்தில் அவர்கள் இவ்வளவுபக்திவைராக்கியத்தைக்காண்பித்தால், சீவனுள்ளமெய்த்தேவனை ஆராதித்து அவருடையநன்மைகளைப் பூரணமாய் அனுபவித்திருக்கிற நாம் எவ்வளவுபயபக்தியான நன்றியறிதலைக்காட்டவேண்டும்.

யெகோவாவானவர் வானத்திலிருந்து பூமியிலுள்ள மனுப்புத்திரரைக் கண்ணோக்கிப் பார்க்கிறவராகக் கூறப்பட்டிருந்தாலும், அவர் எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் தெளிவாய்ப் பார்த்தறிகிற தேவனாயுமிருப்பதினாலேவிசுவாசம் நம்பிக்கை அன்புயென்னும் நதிக்கரைகளையடுத்துப்பாவமென்னும்துர்நாற்றத்தால் அவருக்கு விசனத்தைமூட்டாமல், அப். ௰. ௪-ல். கொர்னேலியுவைப்போல நமது செபங்களும் தர்மங்களும் தேவனால் அங்கிகரிக்கப்பட் அவருக்குப்பிரியமான செபதோத்திரப் பலிகளைச் செலுத்தும்படிப் பூமியில்ப் பல இடங்களில் அவருக்கென்று பல ஆலயங்கள் கட்டப்பட்டும் அவைகளில் அவருக்கு ஆராதனை செய்யப்பட்டும்

வருகின்றன, அங்கே சென்று மன்றாடுவோரின் விண்ணப்பங்களுக்கு அவர் கிருபையுள்ள மாறுத்தரவு கொடுப்போமென்று தெளிவான வாக்குத்தத்தங்களையும் அருளிச்செய்திருக்கிறார். உ. நாளா. எ. ௧௪. ௧௫.

ஆகையால் சங். ௱. ௪-ன்படி அவர் வாசல்களில் துதியோடும் அவர் பிரகாரங்களிலப் புகழ்ச்சியோடும் பிரவேசித்து அவரைத்துதித்து அவருடைய நாமத்தைத் தோத்தரிப்பதுமன்றி ௧. கொரி. ௩. ௧௬-ன்படி நீங்கள் தேவனுடைய ஆலயமா யிருக்கிறீர்களென்றும் தேவனுடைய ஆவி உங்களில் வாசமாயிருக்கிறாரென்றும் அறிந்து உரோ. ௧௨, ௧-ன்படி நீங்கள் புத்தியுள்ள ஆராதனைசெய்யும்படி உங்கள் சரீரங்களை பராபரனுக்கு நற்பிரியமானபலியாக நிறுத்தப்பிரயாசப்படுவீர்களாக. இப்படி பிரயாசப்படுவோர் பாவஅந்தகாரத்தால் சூழப்பட்ட மலைவாசிகள்பேரில் மனம் உருகாதிருப்பார்களோ?

## XI. CLEARING OF JUNGLE AND MEANS USED FOR GROWING HERBAGE.

## ௰௧ - அதிகாரம்.

அவர்கள் காடுவெட்டி பயிர்செய்கிற வகை.

ஆகாரவகைக்காகத்தோட்டஞ்செய்யும்
அழகானவிந்தையைநான்என்னசொல்வேன்
வாகானநீரூற்றுங்காவுதன்னில்
வளமானமரங்களைத்தான்வெட்டிநீத்தி

ஏகாந்தமாய்க்கூடிவேலிகட்டி
இன்பமுள்ளதீனிவகைப்பயிருஞ்செய்து
சோகாந்திரவீரரைப்போல்சுகித்துவாழும்
சொருசுதனைக்கிறிஸ்தவனேசூட்சிப்பாயே.

காடுவெட்டுதல்

அம்மலைகளில் ஓரிடத்திற் சஞ்சரிக்குங் குடிகள் யாவரும் ஒன்றாய்ச்சேர்ந்து உரப்பிடியும், மண்கண்டமும், தண்ணீர்த்தாவும் கூடியமட்டிற் சமபூமியுந், தங்கள் குடியிருப்புக்குச் சமீபமுமாயிருக்கப்பட்ட ஒருநிலத்தைப்பார்த்து, அதில் அடர்ந்திருக்கின்ற விருட்சங்களையும், புற்பூண்டுகள் யாவற்றையும் வெட்டி, அப்புறப்படுத்த வேண்டியவைகளை அப்புறப்படுத்தி மற்றவைகளையெல்லாம் அக்கினியால் தகனித்து, நிலத்தைச் செய்காலாக்குவார்கள்.

செய்யும் பயிர்கள்.

பின்பு வெட்டப்பட்ட மரங்களாலே பலமாய் வேலியடைத்து அதில் புடிகிழங்கு, வள்ளிக்கிழங்கு, சேம்பு, கரும்சேம்பு, முட்டைச்சேம்பு, சீனிக்கிழங்கு, முதலியதும், சினிக்கதலி, பேயன், மொந்தன் முதலியவாழைகளும் நட்டு மற்றதில் தினை, சாமை, காடைக்கண்ணி, சோளம், புகையிலை, முதலியவிதைகளையும், நீர்ப்போக்கான பள்ளங்களில் நெல்விதைகளையும்விதைத்து, விதையும் மண்ணுங் கலக்கும்படியாகக் கோணலான கொம்பினால் உழுகிறது போற்செய்து, மரக்கிளைகளைக்கொண்டு பரம்படித்து, நிலத்தைச் சமமாக்கிக் கொள்வார்கள்.

அவர்கள் வெட்டித்தகனிக்கிற மரங்கள் இவைக ளென்று வாசிப்போர் அறியும்போது பிரமிக்கவேண்டியதாய் நேரிடும். ஆ கையால் அம்மரங்களிற் சிலவற்றை இ

வெட்டிதகனிக் கும்மரங்கள்.

தனடியில் எடுத்துக்காண்பிக்கிறேன். தேக்கு, கருந் தேக்கு, வெண்தேக்கு, கோங்கு, நாங்கு, வேங்கை, ம யிலே, செண்பகப்பாலே, தோதகத்தி, கருந்தாளி, ஆயி னிப்பலா, பொன்விருசு, மதகிரிவேம்பு, மஞ்சள்க்கடம் பு, செம்மரம் பின்னும்பல விருட்சங்களுமே.

இவர்கள் தங்களுக்குப் பிரயோசனமாகத் தோட் டங்களையுண்டுபண்ணி அவைகளின் பலனுக்குக் காத்திருப்பதுபோல, மகா

கவனிப்பு.

தேவனும் தமக்கேற்ற நற்கனியை வருவித்துக்கொள் ளும்படியாக, ஓர்தோட்டத்தை எத்தனமாக்கியிருக்கி ருர். எங்கேயென்ருல் ஏசா. ரு: க, உ-ல். "என்பிரிய ருக்கு மகாசெழிப்பான மேட்டிலே ஒருதிராட்சத்தோ ட்டமிருக்கிறது. அவர் அதைவேலியடைத்து அதைக் கல்பொறுக்கி அதிலே நற்குலதிராட்சச் செடிகளைநட்டு, அதின்நடுவில்ஒருகோபுரத்தைக்கட்டி ஆலையையும்நாட் டி அதுநல்ல திராட்சப்பழங்களைத்தருமென்று காத்திரு க்கிருர்." ஆகையால் திருச்சபை என்னுந் தோட்டத்தில் நடப்பட்டதிராட்சச் செடிக்சொப்பான கிறிஸ்தவனே, இதோஉன்நேசர் உன்னிடத்திற் கனிதேடிவருகிருர். அ வருக்குப் பிரியமான கனி உன்னிடத்தில் ஆயத்தமாயி

ருக்கிறதோவென்று உன்னைப்பரிசோதனைபண்ணி, இல்லையென்றால்“இம்மரத்தைவெட்டு”என்றுசொல்லுஞ்சத்தம் நமது காதில்த்தொனிக்கும்முன்னே அவருக்குப்பிரியமான கனியைக்கொடுக்கும்படி ஆயத்தப்பட்டு கனியற்ற மலையரசரிடத்தில் நற்கனிதோன்ற பிரயாசப்படுவோமாக.

## XII. FIRST FRUITS.

——o——

## ௰உ-அதிகாரம்.

### முதற்பலன்.

ஆமப்பாமலையரசர்பத்திமெத்த
அன்பாகமுதற்பலனைப்படைக்குமுன்னே
தேமப்பாஒருபொருளுந்தொடவேமாட்டார்
திடமாகச்சகலவகைப்பொருளுஞ்சேர்த்து
போமப்பாபூதத்தான்என்னும்பேய்க்கு
புனிதமுடன்படைப்பிட்டுக்கொடுத்தபின்பு
நாமப்பாசெலவிட்டுப்பொசிக்குமந்த
நட்பதனைக்கிறிஸ்தவனேநடந்துபாரோன்.

சிறந்தபர்வதங்களில் வாசஞ்செய்யும் மலையரசருக்குச் சொறிமுத்தையன், பட்டவராயன், சடாமுனி, சத்தகன்னிகள், காவுப்பேச்சிகள், திருநீலகண்டன், பற்பநாதன் முதலியபல பேய்களிருந்தும், முக்கியதேவன்

பூதத்தான் என்கிறபேய். இதற்குக் கட்டுக்கோப்பான கோவில் இல்லை. தங்கள் தோட்டத்தில் இஷ்டமான இடத்திலே ஒருபெரு மரத்தடியிற் பீடம்போட்டு, அதில் ஒருகல்லை நட்டு, எண்ணெய், மஞ்சள் இவைகளை அக்கல்லின்மேற்பூசி அதற்குமுன் தங்கள் தோட்டத்தில் விளைந்த காய் கனி கிழங்கு பழங்கள் தானிய தவசங்களும், புண்ணாக்கு வெற்றிலை பாக்கு சாராயம், கள்ளு முதலிய மதுபானங்களும் படைப்பிட்டு, தீப தூபஆராதனைச்செய்து ஆடிப்பாடிபூசித்தபின்பு அவைகளை எடுத்து வெளிச்சனங்கள் வந்திருந்தால் அவர்களுக்கு வேண்டியமட்டுங் கொடுத்து, மீதியை எடுத்துப் பிரசாதம் என்று தங்களுக்குள்ளே பங்கிட்டுச் சாப்பிடுவார்கள். இப்படிச் செய்வதற்குமுன்னே புதியதோட்டத்தின் பலன்களில் யாதொன்றையும் புசிப்புக்கென்று எடுத்துக்கொள்ளமாட்டார்கள்.

இந்தக் கட்டுப்பாட்டைக் கவனிக்கில் பூர்வபிதாக்களுடைய பிரமாணம்போலிருக்கிறது. எப்படியென்றால் உ. மோ. ௩௪: உ௬-ல் "உன் சீர்மையின்முதல் விளைச்சலில் முந்தினகனியை உன்பராபரனாகிய கர்த்தரின்வீட்டுக்குக்கொண்டுவருவாயாக." ௩. மோ. உ௩. ௰, ௰௪-ல் "வெள்ளாண்மையை அறுக்கும்போது உங்கள் அறுப்பின்முதற்பலனாகிய ஒருகதிர்க்கட்டை ஆசாரியனண்டையிற் கொண்டுவரக்கடவீர்கள். உங்கள் தேவனுடைய காணிக்கையைக் கொண்டுவரும் அந்நாள் மட்டும் அப்ப

முஞ் சுட்டகதிரும் பச்சைக்கதிரும் புசியீர்களாக; இது உங்கள் வாசஸ்த்தலங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்தியகட்டளை" என்பதே. அறிவினமுள்ள அந்தச்சனங்களுக்குள்ளே யுண்டாயிருக்கிற பக்திவைராக்கியம் எத்தனைபெரிதாயிருக்கிறது. இப்படிப்பட்டவைராக்கியம் கிறிஸ்தவர்களுக்குள்ளே அதிகரிக்குமானால் எவ்வளவு புகழப்படத்தக்கதாயிருக்கும். இதைவாசிக்குஞ் சகோதரனே? இப்பேர்ப்பட்ட நற்செய்கை நம்மில் உண்டோவென்று பரிசோதித்துப் பார்த்து அதற்கிசைவாய் நடப்போமாக.

## XIII. THEIR SUPPER TIME.

---

## ௰௩ - அதிகாரம்.

அவர்கள்இரவிற்போசனஞ்செய்யுங்காலம்.
கும்மி.

க. சாப்பிடத்தக்கலர்வேளையும்நேரமுஞ்
சந்தேகமில்லாமல்த்தானிருக்கக்
கூப்பிட்டுப்பாதிஇரவில்கிழங்கப்பு
கூடிப்பொசிப்பார்கிறிஸ்தவனே.

உ படுக்கும்போது தலைமாட்டில்நல்லப்
பாகமாய்வள்ளிக்கிழங்குகளும்
அடுக்கச்சட்டியில்த்தண்ணீர் அகப்பையும்
அருகிலிருக்குங்கிறிஸ்தவனே.

## சூ' இரவில்போசனஞ்செய்யுங்காலம்.

பொதுவாகச்சாப்பிடத்தக்க வேளையுங் காலமும் நம்மைப்போல அவர்களுக்கும் இருந்தாலும்; பகல் போல இரவையும் பாவித்து, பாதி இரவில் நித்திரை தெளியும்போது போசனஞ்செய்யும்படியாகத் தலைமாட்டில் வேவித்தவள்ளிக்கிழங்குஞ் சமைத்தகறியும் கனிவர்க்கங்களும் தண்ணீரும் பதனமாய் வைத்திருக்கும். அவர்கள் விழிக்கும்போது அவைகளை எடுத்துப் போசனபானஞ்செய்து புருஷர்கள் சுருட்டுக்குடித்த பின் நித்திரைசெய்யப்போவார்கள்.

இப்போசனம் அழிவுக்குரியது. ஆனால் என்றென்றைக்கும் நிற்கத்தக்கதும், பூரணதிருப்தியைக்கொடுக்கத்தக்கதுமான ஓர் போசனமுண்டு. அதென்னவென்றால், யோவா. சூ. ருரு. ருஎ-ல். "என்மாமிசத்தைப்புசித்து என் இரத்தத்தைப்பானம் பண்ணுகிறவன் எனக்குள்ளே தங்குகிறான், நானும் அவனுக்குள்ளே தங்குகிறேன். என்னையனுப்பின சீவனுள்ளபிதாவினாலே நான் பிழைத்திருக்கிறதுபோல என்னைப் புசிக்கிறவனும் என்னாலே பிழைப்பான் ; இதுவே வானத்திலிருந்திறங்கின அப்பம் ; இது உங்கள் பிதாக்கள்புசித்த மன்னாவைப்போலல்ல அவர்கள் மரித்தார்களே, இந்த அப்பத்தைப்புசிக்கிறவன் என்றென்றைக்கும்பிழைப்பான்" என்பதே. போசனமென்பது சூஉ வா. ன்படி கிறிஸ்துவின் திருவசனமேயாம் ஆகையால்;

௨௪-வா. ன்படி அழிந்துபோகிற போசனத்துக்காக அ
ல்ல, நித்தியசீவனுள்ளவரைக்கும் நிலைநிற்கிறபோசனத்
துக்காகவேபிரயாசப்பட்டு இந்தபோசனத்தை மலையர்
சர்களும் உண்டுசுகிக்கும்படி முயல்வோமாக.

## XIV. THEIR HAND-CRAFT.

---

## ௰௪. அதிகாரம்.

---

### அவர்கள்கைத்தொழில்.

ஆன்தொருகிரிவாழும் அரயன்மார்கள்
அதியூகமாய்மரத்தின் கொப்பினலே
ஞானமுடன்கச்சந்திப் பைபோற்செய்வார்
நல்லதொருபெண்கள்செய்யுந்தொழிலைக்கேளு
கானகத்தின்மூங்கிலினற்பேழைப்பெட்டி
கனமானகூடையுடன்பாயுஞ்செய்வார்
மானமுள்ளசீவனஞ்செய்விந்தைதன்னை
மகிமையுள்ளகிறிஸ்தவனேமகிழ்ந்துபாரே.

அவர்கள் ஒருவிதமரத்தின் கொடியினலே, சாக்கு
அல்லது கச்சந்திப்பை போற்செய்திருக்கிறார்கள். அது
நெசவுமல்ல பின்னலுமல்ல, இதுசாதுவான மரத்தின்
கொடி மாத்திரமே, அதைவெட்டித் துண்டுபண்ணி நன்
ருய்த்தட்டிப், பைபோல நடுவேகீறி ஒருசரையைத்தைத்

துத் தானிய தவசங்களையும், பிரயாணச் சாமான்களை யும் அதினுள் வைத்துக்கொண்டு பிரயோகம்பண்ணு வார்கள். அதுதோற்பையைப்போல வெகுபலமாயிரு க்கும்.

அவர்கள் ஸ்திரீகளும் வீட்டுக்குரிய வேலையைத் தவிர,ஈரல்த்தட்டையினாலே பேழைப்பெட்டி, கிழங்கு எடுக்கிறகூடை,சிறுதட்டுகள், சிறுபெட்டிகள், பாய்கள், தடுக்கு முதலியவைகளைச் செய்வார்கள். பெண்பிள்ளை கள் தங்கள் வீட்டைவிட்டு அப்புறப்படுகிறது அரிதா னகாரியம்.

நல்லது! என்நண்பனே! நீ என்னத்துக்காக உ ழைக்கிறாய்? வாக். உரு. ச-ல் சொல்லியபடி "ஐசுவரி யவனாகவேண்டுமென்று உழைக்காதே அதற்கான உன் னுடைய வினைவைவிட்டுவிடு." இதைவாசிக்கும், அல் லது வாசிக்கக்கேட்கும் கிறிஸ்தமானஎன்சகோதரியே, வாக். ஙக: ய அ, யகூ-உய-ல் சொல்லியகிருபைபெற்றவ ளைப்போல்உன்உழைப்பிருக்கிறதா? "அவள்விளக்கு இ ரவில் அணையாது,தன்கைகளை இராட்டினத்துக்கு நீட்டு வாள். அவள்விரல்கள் கதிரைப்பிடிக்கும், தன்கையைச் சிறுமையானவனுக்கு விரித்துத் தன்கரங்களைஎளியவனு ண்டைக்கு நீட்டுகிறாள்"என்பதின்படியே உன்உழைப்பு இல்லையென்றுகண்டால் சீக்கிரமாய் அவளைப்பின்சென் று அவளுடைய அன்பில் நீயும் ஒட்டிக்கொண்டு பாவ த்தினால் மிகவும் பரதபிக்கப்படத்தக்க நிலமையில்நின் றுதியங்கும் மலையரசனா சீவகனாசேர்க்கும்படி வகை பார்ப்பதேநன்று.

## XV. THEIR TRADE.

## ௰௫-அதிகாரம்.

### அவர்கள்வியாபாரம்.

ஈரடிச்சீர்.

இஞ்சியொடுகடுக்காய், ஏலமூந், தான்றி
மஞ்சள், தேன்மெழுகு, மணமாங்குந்துருக்கம்
மதித்திடுந், தந்தம், மான்கொம்பு, பலதும்
சுதித்திடும், பொருள்விற்றுக்கனதனமடைவர்.

அந்தச்சனங்கள் இஞ்சி, மஞ்சள், இவைகளைப்ப யிர்செய்து, அதனுடன்கடுக்காய், தான்றிக்காய், மலஞ் சாதிக்காய், தேன், மெழுகு, குந்துருக்கம், வெள்ளைக் குந்துருக்கம், மிளகாய், யானைத்தந்தம், மிளாக்கொம் பு, மான்கொம்பு, சாய்களிகிழங்கு தடிக்கப்பு, பிரம்பு, இப்படிப்பல பதார்த்தங்களைச்சேர்த்துப் பொருள்சம் பாத்தியஞ்செய்வார்கள். ஆனால் வியாபாரிகளோ, வெ குலேசாய் இவர்களைவஞ்சித்து பத்துப்பணம்பெறத் தக்கதை இரண்டுபணத்துக்குக்கொண்டு, தாங்கள் கொடுக்கும் வட்டில், செம்பு வஸ்திரம் நகை கட்டுகள் கத்திமுதலிய ஒருரூபாய்பெறத்தக்க பொருளை இரண் டுரூபாயென்று விலைவைத்துக்கொடுப்பார்கள். இப்ப டிப்பட்ட அநீதமானகிரயமாய் அவர்கள்கொண்டா லும், அதை அதிகச்சகாயமாய் வாங்கினோம் என்று புகழ்ந்துகொள்ளுவார்கள். ஆனால் புறம்பான ஆதா

யங்களை ஒருவன் மிகுதியாய்ப்பெற்று உலகம் முழுவதையுஞ் சம்பாதித்துக்கொண்டாலுந், தன் ஆத்துமாவை இழந்துபோனால் அவனுக்கு என்னலாபம்! ஆதலால் மத். ௧௬. ௨௬. ல். சொல்லியபடி தனக்குள்ள யாவையும்விற்று ஆணிமுத்தாகிய கிறிஸ்துவை ஆதாயமாக்கிக்கொள்வானானால் நித்தியசமாதானத்துக்குள்ளாவதுமன்றி, ஏசா. ௪௫: ௰௪ ல். சொல்லியபடி எகிப்தின் பிரயாசமும் எத்தியோப்பியரின்வர்த்தகலாபமும், நெடியஆட்களாகிய சபேயரின்வர்த்தகலாபமும் உன்னண்டைக்குத்தாண்டிவந்து உன்னுடையதாகும். அவர்கள் உன்பிறகேசென்று விலங்குகளில் நடந்துவந்து உனக்குள்ளே தானே தேவன் இருக்கிறார். அவரையல்லாமல் வேறே தேவனில்லையென்று உன்னைப்பணிந்துகொண்டு உன்னைநோக்கி விண்ணப்பம் பண்ணுவார்கள்" என்கிற நற்புகழ்ச்சிக்குரியவனாவாய்.

## XVI. TIME THEY REMAIN IN A PLACE.

———o———

## ௰௬ - அதிகாரம்.

———o———

### அவர்கள்ஓர்தோட்டத்தில்வசிக்குங் காலம்.

தோட்டமதிலேவசிக்குங்காலஞ்சொல்வேன்
சூட்சமுள்ளமானிடனேநன்றாய்க்கேளு
நாட்டமதாய்க்கிழங்குபலகனியின்காலம்
நலமாசமூன்றுநாலாண்டுவாழ்வார்

வாட்டமென்றுகண்டவுடன்வேறுகாட்டில்
வளமானசோலைதனைத்தெரிந்துகொண்டு
கூட்டமுடன்திரண்டுகுடிப்போகுமந்தக்
கோலமதைக்கிறிஸ்தவனேகுறிப்பாய்ப்பாரே.

அவர்கள் எப்பொழுதும் ஒரே இடத்திலே நிலையான வீடுவாசல்களைக்கட்டி ஸ்தாபகமாயிருக்கமாட்டார்கள். மலைகள் முழுவதும் அவர்கள் சுயாதீனத்துக்குள்ளிருப்பதினாலே சுகதுக்கங்களுக்கேற்றபடி தங்கள் இருப்பிடங்களை மாற்றுதல்செய்து இஷ்டமான இடங்களில் தங்கள் வீடுவாசல்களை ஸ்தாபித்துக்கொள்வதுண்டு.

காய்கனி கிழங்கு இவைகள் சம்பூர்ணமாயிருக்கும்வரைக்கும் இருப்பிடமுஞ்சௌக்கியமாயிருக்கும். ஆனால் தின்பதார்த்தங்கள் குறைவுபடுங்காலங்களில் மனதுக்குங் குறைவுநேரிடும். இதற்குள்ளாக மூன்று அல்லது நாலுவருஷங்கள் சென்றுபோம். இதற்கிடையிற்றானே வேறு நல்லகாட்டைத்தெரிந்து தோட்டத்தைத் தயார்செய்து ஆகாரத்துக்கு வேண்டிய பதார்த்தத்தை முஸ்திப்பாக்கியிருப்பார்கள். தங்கள் குடியிருப்பிலே போஜனாதிகள் குறைந்தவுடனே தங்கள்பண்டம்பாடி, துணி மணி, பெட்டிபேழை, நகைநட்டு முதலிய அவசியங் தேவையானதும் விசேஷித்ததுமான சாமான்களைமாத்திரம் எடுத்துக்கொண்டு, வீடுவாசல்

சட்டில், மெத்தை, முதலியவைகளையெல்லாந் தங்கள் இருப்பிடத்தில் தானே போட்டுவிட்டுப் புதிதாய் எத்தனஞ்செய்த வேறு தோட்டத்துக்குப்போய்விடுவார்கள்.

இது கவனிக்கப்படத்தக்க காரியம்; தேகத்துக்குரிய போசனபதாா்த்தங்கள் எவ்விடத்தில் அகப்படுமோ அவ்விடத்தையே தங்களுக்குப்பிரீதியாகப்பாவித்துத் தங்கள் வீடுவாசல்களை முதுகில் சுமந்துகொண்டு திரிகிறவர்களைப்போலிருக்கிறார்கள். ஓரிடத்தில் அவர்கள் நிலையான வீடுவாசல்களைப் பலமாகக்கட்டி, நித்தியகாணியாட்சியைப்போல்ப் பாவியாமல், யாத்திரைக்காரப்பரதேசிகள் தங்குஞ் சத்திரம் சாவடிபோல தங்கள்வீடுகளைப்பாவித்து நாட்கழித்துவருகிறார்கள். இவர்கள் அழிந்துபோகும் போஜனதிகளைத்தேடித் தங்கள்தேகத்தைப்போஷித்துக்காக்க வகைதேடுகிறதுபோலகிறிஸ்துவின் பிள்ளைகள்எண்ணுகிறதில்லை. உ. கொரி. ரு: சு, எ-ல்சொல்லியபடி, அவர்கள் "இந்தத்தேகத்திலே குடியிருக்கையில் தரிசித்து நடவாமல் விசுவாசித்து நடக்கிறதால், கர்த்தாவைச்சேராத வழிப்போக்கராயிருக்கிறோமென்றறிந்து எபி. கக: கரு-ன்படி வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளையடையாமல்,தூரத்திலேஅவைகளைக்கண்டுவாழ்த்துதலோடே விரும்பி, பூமியின்மேலே தாங்கள் அந்நியராயும் வழிப்போக்கராயும் இருக்கிறதைஅறிக்கைபண்ணிவிசுவாசத்தோடேஇறந்து," நித்தியவீட்டிற்சேர்ந்

து அழியாப்பொக்கிஷத்தைப்பெற்றுச் சுகித்திருக்க நாடுவதினுலே, இப்பூமியில் நிலையான வீடுவாசலில் குடியிருந்தாலும், க. மோ. ௪௭. ௯ - ல். யாக்கோபைப்போல "நான் பரதேசம்பண்ணின நாட்கள் நூற்றுமுப்பது வருஷங்கள். ஆயினும் அவைகள் கொஞ்சமும் பொல்லாப்புமாயிருக்கிறதென்று" சொல்லித், தங்கள் பிரயாணத்தை முடிக்க வகைதேடுகிருர்கள்.

இதை வாசிக்கும் நண்பனே! காணியாட்சியான நித்தியவீடும் அழியாப்பொக்கிஷமாகிய சீவபோஜனமும் இவ்வுலகில் எவருக்குமில்லை என்பதையறிந்து, நாம் மெய்விசுவாசிகளின் நன்மாதிரியைப் பின்பற்றிப் பரமபாக்கியத்தைப் பெற்றனுபவிக்க கருதுவோமாக.

## XVII. THEIR JEWELS.

## ௰௭-அதிகாரம்.

### மலையரசரின்பூஷணுதிகள்.

குறவஞ்சித்தரு.

(க.) சுந்தரஞ்சேர் கிரிதனிலே சொகுசாகவாழும்
சூட்சமுள்ள மலையரசர் சூட்டும்பணிகேளாய்
விந்தையுள்ளகடுக்கனுடன் மேல்முருகுந்தொங்கல்
விதவிதருத்திராட்சமணி மேசிலருந்தொடுப்பார்

(உ.) அந்தமுள்ளபெண்கள்சூடும்ஆபரணங்களோய்
அழகானதொங்கல்கொப்பும் ஆனகம்மலுடனே
எந்தவிதக்காதணியும் ஏற்றகட்டைச்சூடி
இன்பமுடன்கந்தரத்தில் பலமணிகளிசைப்பார்.

(ந) கைதனிலே கடகம்பல காப்புகளுந்தாக்கி
கனத்தபுசந்தோள்க்காப்பு கனமுடனேயணிவார்
மெய்கரத்தின் விரலாணி விதவிதமாய்ப்பூண்டு
வேகமதாய்த்தானணிந்து வீற்றிருப்பாரம்மே.

(சு) கனகநவகோணமதில்க்காறைக்கம்பிச்சூடி
காலாழிப்பீலிமற்றுங்கால்விரலிற்றொடுப்பார்
புனவமொன்றகுறிஞ்சிநிலத்திறைவன்றேவிமார்கள்
பூண்டருளும்பூடணங்கள்பூரணங்காணம்மே.

புறநாட்டுச்சனங்களைப்போல இவர்களும் பலந கைகளை அணிந்துகொள்வதுண்டு. புருஷர் தங்கள்காதில் ஒருவகையான சிறிய பொற் கடுக்கனையும், சிலர் பித்தளைக்கம்பியிற் கோர்த்த பச்சைக்கல் முருகுகளை யும் காதில்த் தொடுத்துக்கொள்வார்கள். வேறு சிலர் ருத்திராட்ச மாலைகளைக் கழுத்தில் அணிந்துகொள்வது முண்டு.

பெண்களுடைய நகைகள் ஏகதேசங் குறத்திகளுடைய ஆபரணங்களுக்கொப்பாயிருக்கும். காதில் ஒருவகையான கம்மலையும் நீண்டகொப்புகளையும் போட்டுக்கொள்வார்கள். சிலர் கம்மலுக்குப் பதிலாக மரக்

சுட்டைகளையும் மூக்கில்வாளியையும் போட்டுக்கொள்வ துமுண்டு. அன்றியும் பல வகையான பாசி பவழங்களைக் கோர்வையாக்கி மிகுதியாய்த் தங்கள் கழுத்திலணிவார்கள். முன்னங்கையில் பலபித்தளை வளையல்களையும் புசத்தில் தோள்க்காப்புக்களையும், கைவிரல்களில் பலவகையான மோதிரங்களையும், கால்விரலில்க் காலாழி முதலியப் பீலிகளையுந்தரித்துக்கொள்வார்கள்.

சகோதரனே; இதுபுறம்பான வேடிக்கையேயன்றி வேறில்லை. பல ஆபரணங்களை அணிந்த மனுமக்கள், தங்களையும் இவைகளைத் தந்த தேவனையும்மறந்து ஏசா. ௩. ௰௬-ன்படி கழுத்தைநெறித்து கண்களால்மருட்டி தத்திக்குத்தி நடந்தால் ௧௭-௨௧-வரையும் சொல்லிய படி ஆண்டவர் சீயோன் குமாரத்திகளின் தலையை மொட்டையாக்கி, அவர்கள் மானத்தை அம்மணமாக்குவார். அவர்கள் பாடகங்களின் சிங்காரத்தையும், சுட்டிகளையும், பிறைச்சிந்தாக்குகளையும், ஆரங்களையும், சரிகைகளையும், மினுக்கு வஸ்திரங்களையும், தலையின் ஆபரணுதிகளையும், அஸ்தகடையங்களையும், சரடுகளையும், மார்க்கச்சைகளையும், உருவல்களையும், மோதிரங்களையும், மூக்குத்திகளையும், அவர்களைவிட்டு விலக்குவார். அன்றியும் உ௬-ன்படி அவள் வாசல்கள் சஞ்சலமும், துக்கமுமாயிருக்கும்; அவள் வெறுமையாய்த் தரையில் உளுக்காருவாள். என்ற எச்சரிப்பைக்கவனித்து, புத்தியைமருட்டத்தக்க பொன்னுபரணங்களின்பேரில் நம

துநாட்டத்தைவையாமல் சீவநாயகனுக்குப் பிரியா னதிவ்வியபூடணங்களையணிந்து, அவரின் சித்தப்படி சீர்கெட்டபாவிகளை நன்னெறியில்த்திருப்ப பிரயாசப் படுவோமாக. அப்படிச்செய்தால் அவர்களே மறுமை யில் நமது கிரீடத்தின் இரத்தினங்களாயிருப்பார்கள்.

## XVIII. THEIR MARRIAGES. AND CHASTITY.

———o———

## ௰அ - அதிகாரம்.

அவர்களுக்குரிய விவாகமுறையும் கற்புநெறியும்.

(க) பேரப்பாகலியாணவகையைக்கேளு
பெண்ஆணில்மூப்பிளமைபார்க்கமாட்டார்
சேரப்பாஇரண்டொருபெண்சேர்க்கைபோல்
சேகரமாய்விருந்துண்டுஇனங்கள்கூடி
பாரப்பாதவில்முரசும்அடித்துக்கொண்டு
பண்பாகமங்கிலியஞ்சூட்டிக்கொள்வார்
சீரப்பாமிதமிஞ்சிசெய்யாநிற்கும்
சீர்தனையேகிறிஸ்தவனேசிந்திப்பாயே.

(உ) கல்விசற்றுமறியாதகாட்டுமாந்தர்
கானகம்வாழ்மலையரசனொன்றுசொல்வோர்
வல்விதமாய்விபசாரம்பொய்யும்இரண்டும்
மாகொடியபாதகமென்றகற்றிவைத்து

நல்மனதாய்ப்புருடனுடன்மனைவிவிட்டு
நழுகாமல்வசித்திருக்கும்நயத்தைப்பார்த்து
தொல்புவியின்கிறிஸ்தவனேவிழித்துக்கொண்டு
துரிதமுடன்கற்பணிந்துசுகித்துவாழ்வாய்.

விவாகமுறை. அவர்களுடைய விவாகசம்பந்தங்கள் உள்நாட்டாருக்கு ஒப்பந்தமாயிருந்தாலும், சற்றே வேற்றுமையாயிருக்கும். பெண், ஆணில் மூப்பு இளமை என்கிறவித்தியாசம் அத்தனையாய்ப் பார்க்கமாட்டார்கள். தனக்கிஷ்டமானபடி ஒவ்வொருவன் இரண்டொருபெண்களை விவாகஞ்செய்துகொள்வதுமுண்டு. ஆனால்முறைகெட்டவிதமாயல்ல, தங்கள் இயல்புக்குத் தக்கதாக, அரிசி, காய்கறி, வெற்றிலே, பாக்குமுதலிய சாமக்கிரகங்களைப் பரியமாகக்கொடுத்து, குறிக்கப்பட்டதினத்தில் இனசனங்கள் கூடிவந்து உடுக்கை, முரசுமுதலிய வாத்தியங்கள்முழங்க, மங்கிலியப் பெண்கள் குரவையிட, மிகவும் எக்களிப்பான சத்தத்தோடு மங்கிலியம் பூட்டுவார்கள். அச்சமயத்தில் மச்சான் கொழுந்திமுதலியவர்கள் மாப்பிள்ளையையும் பெண்ணையும் பலவகையாய் வாழ்த்தி,உபசரித்து அப்பால் விருந்துண்டு மகிழ்ச்சியாயிருப்பார்கள். அவர்களில் கைம்பெண்களைக்காண்பது அரிது. ஆனால் அவர்களின்நேர்மை அப்படியிருக்க, உள்நாட்டிலுள்ள வாலிபஸ்திரீகளாகிய கைம்பெண்கள் விவாகஞ்செய்யக்கூடாதென்கிற சபிக்கப்பட்ட கட்டுப்பாட்டினாலே சிலர் கற்புங்

குலைந்து, மேன்மையுமிழந்து, தேகமுஞ்கெட்டு, சந்தைகள் திருவிழாநடக்குமிடங்களெல்லாம் அலைந்து திரிந்துநாறி, நிர்ப்பந்தகோலமாகி மிகவும் பரதபிக்கப் படத்தக்க விதமாய் மாண்டழிந்து போகிறார்கள். க. கொரி. எ. கூ-ல், "வேகிறதைப்பார்க்கிலும் விவாகம்பண்ணுகிறதேநலம் என்றவேதவாசகப்படி, மலையரசரின் கைம்பெண்கள் விவாகஞ்செய்துகொள்ள மனமிருந்தால், விவாகமில்லாக்கன்னியர்வண்ணமாய் இனசனக்கூட்டத்தோடு கலியாணஞ் செய்துகொள்ளுவார்கள். இப்படிச்செய்வதற்கு யாதொருதடையுமிராது. விவாகஞ்செய்வதே அவர்களுக்குமேன்மை; இது வேதசட்டத்துக்கும் ஏற்றதாயிருக்கிறது. க. தீமோ. ரு. கச-ல் பாலவயதுள்ளவிதவைகள்விவாகம்பண்ணவும் பிள்ளைகளைப்பெறவும், வீட்டைவிசாரிக்கவும், விரோதியானவன் நிந்திக்கிறதற்கு இடம் உண்டாக்காமலிருக்கவும், வேண்டுமென்றும், க. கொரி. எ. கக-ல். பிரிந்துபோனால் அவள் விவாகமில்லாதிருக்கக்கடவள். அல்லது புருஷனோடே ஒப்புரவாகக்கடவள். புருஷனுந் தன்மனைவியைத் தள்ளிவிடக்கூடாது, என்ற வேதசத்தியப்படி இசைந்திருக்கிறதுமல்லாமல், தகுந்தகுற்றமின்றி ஒருவனை ஒருவர் விட்டுப்பிரியமாட்டார்கள்.

ஆனால், உள்நாட்டிலுள்ள அஞ்ஞானிகள் தங்கள் பெண்சாதிகளோடு வாசஞ்செய்கிறதோடேகூடச், சில வைப்பாட்டிகளையும் வைத்துக்கொள்ளுகிறதுண்டு. ஆனால் மலையரசருக்குள் இப்

கவனிப்பு.

படிப்பட்ட துர்க்குணம் எவ்வளவுங்கிடையாது. என்ருலும், இரண்டுபெண்களைப் படைக்கிறது மோசமும் துன்பத்துக்கேதுவுமாயிருக்கிறது. உலகப்பழமொழிப்படி, இரண்டுபெண்சாதிக்காரனுக்குக் கொண்டையென்ன என்றும் "இரண்டுபெண்சாதிக்காரன் வீட்டில்நெருப்பணையாது" என்றும் சொல்லியதைக்கவனிக்கும்போது உண்டாகும் அவமானமும் வேதனையும் மகா பெரிதென்று தோன்றுமே, ஆகையால் ரு. மோ. உக. ௰ரு. ௰சு. ன்படி ஒரேமனைவியை விவாகம்பண்ணி அவளோடிசைந்திருப்பதேநன்று.

கற்பு.

இன்பந்தருகின்ற காவுகளில் வசிக்கும் மலையரசர்கள் வேதசத்தியத்தை யறியாதிருந்தும் க. கொரி. எ. உ-ல். "வேசித்தனங்களிராதபடிக்கு அவனவன் தன்மனைவியையும் அவளவள் தன்புருஷனையுங்கொள்வார்களாக" என்றதின்படி,விவாகசம்பந்தமாய்க்கூடி வாழ்கிறதேயல்லாமல், விபசாரம் பொய்என்ற தகாதபாவங்களில் அவர்கள் பிரவேசிக்கிறதேயில்லை; சிலர் தங்கள் அறியாமையினலே பொய் சொன்னபோதிலும், விபசாரமானது அவர்களுக்குள்ளே மகா அருவருப்பாயிருக்கும். ரு. மோ. உ௩. ௰எ. ௰அ-ல். "இஸரவேலின் குமாரத்திகளில் வேசிகளிருக்கவேண்டாம். இஸரவேலரின்குமாரரில்வேசிக்கள்ளனுமிருக்கவேண்டாம். விபசாரமும் வேசிகளின்பிணையும் உன்பராபரனுகிய கர்த்தருக்கு அருவருப்பு" என்

று கூறிய வேதப்பிரமாணத்தையறியாதவர்கள் தங்களில் விபசாரகுற்றத்தில் அகப்பட்டவர்களைக் குற்றவாளிகளென்றுகண்டால், அப்படிப்பட்டவர்களை உடனே தங்கள் இனத்தையும் ஊரையும் விட்டு அப்புறப்படுத்துவார்கள். அவர்கள் அப்புறப்படத் தாமதப்பட்டால் வெகு கொடூரமுகத்தைக்காண்பித்துச் சீறிச்சினந்து, நாறப்புலையன்றே மகனே! இவ்விடம் நில்லாதே, நின்னைக்களைந்துபோடுவோம், என்றுவற்புறுத்தித் துரத்திவிடுவார்கள்.

கவனிப்பு.

இதைக்கவனிக்கும்போது விபசாரங் கொடியபாவமென்ற மனச்சாட்சியின் பிரமாணத்தை, எகோவாவானவர் மலைவாசிகளாகிய காட்டுச்சனங்களுக்குள்ளுந்துலக்கி யிருக்கிறார். என்றுவிளங்குகிறது. இவர்கள் அப்புறப்படுத்துஞ்செய்கை ந. மோ உ௰. ௰-ல். "ஒருவனுடைய பெண்சாதியோடே எவனொருவனாகிலும் விபசாரம்பண்ணினால் அப்பொழுது தனக்கடுத்தவன்பெண்சாதியோடே விபசாரம்பண்ணின அந்தவிபசாரனும் அந்தவிபசாரியும் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவார்கள்" என்ற, வேதசத்தியத்திற்கு இசைந்திருக்கிறதல்லவோ? காட்டுச்சனங்களாகிய இம்மலையரசர் ஏழாங்கற்பனையை நிறைவேற்றுவதைப்பற்றிக்கொண்டிருக்கிறவயிராக்கியம் எவ்வளவு ஸ்திரமாயிருக்கிறது. எபி. ௰௩. ௪-ல். "விவாகமஞ்சம் அசுசிப்படாதிருப்பதாக, வேசிக்கள்ளரையும்

விபசாரக்காரரையும் தேவன்நியாயம் தீர்ப்பார்" என்பதை, அறிந்து கற்பாகியவஸ்திரத்தைப்போர்த்துக்கொண்டு, பரமகாவலாளனாகிய கிறிஸ்து இயேசுவைத்தரிசித்து,அவர் கற்பிக்கும்நன்னெறியில் நடப்போமாக. இப்படி நடவாவிடில், வெளி. உக. அ-ல். சொல்லியபடி "வேசிமார்க்கர் இரண்டாம் மரணமாகிய அக்கினியுங் கந்தகமும் எரிகிறகடலில்ப் பங்கடைவார்கள்" என்கிற தீர்ப்புக்கு உள்ளாகவேண்டியதாய்வரும் ஆதலால், விழிப்பாயிருப்போமாக.

## XIX. THEIR MODE OF COMPUTING PERIODS OF TIME, WEEKS AND AGE.

———o———

### ௰கூ-அதிகாரம்.

நாள், வாரம், வயது, முதலியவையறிதல்.

கும்மி.

(க.) பாத்திரமாகப்பிறந்தகுழந்தையின்
பாங்கானநாளையறிவதற்கு
சூத்திரமாயோர்கொடியில்முடிப்பிடும்
சூட்சத்தைப்பாராய்கிறிஸ்தவனே.

(உ) நாளும்வாரமும் ஆண்டும்மாதமும்
நன்றாய்அறிந்து கொள்வதற்கு
நீளுங்கொடியில் முடிப்பிட்டுவைக்கும்
நேர்மையைப்பாராய் கிறிஸ்தவனே.

(௩.) உந்தனுடபிள்ளை வயதென்னவென்று
உற்றுக்கேட்கில்ச் சொல்லுமொழிகேள்
இந்தக்கொடியின் முடிப்பைப்பார்த்து
எண்ணிக்கொள் என்பார்கிறிஸ்தவனே.

(௪) இப்படியாகப் பெரியோர்வீட்டுக்
கித்தனைநாளையிற் போகவென்று
அப்படியே முடிப்பிட்டுநறுக்கி
அந்நாள் அறிவார் கிறிஸ்தவனே.

விருத்தம்.

புத்தியற்றமனிதரொன்றுசொல்லப்போமோ
புனிதமதாய்வயதறியும்வகையைப்பார்த்தால்
சுத்தமதாய்மலையாளதேசந்தன்னில்
சொருசாகஉற்சவத்திற்கேகிச்சென்று
பத்தமதாய்ஆவணியின்ஓணந்தன்னைப்
பாந்தமதாய்அசரித்துவந்தபின்பு
வித்தகமாய்க்கொடியில்முடிப்பிட்டுவைக்கும்
விந்தைதனைக்கிறிஸ்தவனேவிழித்துப்பாரோ.

நாள்வாரமறிதல்.

அவர்கள் நாட்களையும், வாரங்களையும், மாதங்களையும், வருஷங்களையும், கொடியிற்போட்ட முடிப்பின் மூலமாகவே தெளிவாய் அறிந்து கொள்வார்கள். பிறந்த குழந்தையின் தினத்தையறியவும் அவஸ்தைமுதலிய குறிகளைக் கணக்கிடவும் நாளுக்கொரு முடிப்பிட்டு, இவ்வகை

யாய் நாள்வாரம் முதலியவைகளைத் தொகையேற்றிக் கொள்வார்கள். உறவின்முறையார் முதலிய சிநேகிதர், பிறந்த குழந்தையின் நாள்வாரமாகிய தினங்களை விசாரிக்குங் காலத்தில், இக்கொடியின் முடிப்பைப்பார்த்து எண்ணிக்கொள் என்று முடிப்பிட்ட கொடியை எடுத்துக்கொடுப்பார்கள்.

போகவேண்டியதினமறிதல்

அன்றியும் சிநேகிதர் பெரியோராகிய அயலார் தங்களை இன்னதினத்தில் வரவேண்டுமென்று செய்தியனுப்பியிருந்தால், அல்லது தாங்களாய்ப் போகவேண்டியதிருந்தால், போகவேண்டிய்தினங்களுக்குச்சரியாய் ஒரு கொடியில் முடிப்பிட்டு, நாள் ஒன்றுக்கு ஒருமுடிப்பைநறுக்கிப்போகவேண்டியதினத்தையறிந்து, காய்கனிகிழங்கு, தேன் முதலிய சாமக்கிரியைகளோடு, குறித்தநாளையில் போகவேண்டிய மனுஷாள் வீட்டில் சரியாய்ப்போய்ச்சேருவார்கள்.

சவனிப்பு.

கிறிஸ்தவனே! எழுதவாசிக்க அறியாதகாட்டுச்சனங்கள் தங்கள் நாட்களை இவ்வகையாய்க்கணக்கிட்டு, கிரமப்படி சகலத்தையும்ஒழுங்காய்ச்செய்வது மெய்யானால் கல்விகற்றறிந்து, திவ்வியஒளியின் பிரகாசத்தால் கண்கள்தெளிவிக்கப்பட்டிருக்கிற நாம்எப்படி நடக்கவேண்டும்? ஒவ்வொருவனுங் அவர்களைப்போல குழந்தைகளைப்பற்றியே யோ

சியாமல் தன்தன்னையேநிதானித்துப்பார்த்து, உலகத்தி ன்வழிப்பாடுகளில்நின்றுநீங்கி, யோவா. ௩. ௩. ல் "ஒரு வன்மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய இராச் சியத்தைக் காணமாட்டான்" என்ற, திருவாக்கைக்கவ னித்து நாம் ஆவியினால் மறுபிறப்படைந்தோமோ இல் லையோ என்றுசிந்தித்து, அப்படியடைந்திருந்தால் அந் நாட்களின் தொகையையும் கணக்கேற்றிவருகிறோமோ அன்றியும் நம்மைப்பிடித்ததொத்துவியாதிகளாகிய அக ந்தை, வஞ்சகம், பொறாமை, தற்பொழிவு, சாதிப்பெரு மை மூர்க்கம்முதலியவைகள் எவ்வளவுகாலமாய் நம் மைப்பிடித்திருக்கிறது, அந்தவியாதிகள் நீங்கவேண்டு மானால் நாம் பிரயோகஞ்செய்யவேண்டிய அவிழ்தங்க ளென்ன, அவைகள் நம்மைவிட்டு நீங்கியிருக்குமானால் மத். ௰அ. ௩-ல். சொல்லிய பிள்ளைக்கேற்ற சுபாவங்கா ணப்படுகிறதா, அப்படி இல்லையானால் நாம் பாவத்தினா லே தொய்ந்துமோசம்போகாமல் தேவவசனமென்னுங் களங்கமில்லாப்பாலினாலே நம்மை முசிப்பாற்றிக்கொ ள்ள வகைபார்ப்பதேநன்று.

அன்றியும் ஒருபெரியவர் நம்மைவரும்படியாக த்தமதுதூதனை யனுப்பியிருக்கிறார்; அவர் நம்மைக் கண்டு சந்திக்குங்காலம் இன்னவேளையென்றுதெரியா து. க. தெச. ரு. உ. ன்படி புறப்பட்டதூதன் இரவி ல்திருடன் வருகிறதுபோல நம்மிடத்தில் வருவான் ஆகையால், நம்முடைய பயணமுஸ்திப்பை எத்தனப்ப

டுத்திநம்மைஅழைத்தவரின்சன்னிதானதரிசனங்காண, ஆயத்தமாயிருக்கிறேமா இதை நன்ருய்ப் பரிசோதனை பண்ணி க. தெச. ரு. கூ. ன்படி மற்றவர்களைப்போல, நாம் தூங்கிவிழாமல் விழித்துக்கொண்டு தெளிவாயிருப்போமாக.

இப்படியிருப்பதுமெய்யானல் நமது விழிப்பின் தீபத்தைக்காரிருட்டில்த்தியங்கும் மலைவாசிகளினிடம் காட்டத்தாமதிப்போமோ?

வயதறிதல்.

அட்சர் அப்பியாசம் முதலாயறியாத காட்டுச்சனங்கள் தங்கள் ஆயுசின் நாட்களையும் ஓர்வகையாய்க் கணக்கிட்டுக்கொள்ளுவார்கள். எப்படியென்றால், ஆவணிஓணமென்றுசொல்லப்படுகிற உற்சவத்திற்குத் தங்கள்சமுசாரசகிதமாய் மலையாளதேசத்துக்குப்போய் அங்கேயுள்ள பற்பநாதன், பகவதிமுதலிய பேய்களை நமஸ்கரித்து தங்கள்இயல்புக்கேற்றதாய்ப் பண்டிகையைஆசரித்துப், புதியவஸ்திரங்களை வாங்கியுடுத்திக்கொண்டு, அகமகிழ்ச்சியாய்த் தங்கள்வாடிகளுக்குத் திரும்புவார்கள்.

வீடுசேர்ந்தபின்பு தங்கள் இனசனபந்துகளை மினவிவாழ்த்துதல் செய்தானவுடன், ஓர்வகையான கொடியில் ஒருமுடிப்பிட்டு, பின்பு வருஷாவருஷம் அக்கொடியில்த்தானே இவ்வகையாய்ச்செய்து,தங்கள்ஆயுசின் நாட்களைக்கணக்கிட்டு அறிந்துகொள்ளுவார்கள். மலை

யாளதேசத்துக்குப்போக ஏதுவில்லாதவர்கள், மலையா
ங்குளத்திலாவது, தங்கள் இருப்பிடத்திலாவது பண்டி
கைகொண்டாடி, மேற்காட்டியவிதமாய்ச் செய்துகொள்
வதுமுண்டு. இதுவிந்தையானகாரியமென்று சொல்
லத்தக்கதாயிருக்கிறது.

ஆனாலும் இவ்வகையான பத்தியைச் சீவனுள்ள
மெய்த்தேவனில்வைத்துத், தங்கள் ஆயுசின்வருஷங்
களை அவருக்குப் பிரியமான விசேஷித்த தாலந்தாகத்
தொகையேற்றுவார்களாகில், இதுமேன்மையான யூகம்
என்றுசொல்லலாம். அப்படிக்கன்றிப் பாவத்துக்குத்
தண்டனையாக எசேக். ௪. ரு. ௬. ன்படி அவர்களுடை
யஅக்கிரமத்தின் வருஷங்களை நாள்க்கணக்காய் எண்
ணிப்பாவமாகிய அக்கிரமச்சுமையை அதிகமாக்கிக்கொ
ள்வதினால் என்னபிரயோசனம்? சங். ௯௰. ௯, ௧௦.
ன்படி "எங்கள் நாட்களெல்லாம் உமதுசினத்தால்போ
ய்விட்டன. எங்கள்வருஷங்களை ஒருகதையைப்போல
கழித்துவிட்டோம். எங்கள் ஆயுசுநாட்களில் எழுபதுவ
ருஷம் வெகுபலத்திருந்தால் எண்பதுவருஷமுமுண்டு.
இவைகளின் மேன்மையானதோவென்றால் பிரயாசமும்
வீணுமாயிருக்கிறது" என்றும், சங். ௩௯. ரு. ன்படி
"இதோ நாலுவிரற்கடைகளாய் என் நாட்களை அளவிட்
டீர், என்னுடைய ஆயுசுஉமக்குமுன்பாக ஒன்றுமில்
லாததுபோலிருக்கிறது. எந்தமனுஷனும் மாயை" என்
கிறதும் நிசமாயிருக்கிறதினாலே, இவ்வுலகத்தின்வாழ்

நாளைக்கணக்கிடுவதைப்பார்க்கத், தேவனாலே கிருபை யாய்க்கொடுக்கப்பட்ட கொஞ்சநாளை வீணாய்க்கழித்து விடாமல், பவுல் அப்போஸ்தலன் எபே. ரு. யசு-ல் சொல்லியபடி நாம்காலத்தை ஆதாயமாக்கிக்கொள்ளப் பிரயாசப்படவேண்டும்.

இப்படி காலத்தை ஆதாயமாக்கும் வியாபாரிகள், அறிவீனமுள்ள மலைவாசிகளின் ஆத்துமாக்களை இரத் தினக்கற்களாக்கி பரத்தின்பொக்கிஷத்தில்க் கூட்டிச் சேர்க்கத் தாமதப்படுவார்களோ?

## XX. THEIR HOSPITALITY.

## உய-அதிகாரம்

### பிறரையுபசரித்தல்.

ஆதரவாய் உள்நாட்டில் வசிப்போர்தன்னை
அன்பாகக் கண்டவுடன் வணங்கிவந்து
போதரவாய்ச் சுகித்திருக்கப் புறையுங்கட்டி
புனிதமுடன் காய்கனிகள் கிழங்குதேனும்
தீதறவே வாழையிலை தனில்பரப்பி
தின்பதற்குப் பெரியோரை யுபசரித்து
நீதரவே அமுதுபல வேண்டுமென்னும்
நேமகத்தைக் கிறிஸ்தவனே நினைந்துபாராய்.

அவர்கள் உள்நாட்டாராகிய அந்நியர், அல்லது பாண்டியதேசத்து சனங்கள் தங்களைப் பார்க்கும்படி

யாக வருகையில் வெகு பிரீதியாய் அவர்களை விசாரிப்பார்கள். அவர்கள் விசாரித்தல் புகழப்படத்தக்கதாயிருக்கும். எப்படியென்ருல், பெரியோர் முதலியவர்களைக்கண்டவுடனே அவர்கள் அருகிற்சென்று அன்பான வந்தனஞ்செய்து, அவர்கள் வசதியாயிருக்க நேர்த்தியான ஒரு புரையுங்கட்டி, இருந்தும்படுத்தும் இளைப்பாறும்படி, அட்டாளையென்கிற கட்டிலுஞ்செய்து அதின்பேரில்பெரியோர் வீற்றிருக்க, மற்றவர்கள் பாயில் உளுக்காரவுஞ்செய்து வந்தபெரியோருக்கு மகிமையாகஅவர்முன்னே ஒரு பெரியவாழை இலையைவிரித்து, அதின்மேல் குலைகுலையாய் வாழைப்பழங்களும், பலவகையான சுட்டகிழங்குகளும், சுட்டசோளக்கதிர்களும், தேன், தினைமாவு முதலியபோசனுதிகளும் வைத்துப் பெரியோர் அவைகளை எடுத்துப் புசிக்கும்படியாகச் செய்து பின்பு தங்களுக்குவேண்டிய உண்பான், தின்பான், அரிசி, உப்பு, வஸ்திரம் முதலியவைகளைக்கேட்டுப் பெற்றுக்கொள்வார்கள். ஆனல் உபகாரிகளில்மாத்திரம் அவர்கள் அதிகநேசத்தைக்காட்டுவார்கள். மற்றப்பொதுவான சனங்களைக்கண்டாலும், அவர்களையுந் தங்கள் இயல்புக்குத்தக்கதா யுபசரித்து அனுப்புவார்கள்.

அப்படியிருக்க விவேகியாகிய நற்கிறிஸ்தவனே!

கவனிப்பு.

நாம் அறியாதசகாயன் ஒருவர் நமது அருகில்வந்து நிற்கிருர். அவர் மன்னுயிர்க்காகத் தன்னுயிர்விட்ட ரட்சகர். அவர் வெகுதூரத்திலிரு

ந்து நம்மைச்சந்திக்க, மகாஇளைப்பும் ஆயாசமுமுடையவராய் நமதுபக்கத்தில்வந்து நிற்கிறார். ஆனால் அவர் வெறுமையாய் வரவில்லை; சகலவித சம்பூரணபாக்கியங்களும் ஏராளமாகத் தமதுகரங்களில் ஏந்திக்கொண்டு வெளி. ௩. உ௰. ன்படி "இதோ! வாசற்படியில் நின்று தட்டுகிறேன். ஒருவன் என்சத்தத்தைக்கேட்டுக்கதவைத்திறந்தால், அவனிடத்தில் நான்பிரவேசித்து அவனோடே போசனம்பண்ணுவேன். அவனும் என்னோடே போசனம்பண்ணுவான்" என்று கூப்பிட்டுக்கொண்டு நிற்கிறார். அவர் பிரதிபுபகாரம்பெற்றுக்கொள்ளாதகிருபையாளன், ஆகையால் தாமதமின்றி நமது இருதயமாகிய வீட்டின்வாசலைத்திறந்து, நம்மைச் சந்திக்கும்படி வந்துநிற்கும்அன்பருக்கு இடங்கொடுப்போமேயாகில், எண்ணடங்காத சுகுர்தபாக்கியங்களைப்பெற்று என்றுஞ்சுகித்துவாழ்வோம். இப்படிச்செய்வது மெய்யானால் இந்த அன்பரின் சத்தம்மலையரசரின்காதில்த் தொனிக்க முயலாதிருப்போமோ ?

## XXI. THEIR V1SIT TO THE KING.

---

## உக-அதிகாரம்.

—o—

### இராசதரிசனம்.

காணப்பாமலையாள விராசன்தன்னைக்
காண்பதுதான்மெத்தவிந்தை கருதிப்பாராய்
தோணப்பாகிழங்குபல கனியுந்தேனும்
சொகுசானதந்தமுடன் யாவுஞ்சேர்த்து

விணைப்பாகோவணமுந் தலையிற்சேலை
விந்தையுடனணிந்துகைவில் அம்புந்தொட்டு
கோணப்பா எந்தன்பொன் தம்பிரானென்று
கூறியதைக் கிறிஸ்தவனே குறிப்பாய்ப்பாரோ.

அவர்கள் இறைபகுதி யொன்றுங்கொடாமல் சுயா தீனராயிருந்து சகலத்தையுங் குறைவில்லாமல் அநுபவித்துவந்தும், மலையாள தேசத்தின் அரசனைத் தங்கள் பொன்னுந்தம்பிரானென்று போற்றி, நதிர்வைத்துத் தரிசனஞ்செய்கிறார்களாம். எப்படியென்றால் தேன், கதலி, மொந்தன், பேயன் முதலிய வாழைப்பழக் குலைகளும், பலவகையான கிழங்குகளும், கூண்டோடே தேனும், யானைத்தந்தம் கலைமான்கொம்புகளும், கடம்பையாகிய மிளாக்கொம்புகளும், பின்னுந் தங்கள் கையில் அகப்பட்ட நேர்த்தியான பதார்த்தங்களையும் சேகரஞ்செய்து, அரசன்முன்சென்று, தங்கள் வஸ்திரங்களைச் சிரசில்சுற்றி, நீளமுள்ள கோவணமும், கையில் வில்லும் அம்பும்பிடித்து, குறித்ததினத்தில் அரசனிடஞ்சென்று, "எந்தன் பொன்னுந்தம்பிரான் வாழ்க." என்று, மெத்தவும் பயபக்தியாயக் கைகட்டி, வாய்புதைத்து, வணங்கி நிற்பார்கள்.. அதன்பின்பு அரசன் அகமகிழ்ந்தவராய், இவர்களுக்குச் சில உபசார வார்த்தைகளைச்சொல்லி, அவர்கள் காணிக்கைகளை அங்கீகாரஞ்செய்து, இவர்களுக்கு வேண்டிய வஸ்திரமுதலியவைகளும், ஆகாரவிஷயத்துக்குரிய சாமக்கிரிகைகளுங்

கொடுத்து, விபரிசையாய் அனுப்ப, இவர்கள் ஆனந்தமகிழ்ச்சியாய்த் தங்கள் கிரகங்களுக்குத் திரும்புகிறதாகச்சொல்வார்கள். அப்படியிருக்குமாகில், இது மகாவிந்தையான இராசபேட்டி என்று சொல்லலாம். எப்படியென்றால் இந்துக்களால் மகாரிஷியென்று மதிக்கப்பெற்ற, அகஸ்தியமகாமுனி வசித்தவனத்தில் சஞ்சாரஞ்செய்கிறவர்களானதால், கோவணாண்டிகளாய்ச் சுவாமிதரிசனம், ஸ்தலதரிசனம், இராசதரிசனம் இவைகளில் இவ்வித சிலத்தராய்க்காணப்படுவார்கள்.

கவனிப்பு.

ஆனால் சகலதேசத்தரசரும் பாஷைக்காரருமாகிய குடிகள் யாவரும், வெளி. ச. ம. ன்படி தங்கள் கிரீடங்களைக்கழற்றி, அவர் பாதத்தில்வைத்துத் தரிசனஞ்செய்யத்தக்க ஏகசக்ராதிபதியாகிய மகா இராசா ஒருவருண்டென்றறிவோமே, அவரது மாட்சிமையான தரிசனங்கிடைப்பது மகா அரிது. என்றாலும் அவசியம் அவரைக்கண்டு சந்திக்க இடஞ்செய்து கொள்ளவேண்டும். இல்லையானால் மோசம் மெத்தப்பெரிதாயிருக்கும். ஆனால் அதற்குப்பொன்னும் பொருளும்வேண்டியதில்லை. உழைப்பும் விடாமுயற்சியான பிரயாசமுமே அதிகம்வேண்டும். இப்படிச் செய்வதற்கு இடையூறாயிருக்கிற துன்பம்நிறைந்த அலைகளினாலே சேதப்படாதபடிக்கு, எபே. கூ. மச. மஅ-ல் சொல்லியபடி, சத்தியம் என்னும் அரையின் கச்சையையும் நீதிஎன்னும் மார்க்கவசத்தையும், சமா

தானத்தைக்கூறும் சுவிசேஷத்திற்குரிய எத்தனமென்னும் பாதரட்சையையும், பொல்லாங்கன் எய்யும் அக்கினிப்பாணங்களையெல்லாம் அவிக்கத்தக்க விசுவாசம் என்னுங் கேடகத்தையும், இரட்சண்ணியம் என்னும் தலைச்சீராவையும் தரித்து, தேவவசனமாகிய ஆவியின் பட்டையத்தைக் கையிற்பிடித்து, ஆவியினாலே சம்பூரணசெபமும் விண்ணப்பமும்பண்ணி அவ்விராசனுக்குப் பிரீதியானகனி என்று, கலா. ரு. உஉ. உரு - ல் சொல்லிய அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடியபொறுமை, தயவு, நற்குணம், விசுவாசம், சாந்தம், இச்சையடக்கம், என்னும் நற்கனிகளைத் தங்கள் இருதயக் கமலத்தில் பணிவாய் ஏந்திக்கொண்டு, காரியக்கர்த்தனாகிய இயேசு இரட்சகரை முன்னிட்டு, அவர் சமுகஞ்சேர்ந்தால் குறைவில்லாத பரமதரிசனங்கிடைக்கும். இவ்வகையாய்த் தரிசிக்கும்பத்தரை அந்தமகாராசன் அங்கீகரித்து வெளி. எ. ௧ரு. ௧எ-ல் சொல்லியபடி, எக்காலமுந்தமது சமுகத்திடமாயிருந்து, இரவும் பகலும் பணிவிடைசெய்ய இடஞ்செய்வதுமன்றி, ஆசனத்தின்மேல் உளுக்கார்ந்திருக்கிறவரும், இவர்களோடே என்றும் வாசமாயிருப்பார். அப்போ இவர்களுக்கு யாதொரு குறைவும் நேரிடுகிறதில்லை. அந்த மகாராசனே இவர்களைமேய்த்துக் குறைவில்லாத சம்பத்தோடே என்றும் வாழ்ந்திருக்கச்செய்வார். ஆனதால் இப்படிப்பட்ட தயாளசீலரான அந்தப்பரம இராசனின் தரிசனங்காண

இந்தமலையரசர் ஆசைகொள்வார்களாகில் எவ்வளவு பாக்கியமாயிருக்கும். இப்பேர்ப்பட்ட பரமகாட்சியை அவர்கள்கண்டு மகிழ முயல்வோர் மகாபாக்கியராமே.

## XXII. DREAD OF THE CHOLERA AND THE DESERTION OF THE SICK.

——o——

## ௨௨ - அதிகாரம்.

விஷவியாதியால்நேரிடும் நடுக்கமும், வியாதியஸ்தனைவிட்டு விலகுதலும்.

ஆத்திரமாய்த்தீனம் வருங்காலந்தன்னில்
அன்பாகவேவருந்திப் பார்த்துக்கொள்வார்
சூத்திரமாய்அம்மை விஷபேதிவந்தால்
துடியாகப்புலிகண்ட மான்போலேங்கி
பாத்திரமாமனைவிபிள்ளை தாயென்றாலும்
பாங்கானதந்தையென்றும் பார்க்கமாட்டார்
நேத்திரம்போலிருந்தவர்கள்மருகிச்சாக
நெகிழ்வதைபுங்கிறிஸ்தவனே நேரிட்டேபார்.

விஷவியாதியின் நடுக்கம்.

பொதுவான பலவியாதிகள் அவர்களுக்குவரும்போது வியாதியஸ்தனை விட்டுப்பிரியாமல் அருகிலிருந்து வெகு பத்திரமாய்ப் பார்த்து, தங்கள் சாத்தாவுக்கு சாற்றுதலாகிய பொருத்தனையும்செய்து வேண்டிய அவிழ்தம்

முதலானதுங்கொடுத்து விசாரித்துக்கொள்ளுவார்கள். ஆனால் விஷபேதி, அம்மைஎன்கிற வைசூரிவந்துவிட்டால், மக்கள் படுகிறபாடுதான் என்னமாயிருக்கும். வேங்கையைக்கண்டமான்போலும், நாயைக்கண்டமுசல்போலும், இராசாளியைக்கண்ட கொக்குப்போலும், கருடனைக்கண்ட சர்ப்பம்போலும், புத்திமயங்கி, அறிவுதியங்கி,மனதுகலங்கி, தட்டுக்கெட்டுத்தடுமாறித்திடுக்கிட்டு, நடுக்குற்று, எழுந்து தங்கள் வீடுவாசல் யாவையும்போட்டுவிட்டு, ஒருசட்டியில் தண்ணீர்வார்த்து, அதிலொரு அகப்பையும்போட்டு, வியாதியஸ்தன்பக்கத்தில்வைத்துத், தாகமெடுத்தால் குடித்துக்கொள்என்று சொல்லி, பண்டம்பாடிகள் யாவையும்எடுத்துக்கொண்டு, உயிர்தப்பினேமென்று, புருஷன் தன்மனைவியையும், மனைவி தன்புருஷனையும் பிள்ளை தன்தாயையும், தாய் தன்பிள்ளையையும், சகோதரன் தன்சகோதரியையும், சகோதரி தன்சகோதரனையும், சிநேகிதர் தங்கள் அன்பரையும் உயிரோடுதானே கொடியகாட்டில்விட்டுத், திரும்பிப்பாராமல் வேறு காட்டுக்கு ஓடிப்போவார்கள். அப்பால் வியாதியஸ்தனை எப்படியிருக்கிறானென்று வந்துபார்ப்பதுஅரிதானகாரியம். இப்படிப்பட்டவர்களைப் பார்க்கவேண்டுமானால் தாங்கள்நன்றாயறிந்த ஒரு வயித்தியனுக்கு மூன்றுபணங் கொடுத்து அவனைப்பார்க்கச் சொல்லுவார்கள். வியாதிக்காரன் செத்துப்போனால் அந்த வைத்தியன்தான் எடுத்

துப்புதைக்கவேண்டும். ஆனால் அடக்கம்செய்யப்பட்டதோ இல்லையோ என்று உரிமையாளர்வந்து அதை பார்க்கமாட்டார்கள். வியாதிக்காரன் செத்தாலும் பிழைத்தாலும் வைத்தியனுக்கு பேசினதொகையைக் கொடுத்துவிடவேண்டும். வைத்தியனும்தனிமையாய் வந்துவியாதியஸ்தனைபார்ப்பதும் அரிதானகாரியம்.

மரணம்.

துன்பவாளியாகிய ஏழைமனிதன் தேவசெயலாற் பிழைத்தாலுண்டு. இல்லாவிட்டால் பலமும் புத்தியும் இருக்குமட்டும், தண்ணீரைமொண்டு சாப்பிட்டுப், பலங்குறைந்தவுடனே, உருண்டுபுரண்டு தண்ணீர்,தண்ணீர் என்று கூவி, நாவறண்டு பராமரிப்பாரின்றிப், பரிதாபமாய்ச் செத்து, புதைப்பாரற்று தேகமெல்லாம் வீங்கிவெடித்துப் புழுத்து, நிற்பந்தமாய் உப்பி உருவழிந்து பலவகையாய்க் கழிந்து போகிறான். ஆ! இது எத்தனை பரிதாபம். இப்படிச் செய்வது புத்தியோ?

கவனிப்பு

கிறிஸ்தமான சகோதரனே! மனிதன் பயந்து ஓடத்தக்க வியாதி இதுவல்ல, அது பாவத்தினால் வந்த பெரும் வியாதி. அது ஆத்துமாவையுஞ்சரீரத்தையுங் கெடுத்தழிக்கத்தக்கவியாதி. இப்படிப்பட்ட கர்மவியாதியஸ்தனைத்தான் விட்டுப் பிரியவேண்டுமென்று தேவன் தமது வசனத்திற் கற்பிக்கிறார். அவர்கள் யார்? சங். க. க. "ஆகாதவர்களுடை

ய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியி ல்நில்லாமலும் சரசக்காரர் உளுக்கார்ந்திருக்கிற இடத் தில் உளுக்காராமலும், இருக்கவேண்டுமென்றும், நீதி. க. கரு-ன்படி "நீ அவர்களோடே வழிநடவாமல் உன் காலை அவர்களுக்கு விலக்கமாகக் காத்துக்கொள்ளவே ண்டுமென்றும், சொல்லியிருக்கிறது. அப்படிசெய்யா விட்டால் கோருக்கின்வார்த்தைக்குச் செவிகொடுத்த உருய-பேர் அக்கினிக்கிரையானதுபோலஆகவேண்டும்.

ஆகையால் இப்படிப்பட்டதுன்மார்க்கரோடு அழி யாதபடிக்கும், தாமதித்துத் திரும்பிப் பார்ப்பதினுல் லோத்தின்பெண்டீர் போலாகாதபடிக்கும், எச்சரிக்கை யாயிருந்து, சு. மோ. யகூ. ஙங. ஙச. கோருகும் அவன்கூட்டத்தாருஞ்செய்த அக்கிரமத்தின் அழிவில் உட்படாதபடிக்கு விலகியோடின மற்ற இஸரவேலரை ப்போலும், சீவன்தப்பினுல்மாத்திரம் போதுமென்று, சகலத்தையும்போட்டுவிட்டு, க. மோ. யகூ. யஎ - ல் சொல்லிய தேவவாக்குப்படி திரும்பிப்பாராமல் ஓடிய லோத்தென்பவனைப்போலும் கடந்துபோகவேண்டிய து அவசியம். இவ்விதஅவசியத்தை மலையரசர்கண்டு பிடித்து துன்பப்படும் இனசனங்களைவிட்டுப் பிரியாதி ருக்கவும் பாம்புக்குவிலகி ஓடுவதுபோல பாவத்துக்கு விலகிஓடவும் அவர்களுக்கு தெளிவைக்காண்பிப்பது நமதுமேல்விழுந்த விசேஷப்பொறுப்பென்று நாம்நி னைக்கவேண்டும்.

## விண்ணப்பம்.

### விருத்தம்.

வானமொடுபுவியும் அதிலுள்ளதெல்லாம்
வகையாகத்தொகுத்தாறு நாளிற்செய்த
ஞானபரனேயுனது மகவையிந்த
நானிலத்தின்பவப்பலியா யீன்றநாதா
தீனமாம்அம்மை விஷபேதிஎன்னும்
தீதானவியாதிகட்கஞ் சாமல்நிற்கக்
கானகம்வாழ்மலையரசர் தம்மைத்தேற்றி
காத்துரட்சித்தருள் புரிவாய்கருணைத்தேவே.

## XXIII. BUIRIAL.

—————o—————

## உகூ - அதிகாரம்.



### அவர்களின் அடக்கம்.

### கும்மி.

க. என்னசொல்வேன்கிரிவாழும் அரயன்மார்
இப்படியாகத்தியக்கமுற்று
பின்னப்படவிட்டு வேறுகாட்டுக்கேகும்
பேதமையல்லோ கிறிஸ்தவனே.

உ. தீனப்பட்டோர்தனித்திருந்து உண்ணத்
தின்பண்டந்தண்ணீர்கொடுப்பாரற்று
மானப்பட்டுயிர்செத்துமடிந்தசம்
மாறியழிவார் கிறிஸ்தவனே.

௩. நேராய்ச்சாகுவோர் தன்னையுந்திட்டமாய்
நேர்த்தியதாகப்புதைப்பதன்றோ
சீராய்க்குழியிற்போட்டிலையால்மூடும்
சீர்கேட்டைப்பாராய் கிறிஸ்தவனே.

௪. உரிமையாகவளர்த்தஉன்அன்பரை
இப்படிச்செய்வதுஎந்தாணும்
பிரியந்தப்பிசுளைஞ்ச பிரேதத்தைப்
பேணுவதென்ன கிறிஸ்தவனே.

அம்மை,விஷபேதி என்கிற கொடியவியாதிகளால் மலையரசருக்குண்டாயிருக்கிறபயம் எத்தனைபெரிதாயிருக்கிறது. இவ்வகையான வியாதியால் இறந்துபோனவர்களுடையதேகம் கல்லறைகாண்பது அபுரூபம். ஆனால் வேறுவியாதிகளினால் சாகிறவர்களையாவது சரியானவிதமாய்க்குழிவெட்டி, அடக்கஞ்செய்வார்களோ? அப்படியுமில்லை. தருணத்துக்குத்தக்கதாய் ஒருசிறிய குழியைவெட்டி, அல்லது மேடுபள்ளங்களில்வைத்து, அதின்பேரில் கொஞ்சம் மண் கல் முதலானவைகளைப் போட்டு மூடுவார்கள். இல்லையானால் அவசரத்துக் குத்தக்கதாய்ச் சிலகுழைகளைவெட்டி மேலேபோட்டுப்போவார்கள்.

அடக்கஞ்செய்யும்விதம்: பொதுவான வியாதிவந்து இறந்துபோனால் பாடைகட்டி மகனும் மருமகனுமாக எடுத்துக்கொண்டுபோவார்கள். ஊரார்குழிவெட்டுவார்கள். அடக்கஞ்செய்தபின் சுமந்துகொண்டுபோனவர்கள் பதினாறுகழிக்கும்வரையும் வெளியேவரவும்

ஒருவரையும் தொடவும் கூடாது. மற்றப்படி வீட்டுக்குள்தான் இருக்கவேண்டும். ௰௬ - நாள்சடந்தபின் அவர்களும் மற்றவர்களும்சேர்ந்து தேங்காய்ப்பாலும் சாணிப்பாலும் கொண்டுவந்து கூடிய எல்லார்மேலும் தெளித்து தீட்டைக்கழித்தபின் ௨- ரு - குடம்சாராயமும் வாழைக்காய், பிலாக்காய்முதலியவைகளும் கொண்டுவந்து கூடிய யாவரும் சாப்பிட்டு துக்கத்தை ஆற்றித் தீட்டைக்கழிப்பார்கள்.

இறந்துபோன உங்கள் அன்பரை இப்படி மேடு பள்ளங்களில் கடமைக்குக்கொண்டுபோய்ப் போட்டு வருகிறீர்களே, இதென்ன அநியாயம்! உள்நாட்டாராகிய இந்துக்கள் தங்களைச்சேர்ந்தவர்களைத் தங்கள்கையினாலேசுட்டுத் தகனித்து, இருந்தவிடந்தெரியாமல்பறந்துபோவென்று தூத்திவிடுகிறதுபோல, நீங்களும்உங்கள் அன்பர்களை மிருகாதிகளுக்கு இரையாகவைத்துவிட்டுப்போகிறதென்னவென்றால்,அவர்கள் சொலவது, "அது நம்மைவிட்டுக்களைஞ்சுபோச்சுதே;அது எப்படிப்போனாலென்ன? அது திரும்பவரப் போகிறதுமில்லை ஏன் இப்படிச்செய்கிறாய் என்று கேட்கப்போகிறதுமில்லை. ஆனதால் அதிகப்பிரயாசைப்பட்டால் என்ன பலன்" என்று மேலெழுச்சியாய்ப்பேசுவார்கள்.

கவனிப்பு.

ஆ! இது எத்தனைபரதாபம்! சுவிசேஷசத்தியத்தின்பேரொளி இவர்களுக்குள்ப்பிரவேசித்திருக்குமானால் இப்படிப்பட்ட அறிவீனம் அவர்களுக்குள் இருக்குமா? ௨. மோ. ௨ரு.

ம்சுர. ம்கூ. ஆபிரகாம் தன்மனைவியை எவ்வளவுபொரு ள்செலவுசெய்து வெகுமகிமையாயும் பத்திரமாயும் அடக்கஞ்செய்தான். அன்றியும் க. மோசே. ரும். க. ம்சு. வரைக்குஞ்சொல்லியபடி, யோசேப்பென்பவன் இறந்துபோன தன்தகப்பனாகிய யாக்கோபை, சும் - நாள் பிரேத அலங்காரஞ்செய்து, எம் - நாள் துக்கங்கொண்டாடி, ஏராளமான சனங்கள் புலம்பலோடு சூழ்ந்துவர, இவர்கள் புலம்பல் ஓசையைக்கேட்டஅந்நியர் இது எகிப்தியரின் கனதுக்கிப்பு என்றுகூற, அநேகபொருட்செலவுடன் தன்முற்பிதாக்களுடைய கல்லறையில் தன் அருமையானபிதாவை எவ்வளவுசிறப்பாய்க்கொண்டுபோய் அடக்கஞ்செய்தான். அன்றியும் யோவா. ம்கூ. ௩அ. சுக. வரையிற்சொல்லியபடி, அரிமத்திய ஊர் யோசேப்பும் நீக்கோதேமும் இயேசுவின்சரீரத்தை நூறுராத்தலுக்கதிகமான சுகந்தவர்க்கங்களுடன் சேலையிற்கட்டி மகாகனத்துடன் புதிதாய் வெட்டப்பட்டிருந்த கல்லறையில்வைத்து அதின்வாசலை ஒருபெரிய கல்லினால் அடைத்து, மெத்தமரியாதையாய் அடக்கஞ் செய்தார்கள். இவைகளை கவனிக்கும்போது மலையரசரின் மூடத்தனம் எவ்வளவுபரதபிக்கப்படத்தக்கதென்று விளங்குகிறது. அன்றியுங் கிறிஸ்தவர்கள் கர்த்தருக்குள் நித்திரையடைந்த தங்கள் அன்பர்களை எத்தனை கன்னியமாய் எடுத்து அடக்கஞ்செய்கிறார்கள். ஆகையால் மூடத்தனமாகிய அஞ்ஞானமே முன்சொன்ன

கொடுமைக்குக்காரணமாயிருப்பதினால் அது அவர்களை விட்டு நீங்கவும், சீவஒளி அவர்களில் துரிதமாய்ப் பிரகாசிக்கவும் பிரயாசப்படுவோமாக.

## XXIV. IGNORANCE ABOUT ETERNITY.

———o———

## உச - அதிகாரம்

### மறுமையைப்பற்றிய அறியாமை.

பேச்சப்பாமலையரசர்பேதைமக்கள்
பேரின்பஸ்தலநரகம்உண்டென்றாலும்
ஆச்சப்பாஆவிவிடில்ஆன்மாசெல்லும்
அத்தலத்தின்மகிமைசற்றும்அறியமாட்டார்
போச்சப்பாமறுமைஉண்டென்றெண்ணாதாலே
போனஉயிர்தன்சடலஞ்சேராதென்றும்
காச்சப்பாகாடுசெடிவாழ்விலங்கின்
காயமதுக்கொப்பெனவாம்கனிந்துபாரோன்.

மலையரசர் முதலியகாட்டுச்சனங்கள் இறந்துபோன தங்கள் அன்பரைப்பற்றி, மேற்காட்டிய தகாதஎண்ணங்கொள்ளவேண்டிய தென்னவென்றால், ஆத்துமாவின் தன்மையையும், உயிர்த்தெழுதலைப்பற்றிய நிச்சயத்தையும் அவர்கள் அறியாததே அதற்குக்காரணம். இந்துமதநூல்களும் இதைப்பற்றிய தெளிவானவிவரம் ஒன்றுஞ்சொல்லாமல், மனிதருடைய ஆத்துமாதேகத்

தைவிட்டுப்பிரிந்து பலபிறவிகளில் சுழன்று பிறந்து, மலம் நீங்கியபின் சாயுச்சியம் அடையுமென்று தப்பறையாய்க் கூறுகிறது. என்றாலும், ஆத்துமாவானது அழியாதவஸ்து என்று சருவசனங்களுக்கும் வெளிப்பட்டகாரியம். மலையரசருக்கு இக்காரியம் யாதேனுந் தெரியாதபடியால் உள்நாட்டாரோடு பழகினசிலர் தாங்கள் இறந்துபோனபின்பு, தங்கள் ஆத்துமாவானது வேறுசெந்துவினிடமாய்ச்சேர்ந்து பலபிறப்பாய்ப்பிறந்து இறந்துபோகுமென்று கேள்விமுயலாய்ச் சொல்லுவார்கள்.

மோட்சம், நரகம் உண்டென்று தங்கள் வாயினுற் சொன்னாலும், அதைப்பற்றிய எண்ணம், நம்பிக்கை, ஒன்றும் அவர்களில் தோற்றப்படுகிறதுமில்லை, இறந்துபோகுந் தங்கள் சரீரம் திரும்ப உயிர்பெற்று, தேவனுடையசமுகத்தில் நிற்பது உண்மையென்று அவர்கள்யோசிக்கிறதுமில்லை. ஆகையினலே இப்போதிருக்கிறசரீரம் மரித்தபிற்பாடு, அது மண்ணுக்குமண்ணாய்ப்போமென்றும், ஆத்துமாவானது சிலவேளை வேறு செந்துவினிடமாய்ச்சேரும், இல்லாவிடில் காற்றுகாற்றோடேசேருமென்றும் அல்லது செத்தவர்கள் எல்லாரும் தேவர்களாய்ப் போவார்களென்றும் நினைத்து மற்றதேவர்களோடு இவர்களையும் நமஸ்கரிப்பார்கள்.

பேதைகளாகிய பின்னுஞ்சிலர் தங்களில் ஒரு விசேஷித்த ஆத்துமாவுண்டென்றும், அது மனிதருக்கே

யன்றி மிருகம்பட்சிமுதலிய சீவன்களுக்கில்லையென்றும் எண்ணுமல், பகுத்தறிவற்றவிதமாய், விலங்கியல்களுக்குரிய அநித்தியசீவனைப்போல தங்கள் ஆத்துமாவுமிருக்கிறதாகப் பாவிக்கும் மிலேச்சராயிருக்கிருர்கள். ஆனபடியால் இப்போதிருக்கிறசரீரம் திரும்பஉயிரோடெழுப்பப்படும் என்கிற நம்பிக்கையும், பாவத்தினுல்க் கறைப்பட்ட ஆத்துமாவைப் பற்றியகவலையும், சட்டோடே அவர்களுக்கில்லை. பரதபிக்கப்படத்தக்க இந்நிலைமையில் நின்று அவர்களைத் திருப்பப் பிரயாசப்படுவது அவசியமல்லவா? ஆனதால் இந்த நற்காரியத்திற் பிரவேசிக்கத் துரிதப்படுஞ் சகோதரர், கிறிஸ்துவிற் பாக்கியவான்களென்பதற்குச் சந்தேகமில்லை.

கவனிப்பு.

உயிர்த்தெழுதலைப்பற்றிய அவநம்பிச்கையும் அறியாமையுமுள்ள சகோதரர் நமக்குள்ளும் ஒருவேளை யிருப்பார்களோ? ஆம். தற்காலக் கிறிஸ்தவர்களின் சீரைக் கவனிக்கையில் இப்படிப்பட்டவர்களும் இருப்பார்களென்று விளங்கும். வேதசத்தியத்தைநன்ருய் ஆராய்ச்சி செய்யாதபடியினுலே அல்லவோ அப்படியிருக்கிறது? ஆசையால் வேதமாகிய சமுத்திரத்தில் நுழைந்து, உயிர்த்தெழுதலையும் நித்தியசீவனையும் பற்றிச் சொல்லிய அரும்பொருளைக் காணும்படி, மகாத்துமாக்கள் தெளிந்து கூறிய வாக்கை ஆராய்வோமாக. யோபு. கக. உரு—உஎ-ல் "என் மீட்பர் உயிரோடிருக்கிருர் என்கிறதையும், அவர் எருங்

கடைசியானவராய்த் தூளின்மேல் நிற்பார் என்கிறதை யும் நான் அறிந்திருக்கிறேன். இந்த என்னுடைய தோல் முதலானவை அழுகிப்போனபிற்பாடு நான் என் மாமிசத்திலிருந்து பராபரனைப் பார்ப்பேன். அவரை நான் எனக்கென்று பார்ப்பேன். அந்நியகண்ணல்ல என்னுடைய கண்களே அவரைக் காணும் என்றும். சங். கஎ: கரு-ல் "நான் உம்முடைய சாயலாக விழிக் கும்போது திருத்தியடைவேன்" என்றும். தானி. கஉ: உ-ல். "பூமியின் தூளில் நித்திரைபண்ணுகிறவர்களில் அநேகர் சிலர் நித்தியசீவனுக்கும் சிலர் நித்திய நிந்தைக் கும் இகழ்ச்சிக்கும் விழித்தெழுந்திருப்பார்கள்" என் றும். யோவா. ரு: உஅ, உகூ-ல் "பிரேதக் குழிகளிலுள் ள அனைவரும் அவனுடைய சத்தத்தைக் கேட்குங்கா லம் வருகிறது. அப்பொழுது நன்மைசெய்தவர்கள் சீவனையடையும்படிக்கும், தீமைசெய்தவர்கள் ஆக்கினை அடையும்படிக்கும் எழுந்து புறப்படுவார்கள்" என் றுஞ், சொல்லிய சத்தியத்தைக் கவனித்து, பாவப்பாரத் தால் வருந்திய பாவிகளைத் தேவனிடம் நடத்தி, ஆத் தும ஈடேற்றத்தையும் நல்ஆறுதலையும் வருவிக்கும் அவருடைய திருவசனப்பிரகாரம் நம்மை எழுப்பிக் கொள்ளும்படி வகைபார்ப்பதோடேகூட, இச்சத்தியத் தையறியாத மலையரசரும், இயேசுவின் அன்பை ருசித் து நித்தியசீவனுக்குப் பங்காளிகளாகும்படிக்கேற்ற வி ஷயத்தில் நாமும் ஓர் நற்கருவிகளா யிருப்போமாக.

## XXV. THE EXCELLENCY OF KNOWLEDGE EXAMPLES AND POWER OF DIVINE WISDOM.

—o—

## உரு. அதிகாரம்.

---

### கல்வியின்மேன்மையும் அதற்குரிய திஷ்டாந்தரங்களும் திவ்வியஞானத்தின் வல்லமையும்.

சல்வியைப்பற்றி மலையரசருக்குண்டாகிய தீர்மானத்தை அறிவதற்குமுன் அதின் மேன்மைக்குரியசலாக்கியங்களை சற்றே ஆராய்ந்துபார்ப்போமாக.

குதம்பையர்சந்தம்.

கல்வியின் மேன்மை.

நன்னயமாகியநற்கல்விமேன்மையை
நின்னயம்என்னசொல்வேன்—மனுவே
நின்னயம்என்னசொல்வேன்.

உ. சாஸ்திரவேதசகலபுராணமும்
சூத்திரக்கல்விக்குள்ளே—யல்லவோ
சூத்திரக்கல்விக்குள்ளே.

ந. மன்னரும்சாஸ்திரிமந்திரிசித்தரும்
என்னவிதத்தார்—இப்படி
என்னவிதத்தார்.

ச. வித்தகராரியர்வேதகுருக்களும்
மெத்தமதிப்பிடுவார்—கல்வியை
மெத்தமதிப்பிடுவார்.

௫. ஆகமக்கல்வியறிந்தபெரியோர்கள்
பாகமுடனறிவார்—கல்வியை
பாகமுடனறிவார்.

௬. நல்லதோர்கல்வியின்நன்னயமேன்மையை
சொல்லவரிதாகும்—மனுவே
சொல்லவரிதாகும்.

வில்லடிச்சந்தம்.

௭. வல்லமையுள்ளதோர்ஞானமாங்கல்வியை
வகுத்துச்சொல்லுகிறேன்—இப்போ
வகுத்துச்சொல்லுகிறேன்.
எல்லையில்லாபலநன்மையும்வந்தநி
லைலேஎழும்புங்கண்டாய்—அதி
லைலேஎழும்புங்கண்டாய்

௮. உன்னதமானதோர்கல்வியைநன்றாய
ஊன்றிபிடிப்பார்க்கு—அதை
ஊன்றிபிடிப்பார்க்கு.
மன்னர்முடியிலுமா அலங்காரத்தை
வல்லஞானம்அளிக்கும்—மனுவே
வல்லஞானம்அளிக்கும்.

௯. நல்லறிவாகியகல்வியின்மேன்மையை
நம்பிபிடித்துக்கொண்டால்—மனுவே
நம்பிபிடித்துக்கொண்டால்
அல்லலில்லையுந்தன்ஆபிசுநாட்களும்
ஆக்கம்பெருகுங்கண்டாய்—மனுவே
ஆக்கம்பெருகுங்கண்டாய்

குதம்பையர்சந்தம்.

திருஷ்டாந்தம். ஔவையும்வள்ளுவர்ஆனசங்கத்தாரும்
செவ்வைகல்வியாலல்லோ - பேரானது
செவ்வைகல்வியாலல்லோ.

கக. சிந்தாமணியைசெயித்தவீரேந்திரன்
எந்தாயிதத்தாலே - செயித்தான்
எந்தாயிதத்தாலே.

கஉ. இந்துஅகஸ்தியனும்ஈரோப்புமில்றனும்
விந்தைபேர்பெற்றதெவ்வார் - மனுவே
விந்தைபேர்பெற்றதெவ்வார்.

கங. சிங்கனும்ஓமரும்சேபாஅரசியும்
சங்கமதானதெவ்வார் - மனுவே
சங்கமதானதெவ்வார்.

கச. மோசேமுனிவனுமுக்யதானியேலும்
மாசெயம்பெற்றதெவ்வார் - மனுவே
மாசெயம்பெற்றதெவ்வார்.

கரு. சாலமோன்றாவிதுசவுலென்றபவுலுவும்
மேலானதெந்தவிதம் - மனுவே
மேலானதெந்தவிதம்.

கசு. என்றிரியுடனேஸ்காட்டெனும்சாஸ்திரி
மன்றமதானதெவ்வார் - மனுவே
மன்றமதானதெவ்வார்.

கஎ. சீர்வேதநாயகசிறந்தசாஸ்திரி
பேர்பெற்றதெவ்வாறுகாண்-செகத்தில்
பேர்பெற்றதெவ்வாறுகாண்.

## கும்மி.

நண்பாகநெல்வேலிநல்லூர்தன்னிலே
நாட்டமாய்வாழ்சுவிசேஷமல்லன்
திண்புவிமெய்க்கநற்சாட்சியாய்நிற்கின்ற
தீர்க்கத்தைப்பாராய்கிறிஸ்தவனே.

ஞானத்தின் வல்லமை

ஆலோசனையும்வல்லமையுஞ்ஞானம்
ஆனநல்லுணர்வும்யாருடமை
ஏலேலச்சிங்கம்நானல்லோ இப்பொருள்
ஈன்றதுபாராய்கிறிஸ்தவனே.

௩. என்னாலேலோகராசர்நீதிபர்
ஏற்றபிரபுக்களுந்தலைவர்
என்னாலேஅதிகாரிகள்ஞானிகள்
ஏற்பட்டதல்லோகிறிஸ்தவனே.

௪. என்னைச்சினேகிப்போர்கனமுந்தனமும்
ஏற்றநீதிப்பெறுவதல்லால்
பொன்னபரஞ்சியைப்பார்க்கிலுமெய்யான
பொக்ஷம்பெறுவார்கிறிஸ்தவனே.

௫. மெய்ப்பொருளானதோர்கல்வியுமேதென்று
விந்தையதாகநீகேட்பாயல்லோ
மைப்பொருளானகிறிஸ்துவேகல்வியாம்
கண்டுகொள்ளாய்கிறிஸ்தவனே.

௬ எப்புவியாவுக்குமிரட்சகனாகிய
யேசுவேமெய்ஞ்ஞானம்நீதியென்னும்
துப்புரவானபரிசுத்தமீட்புமாய்
துலங்குவதைப்பார்கிறிஸ்தவனே.

எ. இந்தநன்மலையர் இன்பசரிதையை
ஏற்றவிதமதாய்க்கூறுதற்கு
சிந்தைமகிழ்ந்துவரந்தயேசுநான்
றேர்ந்துபாராய்க்கிறிஸ்தவனே.

இப்படிப்பட்டபுண்ணிய இரட்சகனை அந்தமலைய ரசர் அறியாமலிருப்பதினாலே எல்லாருடைய மதிப்புக்கெட்டாத அரும்பொக்கிஷமாகிய நற்கல்வியைப்பற்றி அவர்கள்கூறுவதென்னவென்று பார்ப்போம்.

## XXVI. DREAD OF KNOWLEDGE.

## உசு - அதிகாரம்.

கல்விகற்பதுகுலத்துக்கீனம்.

கல்வியதுஞாங்களுமோகற்கமாட்டோம்
கல்விகற்றுல்ஞாங்களுக்குத்தோஷமுண்டு
கல்வியதுஞாங்கள்முன்னோர்கற்கவில்லை
கல்வியதுஞாங்களுக்குமெத்தஈனம்
கல்விகற்றோர்ஞாங்களுட்சாதியல்ல
கல்விகற்கவேண்டுமென்றுபறையவேண்டாம்
கல்விகற்றுல்ஞாங்களுக்குத்தீனமெங்கும்
காட்சியைத்தான்கிறிஸ்தவனேகவனிப்பாயே.

கல்விகற்பது மெத்த ஈனமானபடியினாலே, அதைப்பார்க்கவும் படிக்கவும் கேட்கவும் நோக்கவும் ஏற்க

வும் மாட்டோமென்று வற்புறுத்திப் பேசுவார்கள். கல்வி விலைமதிக்கப்படாத பொக்கிஷமாச்சுதே அதைப்பற்றி ஏன் இப்படி வெறுப்பாய்ப்பேசுகிறீர்கள்? என்றால் அது தங்களுக்குத்தெரியாது, கல்விகற்றால் தங்களுக்குத்தோஷம், அது தங்களுக்கு வழக்கமில்லை. அது மேன்மையானகாரியமாயிருந்தால் எங்கள்முன்னோர் இதைத்தள்ளமாட்டார்கள். ஆகையால் வமிசபாரம்பரையாய் விலக்கியிருக்கிற கல்வியைக்கற்றறிந்தால் தங்கள்சாதிக்கீனம். அதினால் பற்பல வியாதிகளுண்டாகும். விலக்கின இதை ஒருவன்படித்தாலுங் கேட்டாலும், அப்படிப்பட்டவனைத் தங்கள்சாதியிலிருந்து தள்ளிவிடுவோம். அப்படிப்பட்டவர்களோடே சேரவேமாட்டோமென்று மகாமூர்க்கவெறியாய்ப் பேசுவார்கள்.

அப்படியானால் சேரநாடாகிய மலையாளதேசத்தைச்சேர்ந்த மலைகளில் முண்டக்கயம் என்னும்ஸ்தானத்தில் வாசஞ்செய்யும் மலயரசன்மார்களில் அநேகர்,கனம், என்றிபேக்கர் ஐயரவர்களைச்சேர்ந்து கிறிஸ்துமார்க்கத்தை அனுசரித்து கல்வியைக்கற்று எழுதவும் வாசிக்கவும் அறிந்து, சுத்தமான வஸ்திரங்களையுடுத்து நாகரீகமாகநடக்கவும், பிரயோசனமுள்ள பற்பலதொழில்களை நடப்பிக்கவும் மெத்தவும் சாமர்த்தியரா யிருக்கிறார்களே. கல்வியைப்பற்றி நீங்கள் இப்படிவெறுப்பாய்ப் பேசவேண்டியதென்ன? அவர்கள் உங்கள் சொந்தச்சாதியும், கொள்வினை, கொடுப்பினைமுதலிய காரியங்களில்

சம்பந்த முடையவர்களல்லவோ வென்றால் அவர்கள் எங்கள்சாதியுமல்ல கலிஞர்ன்வாய்க்குநில்ல, கலிபடிக்குன்னஆட்கள் ஞங்ஙளுட ஆளுகளல்ல, கலிப்படிக்குன்னது சாதியீனம் என்று தப்பறையாய்ச் சொல்வதுமன்றி, கடைசியில் இந்தச் சங்கடமானபேச்சைப் பறையவேண்டாமென்று விலகிப்போவார்கள்.

ஆ! இது எத்தனைபரதபிக்கப்படத்தக்கவிசேஷமாயிருக்கிறது. அறிவீனம் நிறைந்தபேதைகளைத்தள்ளாத பரமஞான சற்குருமூர்த்தி, சொல்வதைக்கேளுங்கள் நீதி-அ. ரு—ம. "பேதைகளே! விஞவிஞலே உணர்வாகுங்கள். மூடரோ மனதிலே யுணர்வாகுங்கள். பொன்னைப்பார்க்கிலும் அறிவை ஏற்றுக்கொள்ளுங்கள். முத்துக்களைப்பார்க்க ஞானமேநல்லது. ஏனென்றால் மனிதன் இச்சிக்கும் எப்பொருளும் இதற்கு நிகரல்லவென்று கூப்பிடுகிறார். ஆனதால். நீதி. எ. ரு. ஞானத்தை உன் சகோதரி என்றும் உணர்வை உன் இனத்தாள் என்றும் அழைத்து, நீதி. கூ. கூ. ன்படி- நீங்கள் பிழைக்கும்படிக்குப் பேதமைகளை விட்டுவிட்டு உணர்வின்வழியிலே நடவுங்களென்று கூறியவாக்கைக் கவனித்து அறிவாகரம் என்னும் பாக்கியத்தை மலைவாசிகளைப்போல் அகற்றுமல் அதையடைய வகைதேடுவதோடேகூட நிற்பாக்கிய மலையரசரின் புத்தியீனமான வார்த்தைகள் உங்கள் காதில் விழும்போது, இதென்ன காட்சியென்று சொல்லாமல் அறிவீனம் என்னும் காரிருள் இதற்குக்காரணம் என்று அறிவீர்களாக.

கொச்சகம்.

காட்சியென்றுசொல்லுகின்றகாரணத்தையான்புகல
மாட்சிமையும்இல்லையப்பாவல்லஅக்கியானமதே
சூட்சமாய்ஞானமதைசூட்டுங்கிறிஸ்துவினல்
ஆச்சரியமாய்நீங்கும்ஆனகிறிஸ்தோரே.

இதுகாட்சியுமல்ல ஆச்சரியமுமல்ல. அறிவீனம் நிறைந்த அக்கியானமே இதற்குக்காரணம்; இது நீங்கவேண்டுமோனல் உலகத்தில் வேறுவகையுமில்லை: இதைத்தவிர்க்கவல்லவர் கிறிஸ்து, இவர்களில் அறிவைப்பிரகாசிப்பிக்கத்தக்கது சத்தியவேதம், இதற்குத் துணைக்கருவி கிறிஸ்தவர்கள், அந்தக்கிரியை யின்சகாயன்தேவாவியானவர், ஆகையால் இவரின்சகாயத்தைமுன்னிட்டு கிரியைசெய்ய ஆரம்பித்தால், அவர்களைப்பிடித்தசகலமந்தாரமாகிய இருளும் நீங்கித்தெளிவடைந்து, பகலின்பிள்ளைகளைப்போல, மற்றவர்களுக்குமுன் கனமும்யோக்கியமும் வெகுமரியாதையுமாய் நடப்பார்கள். ஆகையால் திவ்வியபாணச்சுடரொளியை அவர்களிற்பிரயோகிக்கத்துரிதப்படுவோமாக.

---



## XXVII. PRAYER FOR THEIR ENLIGHTENMENT.

---

## உ௭ - அதிகாரம்.

### கல்வியைப்பற்றிய பகுத்தறிவில்லாமையும் அதற்குரியவிண்ணப்பமும்.

இனிமையாங் கல்வியென்ற பாக்கியத்தை
ஈனமென்று அகற்றுவது எவ்வாருகும்
கனிவானகரும்பு சற்கரைக்குமேலாய்
கானகத்துத் தேனதுக்கொப்பானகல்வி
பனிமழைபோல் சகலருபகாரமென்று
பாங்கான மலையரச ரறிவாராகில்
தனிமையாயல்ல குப்பல் குப்பலாக
சாய்வார்கள் கிறிஸ்தவனே தனித்துப்பாரோன்.

கல்வியின் அறியாமை.

மகாமதுரமாகிய கல்வியென்னும் பாக்கியத்தை வெறுப்பதும் அறிவின்தீபமாகிய ஞானத்தை யகற்றுவதும் எவ்வாறு. அதின் மதுரமாகிய இனிமையை அறியாத குணமும், மூடத்தனத்துக்கேதுவாகிய பயமும் இதோடு சேர்ந்திருக்கிறது. ஆகையால் நன்றென்று கண்டதைத் தீதென்று சொல்லி, பிடித்த காரியத்தை நிறைவேற்ற வேண்டுமென்கிற வீண்வைராக்கியத்தினலே இப்படிச் சொல்லுகிருர்களென்று, ஒருபோதும் நினைக்கவேகூ

டாது. திருஷ்டாந்தமாக கரும்பு, சற்கரை, இவைகளி ன்ருசியைப்பார்க்கத், தேனானது மகாமதுரமும் இனி மையுமுள்ளதென்று யாவருக்குந் தெளிவாய்த்தெரி யும். இப்படியிருக்க, தேன்கசப்புள்ளது, அல்லது வி ஷத்துக்கொப்பானது. ஆகையால் அதைத்தொடவும் போசிக்கவுங்கூடாதென்று மற்றவர்கள்சொன்னால் மலை யரசர்கேட்பார்களோ? அப்படிச் சொல்வோரைப்பொ ய்யரென்றும் வஞ்சகரென்றும், தங்களை ஏமாற்றுகிற வர்களென்றுஞ்சொல்லி, மற்றவர்கள்வார்த்தையைப்பு றக்கணித்துத்தங்களுக்குவேண்டியதைப்பார்த்துக்கொ ள்வார்கள்.

அப்படிப்போல கல்வியின்மதுரத்தையும் அதின் மேன்மையான பலாபலன்களையும், இப்படிப்பட்டதெ ன்றறிந்து, அல்லதுருசித்திருப்பார்களேயாகில் அதின் பேரில் வெறுப்பையல்ல, மிகவும் ஆசையைவைத்து, யார்தடுத்துங்கேளாமல், ஒருவனைஒருவன் தள்ளி, மோ திஇடித்துக்கொண்டு, இரையைக்கண்ட பட்சிகளைப் போல சாய்வார்கள். யார்துராலோசனைசொன்னாலுங் கேளாமல், விடாய்த்தமானது தண்ணீர்மேல்தாகங் கொண்டு எப்படி ஆவலாய்ஓடிவருமோ, அவ்வண்ண மாய் இவர்களுங், கல்வியாகியசலத்தினால் அறிவென் னும் விடாயைத்தீர்த்துக்கொள்ள மிகவிரைவாய் ஓடிவ ருவார்கள்.

குதம்பையர்சந்தம்.

விண்ணப்பம்.

க. செம்மையாங்கல்வியைச்சீர்தூக்கிப்பார்க்கினில்
நன்மையுடன்புகழ்வார் - கல்வியை
நன்மையுடன்புகழ்வார்.

உ. சீவாயெகோவாவாந்தேவேமனதுற்று
கோவேஇரக்கம்வைப்பாய் - அவரில்
கோவேஇரக்கம்வைப்பாய்.

ங. ஏயோவாவாகிய ஏழைகள்தாரகா
சேயேமனதிளகாய் - அவரில்
சேயேமனதிளகாய்.

ச. ஆதியும்அந்தமுமில்லாஅரூபியாம்
சோதியேநீஇரங்காய் - அவரில்
சோதியேநீஇரங்காய்.

கல்வியைப்பற்றிவெறுப்புண்டாகுங்காரியம் ஆச்சரியமென்றுசொல்ல ஏதுவில்லை. அவர்களைப்பார்க்கிலும் அறியாமையுள்ளவர்கள் நமக்குள்ளேயுமில்லையோஎன்று புத்திபுள்ளசிநேகிதர் நினைப்பார்கள். காரியத்தைக்கூர்ந்துபார்க்கில் அவர்களைப்பார்க்கக்கல்வியை வெறுக்கும்பேதைகள் நமக்குள்ளும் பலருண்டென்றுநிர்க்கமாய்ச்சொல்லலாம்.

நீதகமாய்த்தென்னிந்துதேயத்துள்ளே
நேயநெறிதனில்வசிக்கும்மாந்தர்மெத்தப்

பேதகமாய்ப்பெரியோர்செய்நன்றியெண்ணு
பித்தர்களாய்க்கல்வியதுவேண்டாமென்று
பாதகமாய்வாத்தியர்மேற்சீறிப்பாயும்
பண்புதனைச்சீர்தூக்கிப்பார்ப்போமானால்
சாதகமாய்மலையரசர்யோக்கியனென்று
சாற்றலாம்கிறிஸ்தவனேசார்ந்துபாரே.

## XXVIII. CHRISTIANITY CONTRASTED WITH OTHER RELIGIONS & THE GLORY OF THE CHRISTIAN RELIGION.

——o——

## உ அ. அதிகாரம்.



கிறிஸ்துமதத்திற்கும் மற்றமார்க்கத்திற்கும் உண்டாகிய வித்தியாசமும் கிறிஸ்துமதத்தின்மாட்சிமையும்.

பல்லவி.

ஆடிபாம்பே எழுந்தாடுபாம்பே—கிறிஸ்
தாரணமேசத்தியமென்றாடுபாம்பே.

அனுபல்லவி.

நீடுங்கதிரோனொளிபோல்தேயமெங்கும்- துலங்கும்
நேரானபேரொளியென்றாடுபாம்பே—ஆடிபா.

சரணம்.

க. பூலோகம்தன்னில்மிகப்பெருகிநிற்கும்-மகா
புகழ்பெற்றமறைதனைகாட்டுதற்கும்
மேலோகன்மறைக்கீனர்துன்மறைக்கு-முண்டாம்
விகற்பம்ஏதென்றுமகிழ்ந்தாடுபாம்பே—ஆடிபா.

உ. இருக்குஎசுர் சாமவேதமென்கும்-இசைந்
திருக்கும்அதர்வணவேதநான்கும்
திருக்குச்செயஆரியர்கள்பிழைக்கவென்று-செய்த
திட்புருந்துற்சாகையென்றுடுபாம்பே.—ஆடுபா

௩. நலமதில்லாதஆறுசாஸ்திரங்களும்-பின்னும்
நாற்றமிகும்பதினெண்காவியங்களும்
கலைஞானம்தத்துவங்கள்சமையமெல்லாம்-துற்கக்
கசுமாலக்குப்பையென்றுடுபாம்பே.—ஆடுபா

௪. யூதர்கிறிஸ்தமார்க்கத்தரும்பொருளை-எடுத்
தாகமாயதிற்பலவழுதுக்களை
வேதியனைப்போலெழுமகமதிசைத்த-வேதம்
விலைமகள்க்காதாரமென்றுடுபாம்பே.—ஆடுபா

௫. மோகாவிகாரமிஞ்சுங்காமிகள்க்கும்-மிக
மூக்கியதிருடருக்கும்மூற்கருக்கும்
ஆகாமியத்துக்குங்கொலைக்குமஞ்சா-மசம
தாகாத்தியஜாலநூலென்றுடுபாம்பே.—ஆடு

௬. வேதச்சுருதிதனைவேறுக்கி-பல
விக்கிரகங்களினாலேதூறுக்கி
வாதாகஇந்துக்களின்றேழனாய்நின்ற-உரோமி
வஞ்சகியென்றஞ்சாமலாடுபாம்பே.—ஆடுபா

எ. தன்னுயிர்விட்டமன்னுயிரைஇரட்சிக்காநின்ற-ஏசு
தாஷ்டகன்புண்ணியங்கள்போதாதென்று [றும்
பின்னுமிச்சப்புண்ணியங்கள்தேடவென்று-பிதற்
பேதகஞ்சேர்ரோமிநூலென்றுடுபாம்பே.—ஆடு

அ. சகலசிருட்டிகள்க்குமிறைவனுமாய்-மிக
சகலத்தையும்சிட்டித்தாள்வனுமாய்
இகபரம்பாதாளம்எவ்வுலகுக்கும்-தானாய்
இருக்குமோரேகன்நூலென்றூடுபாம்பே.—ஆடு

௯. காவதிலேவாளைத்தீண்டிக்கடித்தப்பாம்பு-இந்த
கானகமெல்லாந்திரியுங்கொள்ளிப்பாம்பு
மாவலுவோடேயலையும்பாம்பின்றலையை-தாக்கும்
மானுவேலின்நன்மறையென்றூடுபாம்பே.—ஆடு

௰. முந்தினஆதாம்இழந்தநீதிஞானமும்-பின்னும்
முகிவில்லாபாக்கியங்களுடன்சுத்தமும்
பிந்தினஆதாமவர்வித்தவிபரமெல்லாம்-காட்டும்
பிசகில்லாஆதிநூலென்றூடுபாம்பே.—ஆடு

௰௧. மோசேமுனிவனின்சிறைவிடுத்து-மகா
முக்கியபிதாவினுடசினந்தடுத்து
மாசெயம்பெற்றுமனுமக்கள்வாழ்கச்-செய்த
மகிபனின்நன்மறையென்றூடுபாம்பே.—ஆடு

௧௨. சடங்குசட்டங்கள்யாவுந்தவிர்த்து-தேவ
சன்னிதானத்தினடுதிரைகிழித்து
திடங்கொண்டுயாரும்பரனிடஞ்செல்லவே-செய்த
சிவாகன்நன்மறையென்றூடுபாம்பே.—ஆடு

௧௩. தேவாதிதேவனொன்றுசாட்டி-அவர்
சித்தம்செயலெட்சணமேதென்றுநீட்டி
காவாதிமக்கள்செய்கடமைகளெல்லாம்-காட்டும்
காட்சிமிகும்சத்யநூலென்றூடுபாம்பே.—ஆடு

கச. பேதைகளைஞானியாக்கும்சிவவசனம்-மகா
பேரானரட்சிப்புக்குரியஞானம்
தாதையதுபோல்சகலபாவிகளுக்கும்-உற்ற
தாயகஞ்சேர்நீதிநூலென்றுடுபாம்பே—ஆடு

கரு. மாயாஉலகந்தியோன்மாமிசமென்ற-பொல்லா
மாயாவிரோதிகளைமடக்கிவென்று
காயாபுரிதனையேகைவசமாக்க-வந்த
கருணாலயன்மறையென்றுடுபாம்பே—ஆடு

கசு. குன்றுங்குறைவழுவுடன்சோணல்நிமிர்ந்து—பொல்லா
குணங்கெட்டஞானிகள்சொல்யாவுந்தவிர்த்து
என்றுமாந்தரோகனிடஞ்சென்றுவாழ-காட்டும்
இடரற்றநன்னூலென்றுடுபாம்பே—ஆடு

கஎ. பாவத்தரும்சுமையினால்மயங்கி-இக
பாதலத்தின்நோய்பிணிகளால்தியங்கி
ஆபத்தில்மூழ்கினோர்நன்மருந்தாய்-கூறும்
அன்பானதிருவாக்கென்றுடுபாம்பே—ஆடு

கஅ. தாரகம்மற்றதோர்ஏழைபாவிகட்கும்-இந்த
தரணியில்வாழ்முடிமன்னர்கள்க்கும்
நீரசம்பொருந்தியதோர்நல்லறனாய்-நிற்கும்
நேயமுள்ளபாசநூலென்றுடுபாம்பே—ஆடு

கக. இச்சித்தெதிர்பார்க்கின்றபொன்னொளிவாய்-மகா
இனியதோர்தேனிலுமாமதுரமாய் [வளர்
பட்சமுள்ளோர்தன்னைரொட்சை செய்யமுதமாய்-
பண்புசேர்ஞானப்பாகையென்றுடுபாம்பே—ஆடு

உ0. அனியாயம்பொய்களவுயாவுந்தடுத்து-கொலை
ஆகாகள்காமத்துக்காக்கினைவிடுத்து
கனிவாளருக்குப்பரகெதிகொடுக்கும்-சத்யம்
கடவாஞானப்பகையென்றுடுபாம்பே—ஆடு

உக. சத்தியத்தின்நற்சுருதிமாட்சிமைதன்னை-வெகு
சம்பிரமத்தோடெடுத்துகாட்டுவேன்பின்னே
வெத்திசேர்மலையரசர்நற்சரிதையின்-இன்ப
விளக்கத்தில்கண்டுமகிழ்ந்தாடுபாம்பே—ஆடு

இப்பேர்ப்பட்ட மாட்சிமைசிறந்த பரிசுத்த வேத த்தை அறியாமலும், அதினால்வரும் பெரிய நன்மைகளை உணராமலும், இருப்பதினாலே வேதசத்தியத்தை கூறும்போது அவர்கள் சொல்லும் வாய்மொழியைக் கவனிப்போமாக.

## XXIX. THEIR AVERSION TO CHRISTIANITY.

—o—

### உகூ-அதிகாரம்.

மலையரசரின் கிறிஸ்துமார்க்கவெறுப்பு.

சிவவாக்கியர்சந்தம்.

க.—நேசமானசத்தியத்தை நேர்மையாக ஓதினும்
வாசமாம்நற்கந்தம்போல் வாரிஅகத்திற்கொள்வரோ
தோஷந்தீனமென்றுமே,தொட்டவும்பயப்பட்டேகியே
பாசங்காட்டியோதினும் பறையவேண்டாமென்பரோ.

உ.—உண்பானோடுஅமுதமும் உடுக்கநீதித்துயில்களும்
தென்பாய்சொர்க்கமேருவும்தீர்க்கஆயுள்நிதிகளும்
இன்பமாகப்பெருவீரொங்களேசுவிடத்தில்வாருமென்றால்
அன்பாயொன்றும்வேண்டாமென்றகத்திற்சென்றுபறைவரோ.

மலையரசர் கல்வியைப்பற்றி எவ்வளவுவெறுப்புக் கொண்டிருக்கிறார்களோ அவ்வளவானவெறுப்பு கிறிஸ்துமார்க்கத்தின்பேரிலு முண்டு. அவர்களிடத்தில் மெய்மார்க்கச் சத்தியத்தையும், இரட்சகரால்வரும் ஆத்தும ஈடேற்றத்தையும், மோட்சபேரின்பத்தையும் எடுத்துக் காட்டும்போது வெறியருக்கொத்த மூர்க்கமும் விசனமு முண்டாகும் இது அறியாமையென்றே நாம் நினைத்துக் கொள்ளவேண்டும்.

பழக்கமற்றமிருகாதிகள் ப்ட்சிகள்முதலியசெந்துக்களை கைநட்பினாலே இணக்கப்படுத்தும் வண்ணமாய் மலைவாசிகளாகிய காட்டுச்சனங்களையும், பிரயோசனத்துக்கேதுவான அன்பின்கரத்தால் நட்பாக்கிக் கொண்டு அதின்பேரில் சுவிசேஷவசனத்தைப் பிரசங்கிக்கவேண்டியது. ஏனென்றால் வெளிச்சனங்களுக்கு மெத்தவும்பயப்பட்டு, அவர்களைக்காண்கையிற் காடு செபிகளில்புகுந்து, ஒளித்துக்கொள்வார்கள். பழக்கமுள்ளமனிதன்மூலமாய்ச் சிலபுருஷர்கள் வந்தபோதிலும், ஸ்திரீகள்வரவுந், தங்கள்முகங்களைக் காட்டவும் மாட்டார்கள். ஆகையால் அவர்களுக்குப்பிரியமும் பிரயோசனமுமானவைகளினாலே, முன்பு புருஷரையும்

பின்பு ஸ்திரீகளையும் இணக்கஞ்செய்வது அவசியம் மற்றப்படி என்ன பாசாங்குகாட்டி அழைத்தாலும், வாய்நட்பு ஒன்றுக்கும் உதவமாட்டாது. கைநட்பையு ங்கூட அவர்கள் ஒருபொருட்டாய் எண்ணமாட்டார் கள். கண்ணீர் தாரைதாரையாய்வடியத்தக்கதாக அவர் களுக்குபதேசித்தாலும், அன்பின் கரத்தை நீட்டாவிடி ல்மெய்ப்பொருளுக்குத் தங்கள் செவியைச்சாய்க்கமா ட்டார்கள். சத்தியத்தின்நேர்மையை அவர்கள் நன்றாய் அறியாதவர்களானதால், அவர்கள்சொல்லும் வார்த்தை வஞ்சகமற்றதாயிருக்கிறது. எப்படியென்றால் அவர்க ளை மகா அன்போடும் பட்சத்தோடும் கூப்பிட்டு அவர் களுக்கு என்றும் பூரணதிர்ப்தியைக் கொடுக்கத்தக்க ஜீவபோசனமும், சுத்தமான நீதியின் வஸ்திரமும், சுவ ர்க்கமாகிய மோட்சானந்தமும், அவற்றிலுள்ள பாக்கி யங்களை என்றும் அனுபவிப்பதற்கேற்ற தீர்க்க ஆயுளும் அடைந்து குறைவில்லா சம்பிரமத்தோடே வாழ்வீர் கள் என்றும் அதோடு பூலோக நன்மைகளும் உள்நாட் டாருக்குரிய நாகரீகங்களும் உங்களுக்குண்டாகும் எ ன்றும் இப்படிப்பட்ட நன்மைகளை பெற்று சுகிக்கவே ண்டுமாகில் இதற்குக்காரணராகிய கிறிஸ்துயேசுவையே சரணடைய வாருங்களென்றால் நற்பொருள்பெறவே மெய்ப்பொருள்காட்டும் அன்பரின் உண்மையான வாக் கை நம்பாமல் எங்களுக்கொன்றும் வேண்டாம் அப்பா யென்றுசொல்லி தங்கள் வீடுகளுக்குப் போவார்கள்.

பின்பு அவர்களைக் கூப்பிட்டு பட்சமாய்ப்பேசி உங்களுக்கு எவ்விதத்திலும் நன்மையை வருவிக்கும்படிக்கே பிரயாசைப்படுகிறோம்; எங்களை நம்பி நாங்கள் கூறும்வார்த்தையை அங்கீகரித்தால் எங்களின் உண்மையை பின்னால் அறிவீர்கள் என்று நேசத்தைக்காட்டும்போது திரும்பவருவார்கள். இப்படிசம்பாஷிக்கையில் அவர்களுக்கு சந்தோஷமாக யாதொருபொருள்களைக் கொடுத்தாலும் அதைத்தொடவும் ஏற்கவுமாட்டார்கள். இயல்பாய்பேசிக்கொண் டிருக்கும்போது என்னகொடுத்தாலும் பெற்றுக்கொண்டு தங்களின் சிறந்த அன்பைக் காட்டுவார்கள்.

இப்படிப்பட்ட பயம் அவர்களுக்கு உண்டாகவேண்டியதேனென்றால், முன்னமே சற்கார் உத்தியோகஸ்தராலும், மலைக்குத்தகைக்காரராலும், பாளையக்காரராலும் அவர்கள் மிகுதியானதுன்பமும் இடுக்கமும் அநுபவித்தவர்களானதால், இப்போது கிறிஸ்துவின் பக்தர்கள் பலநன்மைகளைச் செய்தாலும், அந்தப்பயம் இப்படிப்பட்ட திகிலை எழுப்பி, அவநம்பிக்கையை யுண்டாக்குகிறது. ஆனால் தேவதாசர்கள் க-தீமோ. உ. சு. ன்படி "எல்லாமனிதனையும் மீட்கும்பொருளாகத் தம்மையே ஒப்புக்கொடுத்து" நமதுமேல் வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணினதுபோல் "நாமும் நமது நற்கிரியைகளாலே கிறிஸ்துவின் அன்பைவெளிப்படுத்தும்படிக்கு ஓசே. கக. சல் சொல்லியிருக்

கிறபடி "மனுஷனைக்கட்டி இழுக்கிற அன்பின்கயிறுக ளாலே நாம் அவர்களைஇழுத்து, அவர்கள் கழுத்து களின்மேல் இருந்த நுகத்தடியை எடுத்துப்போடுகிற வனைப்போல அவர்களுக்கிருந்து, அவர்களண்டைக்கு ச் சாய்ந்து, ஆகாரங்கொடுத்தோ" மென்ற வேதசத்தி யப்படியே நாமுஞ்செய்ய வகைதேடுவோமாக.

## XXX. GUILELESS NESS.

## ௩௰—அதிகாரம்.

### அவர்களின்கபடமின்மை.

சிங்கார மானகிரி, நல்ல கிறிஸ்தோரோ
சிறந்த அரி தனில் வசிக்கும்
மங்காப் பரன்காவல், நல்ல கிறிஸ்தோரோ.
மலை யரசர் சொல் மொழியோ
இங்கான வஞ்சகர்கள், நல்ல கிறிஸ்தோரோ.
இயற்று மொழி யெனவோ
பொங்கா நற்கீர்த்தி, நல்ல கிறிஸ்தோரோ.
புகழ் மொழி யென்றே யறிவீர்.

கல்வியைப்பற்றியாவது மார்க்கத்தைப் பற்றியாவது பேசும்போது, விசனமும் தங்களுக்கு இனமாகக் கி டைக்கும் பொருளை வேண்டாமென்று அகற்றுவதும் எவ்வாறு! இது அவர்களின் வஞ்சகமுந் துர்க்குண முமென்று சிந்திப்பீர்களோ? அப்படியல்ல. வஞ்சக மற்ற நிதார்த்தவான்களென்றே சொல்லவேண்டும்.

உள்நாட்டில் சிலர் சுயபிரயோசனத்தை விரும்பித் தந்திரத்தை மனதில்வைத்து, முகநட்பாய்ப்பேசிக், காரியத்தைப் பெற்றுக்கொள்வதுண்டு, ஆனால் மலையரசர் அப்படிசெய்யமாட்டார்கள். அவர்கள் வஞ்சகமற்றவர்களானதினாலே, என்ன நன்மைகளைப் பெற்றுக்கொண்டாலும், இருதயத்தின் நிறைவினால் வாய்பேசும் என்ற வேதசத்தியப்படி, அறிவீனத்தினாலும், பழைய பயத்தினாலும் இப்புதிதான காரியந் தங்களுக்கு உதவாதென்று, தங்கள் மனதிற்தோற்றப்படுங் காரியத்தை எதார்த்தமாய்ச் சொல்வது உண்மைதானே.

விசேஷ கவனிப்பு.

மலையரசருக்குப் பலநன்மைகள் செய்தவரும், பலதரம் அவர்களைக் கண்டுபேசி, அவர்கள் காரியாதிகளை அறிந்தவருமான, Rev. Septimus Hobbs. கனம், செப்றிமஸ் ஆப்ஸ் ஐயரவர்கள் ஒருசமயத்தில், என்னோடேசொன்ன தென்னவென்றால், அவர்களின் வாக்கு உண்மையுள்ளது, நம்மால் எத்தனையோ பிரயோசனங்களைப்பெற்று கிறிஸ்துமார்க்கத்தினாற் பல நன்மைகள் வருமென்றறிந்தும், இப்படிப்பட்ட பிடிவாதத்தைக் காட்டுகிறவர்கள் மனந்திரும்பிக் கிறிஸ்துமார்க்கத்தின் சத்தியத்தைத் தெளிவாய் அறிவார்களேயாகில், வளர்த்த நாய்போலக், கிறிஸ்துவைப் பின்பற்றி, யெத்துன்பத்திலும் அவரைவிட்டு நீங்காத அன்பராய் விளங்குவார்களென்று சொன்னார்கள்.

ஆனால் தங்களின் முன்னோர்களுடைய அறிவீனத்தைப்பற்றி, இப்படி சலஞ்சாதிப்போர் சன்மார்க்கத்துக் கேதுவான காரியத்தில் உறுதிகொள்வார்களேயாகில் எரே. 35, 18, 19 ல் சொல்லிய ஆசீர்வாதத்துக்குரியவர்களாவார்கள். ஆகையால் உள்ள சத்தியத்தை வெளிப்படுத்துவது நமது கடமை யல்லோ?

## XXX1. CONVICTION OF SIN AND KNOWLEDGE OF THE TRUE GOD.

---

### ௩௧. அதிகாரம்.

---

பாவ உணர்ச்சியும் மெய்த்தேவனைப் பற்றிய விழிப்பும்.

கும்மி

௧. சீரான கிறிஸ்தேசு வின்மார்க் கத்தைச்
செம்மையதாக வறிந்துகொண்டால்
சாராளன்கிறிஸ் தன்பர்பதந்தேடி
கடுகிச்செல்வார் கிறிஸ்தவனே.

௨. தீயவியாதியின் தீமையைக்கண்டவர்
தியங்கி நிற்பரோ மாநிலத்தில்
காயமதைச் சுத்திசெய்யும் அவிழ்தத்தை
கனிந்துதேடுவர் மானிடரோ.

௩. ஆறாப்புண்ணின் அழுக்கைத் துடைத்திட
ஆயனும் ஏசுவாலாகுமென்று
நேராய்க்கண்டுவிழித்தால் தடையின்றி
நேயமாய்ச்சேர்வர் கிறிஸ்தவனே.

ச. சற்றேதாமதஞ்செய்வாரோ யேசு
தற்பரன் தன்னையேசேர்வதற்கு
முற்றிலும் பேயை வெறுத்துச்சணத்தினில்
முடுகிச்செல்வார் கிறிஸ்தவனே.

## பாவ உணர்ச்சி·

சகலவிதசெல்வபாக்கியங்களும், பூரணமாய் நிறைந்து இலங்கா நின்ற கிறிஸ்து மார்க்கமானது, திவ்விய அருமையும் பெருமையும், உள்ளதென்றும், அதினால் வரும் சகலகாரியமும் மகாமேன்மையுள்ளது-என்றும் அதின்படி நடப்போர், மோட்சபேரின்பத்தைத் தடையின்றியடைய ஏது வுண்டென்றும், அறிவார்களாகில், யூதக்கோத்திரத்தில், தாவீதின் வமிசத்துற்ற, கிறிஸ்தேசு என்னும் அன்பர் பொற்பதம் தெரிசிக்க மிகத்துரிதமாக விரைந்தோடிவருவார்கள்.

திருஷ்டாந்தமாக, மரணத்துக்கேதுவான ஓர் கொடிய வியாதியினால் வருந்தீமையைக்கண்டவன், அதற்குரிய ஔஷதத்தைத் தேடாமலிருப்பானோ? அல்லது ஆறாத பெரும்புண்ணின் வேதனையைக்கண்டவன், அதற்கேற்ற பரிகாரத்தைச் செய்யும், வைத்தியனைப்பாராதிருப்பானோ? அப்படி யிருக்கமாட்டானே. தன் சீவனைத் தப்புவிக்கும்படிக்கேற்ற நல்ல வைத்தியனையும், அதற்குரிய அவிழ்தத்தையும், மிக அபேட்சையாய்த் தேடும்வண்ணம், மலையரசருந் தங்கள் பாவநோயையும், அதின் நாற்றமெடுத்த ஆறாப்பெரும் புண்ணையும், தெளிவாய் அறிவார்களாகில், உடனே பரமவைத்தியனாகி

ய இயேசுபகவானைத்தேடி, மிகவும் விரைவாய் ஓடிவருவார்கள். ஆனால் சற்றே தாமதிப்பார்களோ? அல்லது முன்பின் யோசனைசெய்து நிற்பார்களோ? அல்லது உள்நாட்டாரைப்போல, அடிக்கிறகாற்றுக்குத் தக்கதாய்ப் படல்கட்டுவார்களோ. திரும்பிப்பார்க்கக் கூடாதென்கிற தீர்க்கயோசனையோடே வருவார்கள். என்ன சொல்லிவருவார்கள்? நாம் எல்லாருங் கொடிய பாவிகள். நமதுபாவத்தை நிவர்த்திசெய்ய ஏதுவில்லாததும் இருவரையும் நாம் நம்பியிருந்ததுமான பேய்களாகிய,

## மெய்த்தேவனைப்பற்றிய விழிப்பு.

அம்மானை ராகம்.

க. இத்தரையில்சாத்தாவும், ஏற்றகதிரோனும், செத்தழிந்தபந்தும் உற்றதெய்வமென்று நாமிருந்தோம்.

உ. காவினுட்பேச்சிகளும் காலன்சடாமுனியும்
தாவியே நாந்தொழுதும் சற்றுமேபலனுமில்லை.

௩. மாடன், இடும்பன், மாபாவியாங்கறுப்பன்
தேடும் நம்தேவதைகள் தீயப்பசாசெனவே.

ச. பூதம் பெரும்பூதம் புத்தியைத்தான்கெடுக்கும்
நீதமற்ற காத்தான் நெஷ்டூர வீரையனும்

ரு. மாரியோங்காளியெனும் மாகாளிசாமுண்டி
சூரிதிரிசூலி துர்க்கைமூதேவியுடன்

சு. அரியவனங்காத்த ஆரியங்காவையனுடன்
சொரிமுத்தன்பட்டன் தோல்பொறுக்கி சக்கிலியன்

எ. திரிமூர்த்தியென்றுரைக்குஞ் செற்றழிந்தபாவிக

ளை, பரிவாகநாந்தொழுதும் பாவிமனந்தேறுதில்லை.

௮. தேடாதே மண்மரத்தை தீண்டாதே கல்லுசெம்பை, நாடாதே நாய்குரங்கை நம்பா கரிமுகனை.

௯. பரலோகம் பூலோகம் பாதாளத்துள்ளெவரும் சிரமேல்க் கரங்குவித்து சேவித்தடிபணிவோன்.

௧0. நேசப்பிதாவினுக்கு நீடுதுதியுண்டாக யேசுவேகர்த்தனொன்று யெந்நாவுமேகூற.

௧௧. மன்னுபிழைமீட்பதற்காய் மாந்தர்வடிவாயெழுந்து,இன்னிலத்தை நாடிவந்த யேசுதிருநாமமொன்றே.

௧௨. யெக்கரமும் யெத்தாளும் - யேற்றவிதமாய்முடக்கி, பக்கிஷமாய்த் தோத்தரிக்கும் பரிசுத்தநாமமென்றும். பிலிப்பியர். ௨. அ—௰௧.

௧௩. தாயகஞ்சேர்சத்தியமும் சரிவழியும்சீவனுடன் நேயபிதாவின்தலத்தின் நேர்வாசலென்றுசொல்லி.

௧௪, துஷ்டப்பசாசு தனைத்துரத்தியே அன்பனென்ற இஷ்டனம்யேசு எல்லார்க்கும் இரட்சகனும்.

௧௫. அன்பர்தனை யடுத்து ஆறுதலையாம்பெறவே இன்பமுடனே எழுந்து ஏகுவோம் அன்பர்களே.

(நடை) யென்று மிகவுந்துரிதமாய் எழுந்து விரைவாய்ச்சென்று இம்மானுவேலாகிய, ஜெயவீரசிங்கமென்னும், இயேசுக் கிறிஸ்துவென்ற,

௧௬. ஆயனிடஞ்சேர்ந்து அன்பாய்ச் சுகித்திருக்க நேயனேஉன்னைவிடோம்,நித்தியமுங்காத்தருள்வாய்.

(நடை) என்று அவருடைய திருப்பாதத்தைப்பிடித்து, அவரால் அருளப்படும், பரமமகிமைக்குப் பங்காளராய், நித்திய ஆனந்த சந்தோஷத்தைப்பெற்று என்றுஞ் சுகித்துவாழ்வார்கள்.

இவர்கள்காரியம் இப்படியிருக்க, இதைவாசிக்கும் கவனிப்பு. நண்பனே! உள்நாட்டில் அநேகர் கிறிஸ்துவைச்சேருவதைப் பார்ப்போம்.

விருத்தம்.

சாரணமாயெவ்வுயிர்க்குந தேவனுன்
கர்த்தாதிகர்த்தனையே இறைஞ்சிநிற்க
பூரணமாய்இந்நாட்டில் வருவோர்கொஞ்சம்
புனிதமுடன்வாராதோர் மீண்டும்போவார்
ஆரணமாய் மலையரசர் வருவாராகில்
அப்பனைவிட்டோர்காலும் அகலமாட்டார்
வாரணமாய்க் கிறிஸ்தரசின் மீட்பைப்பெற்ற
வண்மையுள்ளகிறிஸ்தவனே வகுத்துப்பாரே.

ஆனால் மலையரசர் கிறிஸ்து மார்க்கத்தைப்பற்றி வெறுப்புக்காட்டினபோதிலும், சத்தியத்தின் நேர்மையையறிந்து, குணப் படுவார்களே யாகில், கலப்பையில் கைவைத்தவன் திரும்பிப்பாரா வண்ணமாக, கிறிஸ்து இயேசுவையேநாடி ஓடிவந்து; வாங்காநம்பிக்கையாய் அவரில் தரித்திருப்பார்கள்.

## XXXII. GLEAM IN THE DESERT.

### ௩௨ - அதிகாரம்.

சாவில்த் தோன்றிய சிற்றொளி.

கும்மி

௧. சுத்தப்பளிங்கஸ்பிகற்போர் பேரொளி.
தொல்புவி தன்னிலே சூழ்ந்திருக்க
அத்தனின் பேரொளி தன்னையுங்கிட்டாதோர்
அநேகமுண்டு கிறிஸ்தவனே.

௨. பேரொளியாயல்ல சிற்றொளியாய் வீசும்
பேர்சிறந்தகிரிதனிலே
சீரொளிதோன்றும் அத்தலத்தினறிவைச்
சிந்தித்துப்பாராய் கிறிஸ்தவனே.

கிறிஸ்துமார்க்கத்தின் சிறந்தபேரொளியானது, நூலாம்பரமாய் வீசிப் பிரகாசிக்கின்ற இந்த உள்நாட்டில், எத்தனையோ அறிவீனமும் மூடத்தனமும் நிறைந்திருக்க, கார்மேகங்களாற் சூழப்பட்டும், நட்சத்திரத்தின் ஒளிகளெல்லாம், மப்பாகிய மந்தாரத்தினாலே மறைக்கப்பட்டும், காரிருளினாற் பூமியாவும் மூடப்பட்டும் இருக்கின்ற சமயத்தில், தோற்றப்படும் வெளிச்சத்துக்கொப்பாயிருக்கின்ற மலையரசருடைய அறிவு எவ்வளவுகேவலமாயிருக்கும். உள்நாடாகிய இவ்விடங்களில் சனங்கள் பாவமயக்கத்தினின்று விழிக்கும்படி தேவவசனமாகிய பேரொளி பளீர் பளீரென்று வீச, கண்கள் கூச, காதுகள் அடைக்க, இருதயம் திடுக்கிட, மனதுமெ

ழுருபோலிளக, வல்லசர்ப்பமாகிய சாத்தான் திடுக்கிட்டலற, அவிசுவாசிகள் அறிவுமயங்க, வேதப்புரட்டரின் நாவுகள் அடைபட, அக்கியானமார்க்கம் அலரிக்கொண்டோட, இடியோடுங்கூடிய குமுறல்போல, கிறிஸ்துவின் இரட்சண்ணிய விசேஷங்களைத் தேவதாசர்கள்கூற, அத்திருவசனங்கள் வரையப்பட்ட சன்மார்க்கப்புத்தகங்கள் நாலாதிக்குகளிலும் நட்சத்திரச்சுடர்போல எரிந்து பிரகாசிக்கின்றன. ஆனால் மலைவாசிகளுக்குள் இப்படிப்பட்ட சுடர் பிறகாசிக்கின்றதோ? இல்லை – அப்படியிருக்கச் சிற்றொளி அவர்களில் வீசிற்றென்று எப்படிச் சொல்லலாமென்றால், தேவதாசர்களாற் கூறப்பட்ட சிலவிசேஷங்களை அவர்கள் கேட்டிருப்பதினாலே இப்படிச்சொல்லவேண்டியதாய் நேரிட்டது. இவ்வண்ணமாய் அடிக்கடிமின்னிப் பிரகாசித்துக்கொண் டிருக்குமானால், சீரலியோனிலும், தென்சமுத்திரத்தின் தீவுகளிலும் விளங்கிய மகிமை இவ்விடத்திலும் விளங்கிப் பிரகாசிப்பதைப் பார்க்கலாம். ஆகையால் இக்காரியத்திற்கு முயல்வோர் காரிருட்டகற்றும், காவனச்சோதியாய்ப், பாரினில்விளங்கிப், பரகெதியடைவார், என்பது உண்மையே.

## XXX111. FOLLOWING A GOOD EXAMPLE.

---

### ௩௩. அதிகாரம்.

---

நன்மாதிரியைபின்பற்றல்.

சாதுவான அனையன்மார்க்குச் சாந்தமாம் நல்வேதத்தைப்
போதரவாய்ப் பொருளுமீய்ந்து புத்தியைப் புகட்டுவோர்
பேதமின்றி சீரலியோனுப் பேராஞ்சபையை ஸ்தாபித்த
நீதமுள்ள புண்ணியற்கு நேர்மை என்று செப்புவோம்.

மலைகளில்வசிக்கும் சாத்மீகமான குணங்களையுடைய மலையர்சர்கள் நிற்பந்தமான நிலைமையில்மூழ்கியிருப்பதால், அவர்களுக்காகப் பிரயாசையை எடுத்து, வேண்டுமானால் கைப்பொருளுடன் அவர்களில் நேசத்தைக்காட்டி, இரட்சண்ணியமார்க்கத்தை அவர்கள் பற்றிக்கொள்ளும்படி செய்தால், ஆப்பிரிக்காகண்டத்திற் சேர்ந்த சீரலியோனாவில், துஷ்டாத்துமாக்களைச் சீர்திருத்தி, சிறப்பான ஓர் பெரியசபையை ஸ்தாபித்த புண்ணியபுருஷாளான மகாத்துமாக்களுக்கு நேர்மையென்று ஒப்பிடலாம். இப்படி ஒப்பிடும்போது நாங் கவனிக்கத்தக்க ஓர் விசேஷமுண்டு. சங் ௮௯. ௯—௮ ல் சொல்லியபடி, "ஆகாயமண்டலத்திற் கர்த்தருக்கொப்பானவர் ஆர்! பெலவான்களுடைய குமாரர்களில் கர்த்தருக்கு நிகரானவர் ஆர்? ஏனென்றால் சேனைகளின் தேவனாகிய கர்த்தர் வல்லமையுள்ளவர். ஆனதால் இவருடைய நன்நாமத்துக்குப் புகழ்ச்சியைத்தேடும்போது, உ௭. ல் சொல்லியபடி "நாமும் அவனை முதற்பேறானவனும் பூமியின் இராசாக்களைப் பார்க்கிலும் உன்னதமானவனுமாக வைப்போம் "என்கிற சிறந்தவாக்குத்தத்தத்துக் குரியவர்களாவோம்.

அகப்பையர்சந்தம்.

செப்பு மொழிகேளாய் அகப்பே
திவ்விய ப்ரஜைளியை
நட்புடன் அக்காவில் அகப்பே
நாட்டமாய்க் கூறிச்சென்றால்.

௨. தென்சமுத்திரத்தின் அகப்பே
சேர்ந்தபல் தீவுகளில்
நன்விதை போட்ட அகப்பே
நண்பருக் கொப்பிடலாம்.

௩. மன்னுயிர் மீட்கவென்று அகப்பே
வந்த நன் மானுவேலே
தன்னுயிர் பாராமல் அகப்பே
சாற்றுவோர்க் கொப்பிடலாம்.

௪. ஏர்மாங்காத்தீவில் அகப்பே
இன்பமாய்க் கீர்த்திபெற்ற
சேர்மா உல்லியம்சு அகப்பே
சேயனை நோக்காயோ.

௫. ஈனர்கைப்போசனமாய் அகப்பே
எடுபட்ட உல்லியம்சு
வானவனுக்காக அகப்பே
வதை பட்டானென்றறிவாய்.

௬. மானுவேல் தன்னருளால் அகப்பே
மகிமையின் ரட்சண்ய
பானு வொளிகாவில் அகப்பே
பரப்ப முயலாயோ!

௭. பரப்ப முயல்வோர்கள் அகப்பே
பாக்கிய இரட்சகனின்
விருப்பத்துக்கேற்ற அகப்பே
மேன்மைசேர் அன்பர்களாம்.

தென்சமுத்திரத்திலுள்ள தீவுகளில் வசிக்குஞ் ச னங்கள் நிர்மூடரும் கொடிய துஷ்டரும், நரமாமிசப க்ஷணிகளுமாயிருந்தும், அவர்களுக்கு அஞ்சாமல் அ

வர்களின் நிர்ப்பந்த நிலமையைக்கண்டு, பிரலாபித்து, அவர்களை இரட்சிப்பின் மார்க்கத்தில் இழுக்கவேண்டுமென்று, ஆவல்கொண்ட கிறிஸ்தேசுவின் சிந்தையையணிந்த தேவதாசர்கள் சலியாத ஊக்கத்தோடு, கைப்பொருளுடன் பிரயாசைப்பட்ட அன்பர்களுக்கும், விசேஷமாய்த், தன்தேகத்தை எர்மாங்காத் தீவாருக்குப் போசனமாக ஒப்புக்கொடுத்த, கனம். ஜான் உவில்லியம்ஸ் என்ற ஆத்மநேசனுக்கும் ஒப்பிடலாம்.

ஒரு மெய்க்கிறிஸ்தவனிடத்தில் உற்பத்தியாகும் இவ்வித அன்புக்கு, உரோ. ரு. எ. அ. ல் "நீதிமானுக்காக மற்றொருவன் மரிக்கிறது அரிது, நல்லவனுக்காக ஒருவேளை ஒருவன் மரிக்கத்துணிவான். கிறிஸ்துவோ பாவிகளுக்காக மரித்ததினாலே, நமதுமேல்வைத்த அன்பை விளங்கப்பண்ணினார்" என்ற வேதசத்தியமே இதற்கு மூலமாயிருக்கிறது. இதைக் கவனிக்கும் அன்பர்மாத்திரம், சிர்கெட்டோரின் இரட்சிப்பை நாடித் தேடுவார்கள்.

## XXXIV. THE CHARACTER OF THE HILL KINGS.

## ௩௪. அதிகாரம்.

---

### மலையரசரின் தன்மை.

### கும்மி.

௧. சீரலியோனென்ற பேரை நான் சொல்லுகில்
தியனொனச் சித்தங்கொள் வீர்களோ

சாரமாம் பாண்டியர்க் கஞ்சி நடுங்குவர்
சாந்தமலையர் கிறிஸ்தவனே.

௨. சாந்தம் அன்பு நிறைந்தவர் தம்மிடம்
சார்ந்தோருக்குப் பலநன்மை செய்வார்
பாந்தமாய் அவர் அகஞ் சேர்ந்தோமென்றால்
பலனைப்பார்ப்பாய் கிறிஸ்தவனே.

அகவற்பா.

க. தென்சமுத்திரமென் தீவதில்வசிக்கும்
வன்கொலை புரியும் மாந்தரை யொப்ப.

௨. இஷ்டமதில்லா இடையூர் பலசெய்
துஷ்டர்களென்று தொகுத்துரைப்பீரோ.

௩. அன்பினில் வலியோர் ஆய்ந்தளவில்லா
இன்பமதுற்ற இளகிடும் நெஞ்சர்.

௪. தஞ்சமென்றோரைத் தாயகம்போல
வஞ்சகமின்றி வருந்திநேசிப்பர்.

௫. கொடியரைக்காண்கிற் கோவென அலறி
சடுதியாய்க் கெபியிற் றுளைளிப்பார்காண்.

௬. சுத்தனின்மறையைச் சூக்ஷமாய் ஓத
பத்தரோசற்றும் பயமதில்லைகாண்.

சீரலியோனென்றும், தென்சமுத்திரத் தீவானென்றும் பேர்களை, யான் இவ்விடத்தில் எடுத்துரைத்தமையால், மலையரசரும், துஷ்டர்களும், கொலைக்கஞ்சாக் கொடியர்களும், பழிக்கஞ்சாப் பாவிகளும், அல்லது அயோக்கியமுள்ள நரமாமிச பட்சணிகளுமாகிய தெ

ன்சமுத்திரத்தீவாருக்கு ஒத்த பாதகராயிருப்பார்கள் என்று எண்ணுவீர்களோ? அப்படி எண்ணவேகூடாது இவர்கள் புறநாட்டார்பேரிலே பட்சமும், அன்பும் வைத்து, அவர்கள் சொல்லைக்கவனிப்பது மாத்திரமல்ல தங்களை நாடித்தேடிவந்தவர்களைப் பலவகையாய் உபசரித்து, வேண்டியவந்தன வழிபாடுகளுஞ் செய்வார்கள்.

அன்றியும் ஒருவரில் ஒருவர் அன்புள்ளவர்களும், மார்க்கந்தப்பி நடவாதவர்களும், நல்லகட்டுப்பாடும் ஒழுக்கமுமுள்ளவர்களா யிருக்கிறார்கள். பிறரை நேசித்தல், பெரியோரைமதித்தல், அரசருக்கடங்கல், துஷ்டரைக்கண்டால் அஞ்சியொடுங்கலாகிய சிறந்தகுணங்கள் அவர்களிலுண்டு. கடைசியில் மிரட்டித்துரத்தினல் பயந்து நடுங்கிப், பக்கத்திலுள்ள கெபிகள் காடுகளாகிய இவைகளில்ப்புகுந்து தங்களை மறைத்துக் கொள்வார்கள்.

ஆகையால் இப்படிப்பட்ட பேதைச்சனங்களிடத்திற் சென்று, சுவிசேஷத்தைப் போதிக்க என்னபயம்? கைப்பொருளுக்கும் வருத்தத்திற்கும் அஞ்சியிருந்தாலேயல்லாமல் வேறுபயமுந் தடையுமில்லை என்பது சந்தேகமற்றகாரியம்.

வருத்தப்பட்டுப் பாரஞ்சுமந்துகொண்டிருக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களை இளைப்பாற்றுவேன் என்ற அன்பரின் சத்தம் மலைகளிலும் தொனிக்க முயல்வோமாக.

# XXXV. THE POWER OF THE WORD OF GOD -ITS REQUIREMENTS AND THE BLESSINGS OF CONFOMITY THERETO.

## ௩௫. அதிகாரம்.

### தேவவசனத்தின் வல்லமையும் அதைப்பற்றிய ஆலோசனையும் அதின்படி செய்வதினால்வரும்பாக்கியமும்.

மாலைச்சந்தம்.

தேவனுட நல்வசனம் தீயமனதைத் திருத்தி
பாவவிஷந் தனக்கஞ்சிப் பரதபித் திறைஞ்சுதற்கு
ஆவலுள்ள நல்மனதை யளித்த திருவாக்கு
சீவநாயிற்சேர்த்துச் செழித்திருக்கச்செய்யுமப்பா
மகத்துவம்பொருந்திய திருவசனமானது, கல்போன்ற இருதயத்தையுந் துளைத்து,
தேவவசனவல்லமை. அதிலிருக்குங் கரடுமுரடுகளையெல்லாஞ் சமனுக்கிச் செவ்வையாக்கத்தக்கதா யிருக்கின்றது. எப்படியென்றால் இச்சமயத்திற் சீரலியோனரும், தென்சமுத்திரத் தீவாருமே அதற்குத் திருஷ்டாந்தமாயிருக்கிறார்கள். மகாகொடிய துஷ்டராயிருந்த அவர்களை வெகு சாத்வீகமான தன்மையிற் கொண்டுவந்து விட்டிருக்கிறது.

அங்கிலேயருடைய ஆதி நிலைமை மகா கேவலமாயிருந்தது. இப்போது தேவதூதனைப் போலொத்த அலங்கார ரூபிகளா யிருக்கிறார்கள்.

இப்படியிருக்க, ஏழைகளும் நேசவான்களுமான மலையரசனைத் திருப்புகிறதற்கு அதற்குச்சக்தியில்லையா? உண்டு. அந்தத்திவ்விய ஆயுதத்தை எடுத்துப்பிரயோகிக்கத்தக்கவர்கள் எழும்பிப் பிரயோகிப்பார்களேயாகில், வெகுலேசாய் அவர்கள் சீர்ப்படுவார்கள். அப்படியிருக்க நாம் செய்யவேண்டுவதின்னதென்று, செபத்தோடே தேவவசனத்திடமாய் ஆலோசனை கேட்போமாக.

ஏசா. கக. கூ. எல் அப்போது ஓ நாய் ஆட்டுக்குட்டியோடேதங்கி, சிவிங்கி வெள்ளாட்டுக்குட்டியோடே படுத்துக்கொள்ளும். கன்றுக்குட்டியும் பாலசிங்கமும் காளையும் ஒரு சிறியபயல் அவைகளை ஓட்டத்தக்க விதமாய் ஒருமித்திருக்கும். பசுமாடுங் கரடியுங் கூடமேய்ந்து, அவைகளின் குட்டிகள் ஒருமித்துப்படுத்திருக்கும்.' சிங்கம் மாட்டைப்போல வைக்கோலைத் தின்னும். இப்படிச்செய்வதற்கு "நீதி அவர் அரையின் கட்டும், சத்தியம் அவர் இடுப்பின்கச்சையுமாயிருக்கும்" தண்ணீர்கள் கடலின் ஆழத்தை மூடுவதுபோல பூமி கர்த்தரை அறிகிற அறிவினாலே நிறைந்திருப்பது உண்மையாயிருப்பதினாலே, பீரங்கி - குண்டு - மருந்து - பட்டயம் - வேல் - அம்பு, இப்படிப்பட்ட யுத்தாயுதங்களையல்ல, தேவவசனமாகிய ஆவியின்பட்டயத்தை, நம்பிக்கையோடும், விசுவாசத்தோடும், பிரயோகித்தால் அநுகூலமாகும் என்பதற்குச் சந்தேகமில்லை.

ஆ! என்சகோதரனே! தேவவசனமாகிய ஆவியின் கட்கத்தின் பலத்தைப்பார். ஏசா. ருரு. க0. கக ல்

மாரியும் உறைந்தமழையும் வானத்திலிருந்து இறங்கி, அவ்விடத்துக்குத்திரும்பாமல் பூமியையேநனைத்து அதை முளைகிளம்பவும் பண்ணி, விதைக்கிறவனுக்கு விதையையும், சாப்பிடுகிறவனுக்கு ஆகாரத்தையும், எப்படிக்கொடுக்கிறதோ, அப்படியே நம்முடைய வசனமுமிருக்கும். அது வெறுமையாய் நம்மண்டைக்குத்திரும்பாமல், அது நாம் விரும்பியதைச்செய்து, நாம் அதையனுப்பினகாரியம் ஆகும்படியாகச் செய்விக்கும் இப்படியிருக்க நாஞ்செய்யவேண்டிய தென்ன?

ஆகையால் ஈகையாளர் அவர்கள்மே லிரக்கமுற்று
வேகமாய்மலையிற்சென்று விந்தைசேர்அரயன்மார்க்கு
தாகமாய்ச் சத்தியத்தைத் தயவுடன் போதிப்பித்தால்,
பாகமாய்க் காரியசித்தி பாங்குடனாகும்பாரே.

நல்யோசனை.

தருமபிரபுக்களான புண்ணியபுருஷர்கள் அல்லது கிறிஸ்தேசுவைப்போ லொத்த சிந்தையுள்ளவர்கள் அவர்கள்மே லிரக்கமுற்று, தங்கள்சுகத்தையும் பொருளையும்பாராமல், மலைசூழ்ந்த காவனங்களிலுள்ள நிற்பாக்கியமான மலையரசர், மலைப்பழிஞ்ஞர், மலைக்குறவர், மன்னாக்களாகிய இவர்கள்வசிக்கும் இடங்களிற்சென்று பாந்தமாய் அவர்கள்மனதை இணக்கி, வேதசத்தியத்தைப் போதித்து, அவர்களை நன்னெறியில் திருப்பப் பிரயாசப்படுவார்களேயாகில், சந்தேகமின்றி காரியம் அநுகூலமாகும்.

இவ்வகையாச் செய்வோர் ஏற்றமெய்ப்பதவிசேர்ந்து
செவ்வையா யாகாசத்தின் சிறந்தைபேரொளியைப்போலும்

நவ்விய உடுக்கள்போலும் நன்ருய்வின் சோதியாகி
திவ்வியன் அருளால்நித்திய காலமுஞ்செழித்துவாழ்வார்.

அன்றியும் அவர்கள் அடையும்பலன் என்னவென்ருல், தானி. 12: 3 ல் சொல்லியபடி புத்தியைக் கற்றுக்கொடுத்தவர்கள் ஆகாயமண்டலத்தின் ஒளியைப்போலவும், அநேகரை நீதிக்குள்ளாக்கினவர்கள் நட்சத்திரங்களைப்போலவும் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களாய்ப் பிரகாசித்திருப்பார்கள்."

பலன்.

ஆ! இது எவ்வளவுமேன்மை. என்நண்பனே மேற்கூறியவாக்கியத்தின்கருத்தை உற்றுப்பார்த்து, அதிற்காட்டிய பாக்கியத்தைக் கண்டடையப் பிரயாசைப்படுவது ஆத்துமநேசனுக்கு உரியதல்லவோ?

---

## XXXVI. PRAYER ON BEHALF OF THE HILL KINGS.

### ௩௬ அதிகாரம்.

---

மலையரசரைப்பற்றிய
இரக்கவிண்ணப்பம்
விருத்தம்.

அப்பனே! எவ்வுலகும் நிறைந்திருக்கும்
அரூபியே மலையரசரிடத்திற் சென்று
துப்புரவாய் நல்லறிவிற்கதித்து வாழ்கத்
துடியாயுன் ஞானமென்னும் ஈவுதன்னை
செப்பமுடன் அம்மனிதர்மேற் பொழிந்து
செயமாக வாழ்ந்திருக்கச் செய்வீரையா

இப்புவியோர் பவமகல மனுடனை
எந்தைபர னங்கிறிஸ்து ஏசுநாதா!

விண்ணப்பத் தரு.

இராகம்-ஆகிரி. அடதாளசாப்பு

க. ஆதியுமந்தமுமில்லாதசோதியே-யேசுநாதா-இந்த
அற்பருக்காகவே மாநிலமீதுற்ருய் ஏசுநாதா.
நீதி பரிசுத்தம் நேர் அளவில்லாத யேசுநாதா-கெட்ட
நிஷ்டூரர்க்காயிந்த நீனிலமீதுற்ருய் ஏசுநாதா
பூதலம்யாவும்ஓர் வார்த்தையாற்சிஷ்டித்த ஏசு - உந்தன்
பொற்புறுமேனி பொடிச்சூட்டாலேங்கவோஏசுநாதா
பேதமில்லாப்பெரும் பாவியை ரட்சிக்க ஏசுநாதா-நீர்தான்
பிரியமதாய்நர சென்மமெடுத்தீரோ ஏசுநாதா.
உ. துள்ளத்துடிக்கத் துயரமடைந்தீரோ, ஏசுநாதா-இந்த
துஷ்டருக் காய்ப்பட்ட வாதைகள்கொஞ்சமோ ஏசுநாதா
கள்ளன்கசுமாலக் காவாலியாமெனை ஏசுநாதா - இப்போ
கார்த்திரட்சித்தருள் கூர்ந்திடுவாய் எந்தன் ஏசுநாதா
மெள்ளவந்துந்தன் பதத்தைப்பிடித்துநான் ஏசு-கேட்கும்
விண்ணப்பமானதைக் கேட்டிரக்கஞ்செய்வாய் ஏசுநாதா
வள்ளல் கிறிஸ்தேசு மன்னவரான என் ஏசுநாதா-மலை
வாசிகள்மேலருள் கூர்ந்திடவாவையா ஏசுநாதா.
ந. புண்ணியமற்ற புலைஞரைமீட்கவென் றேசுநாதா-இந்த
பூதலம் உந்தனுக் கின்பதல்மாச்சோ ஏசுநாதா
திண்ணமற்ற மலை வாசிகள் ஈடேற ஏசுநாதா-மிகத்
திர்க்கமதாயவர் கண்ணைத்திறந்திடாய் ஏசுநாதா
அண்ணலே உந்தனின் அன்பைருசித்திட ஏசுநாதா-இப்போ
ஆசித்தவர்தனை நேசித்திழுத்திடாய் ஏசுநாதா
விண்ணில் அரும்பொரு ளாகியமோட்சத்தை ஏசுநாதா-மிக
மேன்மையாய்த்தேடிட நாடிவரந்தாராய் ஏசுநாதா.

௪. பாவக்கசப்பை யறிந்துவிழித்திட ஏசுநாதா-உந்தன்
பத்தனை ஏவி எழுப்பிடவாராயோ ஏசுநாதா.
சேவக்களையை அருந்தி வருந்திட ஏசுநாதா-நல்ல
தீர்க்கமுடன்பல் நண்பரொழும்பாரோ ஏசுநாதா.
காவதில்விட்ட உதிரத்தைநோக்கியே ஏசுநாதா-மலைக்
காவில்வசிக்கும் பழிஞர்முகம்பாராய் ஏசுநாதா.
ஆவலதாய்மலைக் கேகும்பலரையும் ஏசுநாதா-சற்றும்
ஆட்சேபமின்றி அனுப்ப அருள்செய்வாய் ஏசுநாதா.
ரு. பொன்னும்பொருளும் பெறிதென்று எண்ணுத ஏசு-நற்
பொக்கிஷந்தேடும்மெய் நண்பரொழும்பாரோ ஏசுநாதா
தன்னுயிர்போலஙன் மன்னுயிர் ஈடேற ஏசுநாதா-செய்யும்
தாஷ்டீகமாய்ப்பல சாந்தரொழும்பாரோ ஏசுநாதா
இந்நிலமென்றுஞ் சதமென்று எண்ணுத ஏசுநாதா-பல
இன்பர் எழுந்திட உன்னருள்தாராயோ ஏசுநாதா
மன்னவா! இப்பாவிகேட்கும் விடைதனை ஏசுநாதா-மனம்
மகிழ்ந்தருள்புரிவா யெந்தன்நேசராம் ஏசுநாதா.

## விசேஷகவனிப்பு.

இயேசுவின் அன்பைருசித்த மேலோக இராசாவின் புத்திரரே! மலையரசரின் சரித்திரவரலாறுகளையும், அவர்களுக்குச் சுவிசேஷம்போதிக்கவேண்டிய விதத்தைப்பற்றிக்கூறிய ஆலோசனைகளையும், நீங்கள் வாசித்துவருகையில் இதுவரையும் அவர்கள் நடுவில் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படவில்லை யென்பதாய், ஒருவேளை நினைக்கவேண்டியதாய் வரும், அப்படியல்ல. சிலவருஷங்களுக்குமுன்னமே அவர்கள் வசிக்கும் பல ஸ்தானங்களில், திவ்வியவசனமாகிய விதை ஏராளமாய் விதைக்கப்பட்டிருக்கிறது. அவ்விதைகள் அன்பென்கிற கூ

டையில்வைத்து, நேசம் என்கிறகரத்தால் தூவப்பட்டி ருக்கிறது. ஆகையால் அவைகளைப்போய்ச் சுற்றிப்பா ர்த்துக், களைகளைவெட்டிச், சேதப்பட்டமனமாகிய வே லியை ஓர்மைப்படுத்தி, பலபாகமான கனிகளைத் தரு ம்படிக்கேற்ற பிரயத்தனங்களைச் செய்யும்படியாய்க் கே ட்டுக்கொள்ளுகிறேன்.

அந்த இடத்தில் சுவிசேஷத்தை முன்போதித்த அன் பரை இங்ஙனம் எடுத்துக்காட்டுகில், இதைவாசிப்போ ர் கேட்போருக்கு, உற்சாகந்தோன்றித், தாங்களும் அ ப்படியேசெய்ய ஏவப்படுவார்கள் என்கிற நம்பிக்கையி னலே அவர்களின் நாமதேயங்களை இதனடியில் எடுத்து க்காட்டுகிறேன்.

---

## XXXV11. THE NAMES OF THOSE THAT PREACHED FIRST TO THE HILL KINGS AND THE BENEFITS OF THEIR PREACHING.

## ௩௭ அதிகாரம்.

---

முதலாவது சுவிசேஷத்தை மலையரசர்களுக்குப் போதித்தவர்களின் நாமதேயங்களும், அதி னால்வந்த பலனும்.

௧. சீரானசுவிசேஷம் போதித்தோர்கள்
தீர்க்கனும் செப்ற்றீமஸ் ஆப்ஸ் அன்பன்
பேரானநல்லூரில் சுகித்துவாழும்
பிரியனும் வில்லியம் கிளார்க்கென்போரும்

பாரானசுரண்டை தனில்வசித்த - டீ - ஜீ
பண்பான பேரன்புருக் கென்போரும்
தீரானதாமாஸ் ஸ்பிருற்றென்போரும்
ஸ்தேவான் ஹாப்ஸ் என்றகுருமார்களேந்தே.
௨. தீரனென்றநல்லதம்பி தாவீதன்பன்
திறமான மாசில்லா மணியும்மிக்கேல்
வீரனென்ற இயேசுவடியானுங்கூட
வேத்முத்தோடுபதேசி மார்கள் ஆறு
சூரனென்ற அந்தோனி முத்துச்சேர்வை
சுகுர்தமுள்ள சபையாரில் சிலருங்கூடி
வாரமென்ற கச்சைகட்டிப்போதித்தோரின்
மாட்சிமையைக் கிறிஸ்தவனே வந்துபார்நீ.

சிலவருஷங்களுக்கு முன்னமே பாளேயங்கோட்டையைச்சேர்ந்த பாஹூர்ச்சேகரத்திலும், பின்பு இலங்கைத்தீவிலும் இருந்து, வெகு ஊக்கத்துடன் சுவிசேஷஒளியைப் பரம்பச்செய்த, கனம். செப்றீமஸ் ஆப்ஸ் ஐயரவர்கள் மேற்சொல்லிய உபதேசிமார்களே இந்த ஏழைமலேயரசர்களிடத்தில் அனுப்பி, வேதசத்தியத்தைக் கூறினதுமல்லாமல், அவர்கள் இயேசுக்கிறிஸ்துவின் அன்பைருசிக்கும்படி, புறம்பானவகையாய் பலநன்மைகள்செய்து அவர்களுக்கு தங்கள் அன்பைவெளிப்படுத்தினர்கள்.

அல்லாமலும் மலேயரசர் வசிக்கும் பலஸ்தானங்களுக்கு மேற்காட்டிய போதகன்மார்களுடன் போய்வெகு அன்பாய்ச் சுவிசேஷசத்தியத்தைக் கூறினதுமல்லாம

ல், பாளையக்காரர், மலைக்குத்தகைக்காரர், சற்கார் உத்தி யோகஸ்தர், காவற்காரர் இவர்களால் அவர்களுக்கு நே ரிட்ட பலதுன்பங்களுக்கும் இவர்கள் வேண்டியசகாய ஞ்செய்து அவர்கள் அமைதலாய்ச்சீவனம்பண்ணி வரு ம்படிக்கேற்றவகையெல்லாம் நடப்பித்து அவர்களை இர ட்சிப்பின்மார்க்கத்தில் இழுக்கும்படிக்கு பல பிரயத்த னங்களை வெகுயூகமாய்ச்செய்துவந்தார்கள். அந்தச்ச னங்களும் அப்போதகருடைய அன்பையறிந்து இரண் டுமூன்றுதரம் இவர்களுடைய பங்களாவுக்குவந்து சில நாள்தங்கியும் பலநன்மைகளையநுபவித்தும் போயிருக் கிறார்கள். அப்படியிருக்குந்தருணத்தில், பிறராத்தும சிநேகிதனாகிய கனம்செப்ற்றிமஸ் ஆப்ஸ் என்னும்போ தகர், வியாதிமுதலிய தடைகளினாலே பாலூர்சேகரத் தைவிட்டுப் பிரிந்துபோனார்கள். என்றாலும் அவர்கள் பட்டபிரயாசம் வீணாய்ப்போகாமல் கல்வியின்பேரிலே விருப்பற்றிருந்த அவர்கள்பலநற்காரியங்களைக் கண்டு ங்கேட்டு மிருந்ததினாலே சிலகாலத்துக்குப்பின், கல் விகற்கவேண்டுமென்கிற ஆவல் அவர்களுக்குள்ளே நூ தனமாயுண்டாகி, அவ்விடத்துக்குப் போக்குவரத்தான படிப்பாளிகள் மூலமாய்க் கல்விகற்றுவருவதாய்க் கேள் விப்பட்டேன். இதுகாதுக்கினிமையான சப்தமல்லோ. காரியம் இப்படியிருக்கத் தேவதாசர்கள் தொடர்ந்தேற றியாய் அங்ஙனஞ்சென்று வேதசத்தியத்தைக் கூறிவ் ருவார்களேயாகில், காரியசித்தி யாகுமென்பதற்குச் ச ந்தேகமில்லை.

அவர்கள்கல்வியின்பேரில்விருப்பமுற்றதற்காகப்
பாடிய தோத்திரம்.

ஆசிரிய விருத்தம்.

ஏகாதி தேவனாய் எவ்வுலகுமே நிறைந்
தின்பமாய் ஆண்டு காக்கும்
யேசுதயையால் மலையரசர்தம் இருதயம்
ஏற்றநற்கல்வி நவ்வ
வாகான நல்ல வரம் ஈன்றெனையாள்கின்ற
வளமையாங் கிருபையாளா
மன்னவா சத்தியமறை வானவர்கள் தேவனே
மகிமைசேர் பரனே ஸ்தோத்திரம்.
ஆகாப்பொய் வஞ்சகச்சூது நிறைஅக்யான
அறிவீனம் அகல்வதற்காய்
அன்பர்தன் தோழனே இன்பசுகவாசனே
ஆச்சரிய சோதிமணியே
நீகாவலாகி மலைவாழுவோர்க் கனுதினம்
நேசமாய் வந்துநின்று
நேயனும் இயேசு பவநாசர் பாற்சேரவே
நிறையவருள் புரிகுவாயே.

பின்பு இதனடுத்த நல்லூர்ச்சேகரத்தை விசாரித்துவ

போதனையின்பலன்.

ந்த கனம். வில்லியம் கிளார்க்கை யரவர்கள் இந்த ஏழைமலையரசர் பேரில்விருப்பங்கொண்டு, அவர்கள்நடுவில் சுவிசேஷ தியத்தைப் பிரகாசிக்கவேண்டுமென்று பலபிரயெத்தி

னங்களை பிரயோகிக்கக்கருதி யிருக்குஞ்சமயத்தில் மலையரசனைச்சேர்ந்த ஒருவாலிபன்வந்தான். அவனைமிகவும் அன்பாய்ச்சேர்த்து ஆதரித்தார்கள். சிலமாதங்கள் சென்று பள்ளிக்கூடவிடுதலையிற்போனவன் திரும்பாமல் பலமாதங்களுக்குப்பின் வேறொருவாலிபனைத் தன்னோடு கூட்டிக்கொண்டுவந்தான். அவ்விருவரையும் இந்த நல்லபோதகர் வெகுபிரீதியாய் விசாரித்துவருகையில்பின்பு வந்தவாலிபனுக்குக் கொடிதானஒருவியாதியுண்டாக முன்புவந்தவன் பயந்துஓடிப்போய்விட்டான். ஆனால்வியாதிப்பட்ட இவ்வாலிபனை அந்தபோதகரும் அம்மாளவர்களும் தங்கள்பெற்றபிள்ளையிலும் உற்றபிள்ளையாகப்பாவித்துச், செபத்தாலும் பலஅவிழ்தங்களாலும் அவனுக்குச்சுகமும் நல்லபெலனுமுண்டாகச்செய்து கிறிஸ்துவின் அன்பைநன்றாய் அவனுக்குப் புகட்டி, திரியேகதேவனின் நாமத்தால் ஞானஸ்நானமுங்கொடுத்து "சுவிசேஷமல்லன்" என்கிறநாமகரணமுமிட்டிருக்கிறார்கள். இந்த அன்புள்ளபோதகர் அம்மாள் பிள்ளைகளுடன் சரீரசௌக்கியத்திற்காக மூன்றுவருஷத்துக்கென்று தங்கள் ஜெனனதேசத்துக்குப்போயிருப்பதினாலே, தேவசெயலாய் அவர்கள்திரும்பிவந்தவுடனே அறிவீனத்தில் அமிழ்ந்திருக்கும் மற்றவர்களையும்நல்லசத்தியத்தில் திருப்பும்படியாகப் பிரயாசையையெடுத்துக்கொள்வோரில் அவர்களும் ஒருவராக ஏற்படுவார்களென்று கர்த்தருக்குள் நம்பியிருக்கிறேன். பரமதேவன் அவர்களெல்லாரையுஞ் சுகத்துடனேகொண்டுவந்து சேர்த்தருள்வாராக.

இப்படியேகிறிஸ்துவின் பிள்ளைகளும் அவருடைய தாசர்கள்யாவரும் ஏற்படுவார்களாகில் இமயகிரிமுதல் கன்னியாகுமரிவரையிலும் உள்ளமலைவாசிகளில் அநேகம் ஆத்துமாக்களைக் கூடியசீக்கிரத்தில் ஆதாயமாக்கிக்கர்த்தருக்குக்காணிக்கையாகஒப்படைக்கலாம்.

இந்தச்சிறியசரித்திரத்தை வாசித்துங்கேட்டுமிருக்கிறவர்கள்கிறிஸ்து யேசுவின்நற்சிந்தையை அடைந்து, க. பேது. உ. க. ல்சொல்லியபடி "கர்த்தர் தயையுள்ளவரென்று ருசித்திருப்பார்களாகில் இக்காரியத்தை யறிந்தபின்பு சும்மா இருக்கமாட்டார்கள்.

இலவிசமாய்ப்பெற்றுக்கொண்டவன் தான் அடைந்தநன்மைக்குத் தக்கனையாய் நன்றியைக் காட்டாவிட்டால் மகாபெரிய பாதகமாயிருக்கும். ஆகையால் பூரணமாய் ஈயும் ஈகையாளனைத் தேவன் அறிந்திருப்பதால் அவர் சித்தத்துக்கிசைந்து நடப்போமாக.

அவர்கள் கல்வியின்பேரில் விருப்பம்வைத்து அட்சர—அப்பியாசஞ் செய்தும், படித்தும் வருகிறார்களென்றும் ஒருவாலிபன் கிறிஸ்துமார்க்கத்தைச் சேர்ந்து ஞானஸ்நானம் பெற்றிருக்கிறானென்றும், கேள்விப்பட்ட உண்மைப்படியே அங்குள்ள எல்லாருங்கல்வியையும் கிறிஸ்துவையும் நேசிக்க ஆசைப்படுகிறார்கள் என்கிறசத்தம் நமதுகாதில்விழுமானால் எவ்வளவுசந்தோஷமாயிருக்கும்: இப்படிப்பட்ட நல்லவிருப்பத்தைப் பரிசுத்ததேவாவியானவரே அவர்களில் உண்டுபண்ணுவாராக.

---

# XXXVIII CONCLUSION.
## ௩அ அதிகாரம்.

முடிவுரை.

நல்ல சமாரியன்

அன்பினைவிரித்தும் வம்பினையகற்றி
இன்பினைப்பொருத்தும் இறைவனின்செயலால்
சத்துருப்பகையாய்ப் பகைத்திடும்யூதன்
மித்திரன்சமாரி மிகவும் நேசித்தான்
நேசித்தபட்சம் நிகர்சொல்லப்போமோ
ஆசிப்போர்தமக்கே அதின்பொருள்தோன்றும்
அன்பினைப்பூண்ட எம்பரன்நேசர்
இன்பராய்க்கிரியில் நண்பராய்ச்செல்வீர்.

சிறந்த அன்பானதை உலகத்தில் விரித்து அதினூடே யிருக்கப்பட்டவம்புகள் யாவையும்கற்றி இன்பந்தருகின்ற சத்தியவேதத்தைச் சகலருடைய இருதயத்திலும் நிலையாய் நிறுத்தும் எகோவாவினுடைய கிருபையை முன்னிட்டு, அவருடைய சித்தத்திற்கு இசைவாய் நடக்கும்படிக்கு, தேவபக்தியுள்ள அன்பர்நாடுவார்கள். அப்படிப்பட்டவர்கள் தங்கள் உற்றூர் பெற்றூர் முதலிய அன்பரிடத்தில்மாத்திரம் அல்ல. மத். ௫, ௪௪ல் சொல்லியபடி "தங்கள் சத்துருவில் அன்புகூர்ந்து,தங்களைச்சபிக்கிறவர்களை ஆசீர்வதித்து, தங்களைநிந்தித்துத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகச் செபம்செய்து, தங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்து இரக்கவான்களாய் விளங்குவார்கள்.

அன்றியும் லூக். க0, ௩௩-௩எ-ல் சொல்லிய நல்லசமாரியன் எரிகோவின் காட்டுப்பாதையிற், கள்ளரால் அடிபட்டுக், குற்றுயிராய்க்கிடந்த தன் சத்துருவாகிய யூதனில் எத்தனையோ நேசத்தைக்காட்டி அவன் உயிரைக்காத்து இரட்சித்தான். அவனில் விளங்கிய அன்பை எவருக்கு ஒப்பிட்டுப்பேசலாம். இதுவே தேவதாபக்தரிற் காணப்படும் விசேஷித்தலட்சணம்.

ஆகையால் இதை வாசிப்போருங் கேட்போரும் இரக்கமுள்ள நல்ல சமாரியனைப்பின்பற்றிச், சத்துருக்களாயல்ல அன்பராய் விளங்கும் ஏழைமலையரசர்கள்பேரில் இரக்கமுற்று, அவர்கள் சஞ்சரிக்குங் காவனங்களிற் சென்று, களங்கமில்லா நற்பாலாகிய திருவசனத்தால் அவர்களைப் போஷித்து, அவர்கள் பாவக்காயங்களுக்கு வேண்டிய அவிழ்தத்தைக்கொடுத்து, கிறிஸ்துவின் திரு உதிரத்தால் அவர்கள் பாவக்காயங்கள் ஆறவும், தேவாவியின்சகாயத்தால் அவர்கள் வெளிச்சத்தைக்கண்டடையவும் பிரயாசப்படவேண்டுமென்று மன்றாடுகிறேன்.

இதற்காகவே மேற்சொல்லிய மலையரசரின்வரலாறுகளைச் சுருக்கமாய்யெடுத்துக்காட்டி, யோவா. க௩, ௩௪ ௩ரு-ம் வசனங்களிற்சொல்லியபடியே “நீங்கள் ஒருவரில் ஒருவர் அன்பாயிருங்கள் என்று புதியகற்பனையை உங்களுக்குக் கொடுக்கிறேன். நீங்கள் ஒருவரில் ஒருவர் அன்பாயிருந்தால் நீங்கள் என்னுடைய சீஷரென்று எல்லாரும் அறிவார்கள்” என்றவேதசத்தியத்தைச் சகலருக்கும் பணிவாய் ஞாபகப்படுத்துகிறேன்.

## PRAYER FOR PROSPERITY.

### முடிவுரைவாழி.

க. விண்ணுடனேமண்ணுமற்றும்படைத்தோன்வாழி
விந்தையுள்ள யேசுபவ நாசர்வா ழி
உ. மண்ணுள்ளோர் தன்னைச்சுத்தி கரிப்போன்வாழி
மகத்துவஞ்சேர் திரியேக தேவன்வா ழி
ந. பண்ணவனோடே சாஸ்திரிமன்னர்வா ழி
பண்பான விக்ற்றோரி யரசிவா ழி
ச. திண்ணமதாய் மலையரசர் மற்றுள்ளோரு ம்
தீர்க்கமுடன் கிறிஸ்தருளால் பெருகிவா ழி
ரு. புண்ணியஞ்சேர் அருள்வேத மதனைக்கூறு ம்
பூவுலகின் குருக்களெல்லாம் பெருகிவா ழி
௬. எண்ணமதாயுபதேசி வாத்திமார்க ள்
எவ்வுலகின் திருச்சபைகள் என்றும்வா ழி
எ. கண்ணொளிபோல் இச்சரிதைவகுத்தோன்வாழி
கருதி இதை வாசிப்போர் வாழிதா. னே

---

## APPENDIX.

### அனுபந்தம்.

---

இப்புத்தகத்தை அச்சிடுங்காலத்தில் நான் விசாரித்தறிந்த சிலகாரியங்களை இதில் சுருக்கிக்காட்டுகிறேன்.

இதிற் சொல்லப்படும் மலையரசர் தேன்பிள்ளை சந்தண அரசனொன்று சிறப்பாய் அழைக்கப்படுவார்கள்.

உ. ல் – மலைப்பாம்பென்று சொல்லப்படும் பெரும்பாம்பு மிகவும்பெரிதும் அதிக கொழுப்புள்ளதுமாயி

ருக்கும், அதை மலையரசர்கள் கண்டால் உடனே அ
னேகர் திரண்டு இருக்கவளியுள்ள கொம்புகளாலே அ
தின்கழுத்திலும் வாலிலும் கொழுவிப்பிரட்டி வயிற்றை
க்கீரி பாளையென்று சொல்லப்படும் கொழுப்பையெடு
த்து உருக்கிவைத்துக்கொண்டு உயர்ந்தவிலைக்கு விற்ப
னைசெய்வார்கள். இதின் பிரயோசனமென்னவென்றால்
உருக்கினநெய்யை கால் கை முறிவுகளுக்கும், காயங்
களுக்கும் பூசினால் எலும்புகள் ஊறி காயங்களும் ஆறி
பழையபடி தேகம்பலப்படும், குருக்குளைச்சலுக்குப்
பூசினால் இடுப்புபலப்படும், உள்ளுக்கு சாப்பிட்டால்
தேகத்துக்கு அதிகபலமென்றும் சொல்வார்கள் ஆ
க்கையா லிது நேர்த்தியான அவிழ்தமல்லவோ!

ரு. ல் – தலைவன்கீழ் ஏவல்வேலை செய்வோனுக்கு
கூற்றுக்காரனென்றுபெயர். இவனுக்கும் சகலசனங்க
ளும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும், இவன் ஓர்மந்திரி
யைப்போல் தலைவன் உத்திரவுபடி சகலத்தையும் செ
ய்துவருவான்.

கஉ. ல் – அவர்கள் தங்கள் முதற்பலனை வருஷத்தில்
இரண்டுதரம் செலுத்துவார்களாம் (க வது) பழுக்கப்
பருவமான வாழக்காய், கிழங்குகளுடன் தவசதானி
யங்களும் (உ – வது) கறிக்கேற்றவாழக்காய், பலாக்கா
ய், கிழங்குகளும் பல கறிவற்கங்களுடனே போசனமு
ம் தங்கள் சாத்தாவுக்கு நைவேத்தியம் செய்து பூசிப்
பார்கள்.

அன்றியும் ஓணமாதம் வருஷத்தின் ஆரம்பமானதா
ல் அதின்முதல் தெய்தியை இன்னாட்டாளைப்போல

சுத்தபத்தியாய் ஆசரித்து தங்கள் வயல்களில் விளைந்த நெல்லையும் அன்றுதானே அறுக்கத் துவக்குவார்கள். அறுப்புகள்யாவும் தீர்ந்தவுடனே அவலிடித்து எல்லாரும் ஓர் இடத்திற்கூடி வாழைப்பழங்களையும் இடித்த அவல்களையும் கூடிய ஆள்வீதம் இலைகளில்போட்டு கள்ளு சாராயமுதலிய மதுக்களையும்வைத்து கும்பிட்டானபின் யாவரும் அவைகளைப்புசித்தும், பானம்பண்ணியும் மகிட்சியடைவார்கள்.

கஎ. ல் – பெண்கள் தங்கள்காதில் ஒருவகையானகம்மலைப் போடுகிறதென்று சொல்லப்பட் டிருக்கிறதே அது கம்மலல்ல, பிரகாசமுள்ள பல ஈயவளயங்களாம் அதைக் காதுநிறையப் போட்டுக்கொள்வார்கள். அன்றியும் இரும்பினால் செய்யப்பட்ட வளயங்களையும், தாங்களாய்ச்செய்த பிரம்புவளயங்களையும், தங்கள்கைகளில் போட்டுக்கொள்வார்கள்.

கஅ – ல் விவாகச்சடங்காவது அவர்களில் இல்லந் துருவமென இருவகையுண்டு, அதில் இல்லத்தார் துருவத்தாரை விவாகஞ்செய்யவேண்டும் பெண்ணும் பிள்ளையும் வெவ்வேறுமலைகளில் வாசஞ்செய்கிறதாயிருந்தால் (ந–வது) பெண்பேசப்போகையில் வெற்றிலையும் பாக்கும் கொண்டுபோய் அன்றிரவுதங்கி பெண்ணைப் பற்றிய நிட்சயத்தையறிந்து மறுநாட்காலை இனசனங்களுக்கு தாம்பூலம்போட்டு புறப்பட்டு ஊர்வந்துசேர்வார்கள். அப்பால் குறிக்கப்பட்டதினத்தில் ச – ரு– ஆண்பிள்ளைகளும் பெண்ணுக்குச் சேலைகொண்டுபோ

ய்க் காரியங்களை ஒழுங்குசெய்து பெண்ணுக்கு சேலையுங் கொடுத்து ஊராருக்குத் தாம்பூலமும் போட்டு மறுநாள் பெண்ணையுங் கூட்டிக்கொண்டு தங்களிடம் வந்துசேருவார்கள். வந்தபின்பு மாப்பிள்ளையின் இனத்தார் தங்களிடத்திலுள்ள பாசிகளையும் காதிற்போடுகிற ஈயவளயங்களையும் பெண்ணுக்குப்போட்டு தாங்கள் தெய்வமென்று நமஸ்கரிக்கும் சூரியபகவானுக்கு ஒருபானை பொங்கலிட்டு நமஸ்கரித்தான பின் நிறைநாழி நெல்வைத்து அதில் புஷ்பம்சாற்றி விளக்கேற்றிவைத்து பெண்ணைவிழுந்து கும்பிடும்படியாய்ச் செய்வார்கள். அப்பால் காணிக்காரனிடத்திற்போய் அவன் சில புத்திகள்சொன்னபின்பு மெரவி என்னப்பட்ட மேளமுழங்க மங்கிலியம்கூட்டி விருந்துண்டு பூரிப்பார்கள்.

அன்றியும் சூரியபகவானுக்கு கிடாய்வெட்டி பொங்கலிட்டு தங்கள் விசேஷதேவர்களாகிய அளைநாட்டிசாத்தான், காலாட்டிப்பேய்முதலிய தேவர்களுக்கு வாழைப்பழம், தேங்காய், பலாக்காய்களும் சக்கரம் என்கிற வெள்ளிப்பணங்களும் காணிக்கையாகச் செலுத்துவார்கள். அவைகளில் பூசாரியானவன் ஒருசீப்வாழைப்பழமும், ஒருதேங்காயும் எடுத்துக்கொண்டு மற்றதைக் கொடுத்துவிடுவான் பின்னும் மூன்று கூட்டத்.தேவதை, வரண்டப்பலாதி என்று. பலதேவர்களுண்டு, அப்பேய்களுக்கு இன்னுட்டாளைப்போல் விசேஷகாலங்

களில் பச்சைநெல்குத்தி புதுப்பானையில் பொங்கலிட்டு புஷ்பங்கள்சாற்றி பூசிப்பார்கள். அவர்களின் விக்கிரகங்கள் நாட்டப் பட்டிருக்கும் இடத்திற்கு தெக்கது என்றுபெயர்

விபசாரம்,களவு, காணிக்காரனுக்குகீழ்ப்படியாமை, யாகியகுற்றங்கள் செய்வோரை பின், கட்டாய்க்கட்டி அடித்து காதில் மூசிறு என்கிற எரும்பைப்பிடித்துகடிக்கவிடுவார்கள் ஒத்துக்கொண்டு மன்னிப்புக்கேட்டால் புத்திசொல்லிவிட்டு விடுவார்களாம், அடிக்கடிகண்டித்தும் திரும்பத்திரும்பசெய்துவந்தால் எக்காலமும் தங்கள்கண்ணில் விழியாதபடிசெய்து போடுவார்களாம். அல்லாமலும் ஒருவன் மற்றொருவனைக் கொலைசெய்தான் என்று ருசுவானால் அதற்குறிய தண்டனையை கொலைபாதகன்தானே ஈடுசெய்விக்கும்படியாய் செய்வார்களாம். மேற்காட்டிய குற்றங்களுக்குரிய தண்டனைகளை விரிவாய் கேள்விப்பட்டேன் அவைகளை நான் தெளிவாய் அறியாதபடியால் இதில் சுருக்கிக்காட்டி யிருக்கிறேன்.

கர்த்தருக்கு சித்தமாகி இனி இரண்டாம் பதித்தல் செய்ய எதுவாகுமாகில் விரிவாய் இங்கிலீஷ் தமிழுமாக,படத்துடன் செய்ய ஆசித்து ஏகோவாவின் தயாளசித்ததுக்கு எதிர்பார்த்திருக்கிறேன்,

கிறிஸ்தேசு வுக்குள்ப்பட்ட அன்பரே, அவர்களின் இல்லர வாழ்க்கை யிற் காணப்படும் ஒழுக்கமும் அவர்கள்

நீதிப் பிரமாணத்தில் வெளிப்படும் அன்பிரக்கமும் எவ்வளவு மாட்சிமை சிறந்த தாயிருக்கிறது இப்படிப்பட்ட வர்கள் நீதியின் சூரியனாகிய சத்திய ஒளியிற்செல்வார்களே யாகில் அவர்களின் நற்கிரியை இகபரவாசனையாய் விளங்கும். ஆகையால் இதைவாசிப்போர் கேட்போர் யாவரும் கிறிஸ்தேசுவின் மட்டில்லாத நேசத்தைக்கவனித்து மலைவாசிகளின் ஆத்துமஇரட்சிப்பை நாடி தயாளசீலராய் அன்பிலும் தர்மசிந்தை யிலும் பெருகிவரும்படிதிரி யேகதெவன் அருள்செய்வாராக.

உ. கொரி - கரு - கச -

காவலன்யேசு கடவுளின்கிருபையும்
காரணப்பிதாவின் கருணைசேர் அன்பும்
ஆவியாம் தேற்றர வாளனி னயிக்யமும்
அன்பனாயென்றும் அகலாதிருக்கவே.

ஆமன்

முடிந்தது முற்றும்.

# GOD IS EVERY WHERE.

AN

Epitome of a variety of Examples to prove the Omnipresence of God, especially intended to refute the false notions of the other Religionists.

BY

A. NULLATHUMBY, CATECHIST, C. M. S.

## எகோவாவென்னும்

## தேவன்எங்கும் நிறைந்திருக்கிறார்.

தேவனுக்குரிய பரிசுத்த இலக்ஷணங்களில் அவர் எங்கும் நிறைந்திருக்கிறாரென்கிற இலக்ஷணத்தைக்குறித்து கிறிஸ்தவர்களல்லாத புறமதஸ்தர் விபரீத அர்த்தஞ்செய்து மோசம் போவதினாலே, தேவன்எவ்விதமாய் எங்கும் நிறைந்திருக்கிறாரென்று பல திருஷ்டாந்தங்களோடு இதில் விளக்கிக்காட்டியிருக்கிறது.

எபிரேயர். 4: 13. வசனம்.

அவருடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி யொன்றுமில்லை. சகலமும் அவருடையகண்களுக்கு முன்பாக நிருவாணமாயும் வெளியரங்கமாயும் இருக்கிறது.

நேரிசைவெண்பா.

வானுலகும் பூவுலகு மற்றுலகுங் கொள்ளாமல்
ஞானமுட னெங்குநிறை வாயொளிரு—மானபரன்
எவ்வுயிரி னும்மமர்ந் தீனவுரு வங்களினுந்
திவ்வியன டங்குவனோ செப்பு?

இ ஃ து

அ. நல்லதம்பி உபதேசியாரால்

இயற்றப்பட்டது.



சென்னபட்டணம்.

கலாரத்நாகா அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1876.

# கடவுளை இறைஞ்ச ஏவுதல்.



டன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

திருமல்கு விண்டலமு மண்டலமு மெண்டிசையுந்
திகழ்சீவ கோடிபலவுஞ்
சிருஷ்டித்த ளித்தகரு ணும்பரத் தெய்வமாய்,
சின்மயா னந்தவடிவாய்,
உருமல்கு பண்ணோர்க்குழாம்விநய பக்தியாய்
ஒண்கழலி றைஞ்சமகிழும்
உன்னதப் பரமாகி, யொளியாகி, யருளாகி
உயிராகி, யொப்பற்றதாய்,
அருமல்கு தாரணியி னைப்புரப் பான்பொருட்
டரியமக வைத்தந்ததாய்,
அம்பரம் புவிகடலி லெங்கணும்நி றைந்ததாய்,
அருவமாய்த் திருவுருவமாய்,
மருமல்கு தீயசொரு பங்களிலி ராமல்வி
மரிசைக்கும் எட்டாததாய்,
வாழ்மஹத் துவஜேகோ வாளம்பி ரானடி
வணங்குவாம் உயிருய்யவே.

---

இஃது

ஞா - ச - தானியேல், உபாத்தியாயரால்
இயற்றப்பட்டது.



# PREFATORY NOTICE.

The author of this little Volume is indebted to the generosity and the charitable disposition of the gentlemen who have freely undertaken to publish it for the good of the public.

A thousand copies of another book much larger in size known as "*The History of the Hill Kings*" has also been already published by the same author, and copies of it can be had gratis on application.

It is also proposed to publish a third entitled "*The Spiritual Burden-bearer,*" comprising in a short compass, all the essential points of the several prevailing religions of India, and proving thereby the superiority of Christianity. The first part of it has appeared in the Desapimani. It is written in such a plain and simple style as could be understood even by chidren.

"Praised be the name of Jehovah who takes great delight in the language of children."

A. N.

# அறிவிப்பு.

பிறராத்தும நேசர் தமது கைப்பொருளீய்ந்து மெய்ப்பொருள்விளங்க ஆவல்கொண் டிப்புத்தகம் அச்சிட்டிருக்கிறார்கள். உதார குணசீலராகிய அவர்களுக்கு வந்தனம்.

இதற்குமுன் "மலேயரசர் சரித்திர"மென்னும் ஓர் புத்தகம் (1000) காட்பிவரையிலும் அச்சிட்டு பிரசுரமா யிருக்கிறது. இன்னு மிதை விருப்புற்றுக் கேட்டுக்கொள்வோருக்கு இலவசமாகக் கொடுக்கப்படும்.

தேவ உதவியைக்கொண்டு இந்துதேயத்திலுள்ள பற்பலமார்க்கங்களையும்திரட்டிப் பரிசோதித்து, ஆத்தும இரக்ஷிப்பு கிறிஸ்தேசுவினாலன்றி வேறின்றென ரூபிக்கும்படி பலவிதசெய்யுளடங்கிய "ஞானசுமைதாங்கி"என்னும் ஓர் பிரபந்தம் கூடிய சீக்கிரத்தில் அச்சிட யோசித்திருக்கிறேன். இதனது பிரதம பாகத்தை "தேசாபிமானி"யில் சில அன்பர் கண்ணுற்றிருக்கலாம். இலக்கண இலக்கிய சாதுரிய சம்பிரதாய வார்த்தைகளினால் அன்று, மதலைச் சொல்லினால் செய்வித்தனன். குழந்தைகள் பாலகரின்மதலைச் சொற்களில் அவாவுற்ற எகோவாவுக்கே ஸ்தோத்திரம். மத். 21: 16.

A. N.

# GOD IS EVERY WHERE.

## தேவன்

## எங்கும் நிறைந்திருக்கிறார்.



### கடவுள்வாழ்த்து.

விருத்தம்.

சீர்நிறை ஏகோ வாவின் றிருவடி சிரமேற் கொண்டு
நேர்நிறை வாக வெங்கும் நேயமாய் நிற்குந் தூய
பேர்நிறை பரம சோதி பெரும்புக ழதனைச் சாற்ற
ஏர்நிறை பரிசுத் தாவி எம்பிரான் றுணைத்தாட் கொள்வாம்.

ஓ! இந்துநேசர்களே. தேவன் எங்குமிருக்கிறா ரென்கிற சத்தியத்தை விபரீத அர்த்தஞ்செய்து, அவர் தூணிலுந் துரும்பிலும் இருக்கிறாரென்கிற பழங்கதையை நம்பி, மடமினதினாற் கடைந்து, கல்,மண் மரமுதலிய விக்கிரகங்களில்தேவன் அமைந்திருக்கிறாரென்று நீங்கள் விசுவாசித்துப் போற்றி வருகிறீர்கள். ஆனால் உங்கள் புத்தியின்க ண்களைச் சற்றே மேல்நோக்குவீர்களாகில் ஒருபோதும் அப்படி நினைக்கமாட்டீர்கள்.

### ஆக்கியோன் கட்டியம்.

ஆசிரியவிருத்தம்.

துத்தியம சத்துவமி குத்தகிரு பாகரன்
  தோற்றமுடி வற்றதீரன்
துங்கமொ டிலங்கிருக மெங்குநிறை வாகித்
  துலங்குநவ நீதசீலன்
நித்தியகரு ணாநிதிவிண் மண்ணிலத் தெவரையும்
  நிகரொணு வரியஞானன்
நீணிலத் தெங்கும் வியாபகமாய் நிற்பினும்
  நிறைபகாப் பொருளானவன்

சத்தியசொரூபிய சரீரிதூண் துரும்பாகுஞ்
சகலவஸ் தினிலுமமையான்
சாதிகட் செய்விக்ர கஞ்சுருப மியாவிலுந்
தானவன் வசிப்பதில்லை
புத்தியோ டிதையுன்னி நும்மிதயத் தேற்றுநற்
புனிதர்தாட் சேராவிடின்
புகுவீர்செந் திநரகி லங்கதோ மீட்பில்லை
புவியோர்காள்! எச்சரிக்கை.!!!

ஞானவான்களே! தேவனைப்பற்றிக் கவனிக்கு மிடத்தில், முதலாவது அவரது அரிய இலட்சணங்களைப் பரிசோதித்து, அவரில் நாட்டமுறுவது அவசியம். ஆனதினாலே, மெய்யான தேவனுக்குரிய விசேஷித்த இலட்சணங்கள் எவைகளென்று முந்திப் பார்ப்போமாக. பரிசுத்த வேதாகமத்திற் சொல்லிய படி அரூபியாகிய ஏகதேவன் ஆதியந்தமில்லாதவர், மாறுதவர், சருவத்துக்கும் வல்லவர், எல்லாவற்றையுமறிந்தவர், எங்கும் நிறைந்தவர், சத்தியமுள்ளவர், குறைவற்ற பரிசுத்தமுள்ளவர், குறைவற்ற நீதியுள்ளவர். பரிபூரண அன்பும் இரக்கமுமுள்ளவரென்பதே. இதற்கு திருஷ்டாந்தம் வருமாறு: திருவள்ளுவர், "கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான், றாளை வணங்காத் தலை" இதில், எண்குணக் கடவுளென்கிறார். தாயுமானவர், தமக்குத்தெரிந்த சில தெய்வீக இலட்சணங்களை எடுத்துக்காட்டி கடைசியில் "சித்துருவாய் நின்ற வொன்றை சுகாரமப் பெருவெளியை சிந்தை செய்வாம்" என்கிறார்.

**12-வது நிகண்டு, 75-ம் பாட்டு.**

கடையில்லா ஞானத் தோடு காட்சிவீ ரியமே யின்ப
மிடையுறு நாம மின்மை விதித்தகோத் திரங்க ளின்மை
அடைவிலா வாயு வின்மை யந்தரா யங்க ளின்மை
யுடையவன் யாவன் மற்றி வுலகினுக் கிறைவ னாமே.

## வேதநாயகசாஸ்திரியார் வெண்பா.

ஆதியந்த மில்லாதான் மாருதான் சர்வவல்லோன்
ஏதுமறிந் தோனளவி லாஞானன்—ஓதக்கேள்!
எங்கும் நிறைந்தோன் பரிசுத்தன் கூர்நீதன்
நங்கிருபை யாளனம லன். என்கிருர்.

ஆனதால் இம்மாட்சிமையான இலட்சணங்கள்இல்லாதவர் ஒருபோதுந் தோத்திரிப்புக்குரிய கடவுள் ஆகமாட்டார். இவ் விலட்சணங்களில் ஒன்ருவது குன்றினவனை தேவனென்று துதிப்பது மகாபாவமென்று அறிந்து விலகவேண்டியது.

சுயம்புவாகிய கடவுளைப்பற்றிய விசேஷணம் இவ்வித மிருக்க, இந்து சாஸ்திரமானது பரப்பிரமமென்ற ஒருவஸ்து உண்டென்றும், அவ்வஸ்துவே சமஸ்தமும் நிறைந்திருக்கிற தென்றும், சர்வமும் பிர்மமா யிருப்பதினலே மனிதருடைய ஆத்துமாவும் அப்பிர்மமா யிருக்கிறதென்றும், அவரே ஆண், பெண், சிறுவர், சிறுமிகளாக இருக்கிருரென்றும், யுக்தியில் லாத சமஸ்த வஸ்துக்கடோறும் அவர் சஞ்சரித் திருக்கிரு ரென்றும், பஞ்சபூதியங்களெல்லாம் பிர்மமென்றும், இந்த பிர்மத்தினின்றே பஞ்சகர்த்தாக்கள் தோன்றினுர்களென்று ம், இந்தப் பரப்பிர்மத்தையின்றி, யாதுமின்றென்றும், உலகத் திலுள்ள சகல பொருட்களினுந் தேவன் அமைந்திருக்கிருரெ ன்றுங் கூறுவதை நம்பி, கண்ணில் தோற்றப்படுஞ் சகலமுந் தேவன்போற் பாவித்து, கைவேலையான விக்கிரகங்களில் உங் கள் புத்தியைச் செலுத்துகிறீர்கள். இப்படிச் செய்வது சரி யல்லவே. ஆனதால் தேவன் எவ்விதமாய் எங்கும் வியாபித் திருக்கிருரென்பதைப்பற்றி சற்றே கவனமாய் யோசிக்கவே ண்டுகிறேன்.

## தேம்பாவணி.

விண்மீதிருப்பாய் மலைமேனிற்பாய் கடல்சேர்வாய்
மண்மீதுழல்வா யிவற்றுளெங்கு மறைந்துறைவாய்
எண்மீதியனப் புறவண்டத்தா யெனதாவி
யுண்மீதாடி யுருகாட்டாதே யொளிப்பாயோ?

ஞானவான்களே! தேவன் ஒருவரோயுண்டு. அவர் அரூபமாய் எங்கும் நிறைந்திருக்கிறார். அரூபமென்றால் உரூபமாகிய சரீரமில்லாதவர், அதாவது கருமை, வெண்மை, செம்மை, பொன்மைப், பசுமை, என்னும் ஐந்துவகை வருணங்களாலும், இவைபோன்ற மற்றவைகளாலும் உவமிக்கப்படாதவர் என்று அர்த்தமாம். அவர் அரூபவஸ்து. ஆனதினால் அவர் இல்லாத இடம் இகபரமுதலாகிய மற்றெங்கனுமில்லை யென்பது குன்றாத சத்தியம். அப்படியே, "ஆதியந்தமில்லாதகாலந் தன்னி லனாதியாய் நின்றதே பரம்" என்பதாக கௌதமரும், "அண்டரண்டங் கடந்துநின்ற சோதிதானும் அவனிதனி லுடைந்தகல்லி லமருமோசொல் எண்டிசையும் எவ்வுயிரு மானசோதி ஈனமரங் கல்லுகளில் இருப்பாரோதான்" என அகஸ்தியரும், "மனம்வாக்குக் காயமெனும் வாய்த்தபொறிக் கெட்டாத தினகரனை நெஞ்சமதிற் சேவித்துப் போற்றீரோ" என, இடைக்காட்டாரும் கூறிய உண்மையை மெய்ப்பிக்க, "கல்லைப்பிளந்து சிறுசிலையாக்கிக் கண்ணுளர்வைப்பதைக் கண்டுமிருந்தும், எல்லைப்பிடாரி யிது சிவலிங்கமென் றேற்றிப் பணியும் இடும்பனல்லோ பேயன்" என்று முத்தானந்தரும பறையடிக்கிறார்கள். தேவனைப்பற்றிய உண்மை இப்படியிருக்க அரூபியாகிய கடவுள் அழிவுக்குரிய பொருட்களில் அமைந்திருக்கிறாரென்று போற்றுவது அறியாமையின் பெருந்தோஷமே.

**கடவுள் அந்தாதி 8-ம் பாட்டு. கலித்துறை.**

ஆதவ னேயொப்பி லாருமி லாதவ தீதபர
மாதவ னேகுரு தேசிக னேவடி வொன்றுமில்லா

நீதவ னேமுற்று மீரேழு லோக நிறைந்ததிரு
நாதவ னேயினி நானில்லை நீயில்லை ரண்டுங்கெட்டே.

தேவன் எங்குமிருக்கிறரென்கில், சருவ அண்டங்களும்அவ ரின் திருப்பார்வையில் அடக்கம்என்பதாம். சமுத்திரமானது ஜலத்தால் நிரப்பப்பட் டிருப்பதுபோல தேவனுனவரும் சரு வஅண்டங்களிலும் நிறைவாயிருக்கிறர். இதை வேறுவகை யாய்ப்பாவித்து சுருபமுதலியவைகளிலும், பல சீவஜெந்துக் களின் அகத்தினும் அமைந்திருக்கிறரொன்று சொன்னல் தேவ ன் ஒருவராக அல்ல, பலராய்ப் பிரிந்திருக்கிற ரொன்றல்லோ அர்த்தமாகிறது? அவர்சொல்லால் பகுக்கக்கூடியவராயினும் பொருளால் பகுக்கக்கூடாதவரா யிருக்கின்றனர். இப்படிப் பகுக்கக்கூடாமல் எங்கும் வியாபகமாயிருக்குந் தேவனை துண்டு துண்டாய்ப்பிரித்து பல ஈன வஸ்துக்களிலும் அடங்கி யிருக்கிறரொன்று பேசுவது பெருந்துணிவாயிருக்கிறதே; அப் போது தேவன் நித்தியராகிய அரூபியல்ல, அழிவுக்குரிய உரு பியென்றும், தேவன் ஒருவரல்ல, பலரென்றும் அல்லவோ சொல்லவேண்டும்? இதுசரியா?

### குதம்பையர்.

மெய்த்தேவ னென்றென்று வேண்டாத பன்மதம்
பொய்த்தேவைப் போற்றுமடி குதம்பாய்
பொய்த்தேவைப் போற்றுமடி.

### சிவவாக்கியர்.

எங்கள்தெய்வ முங்கள்தெய்வ மென்றிரண்டு தெய்வமோ
அங்குமிங்கு மாகிநின்ற ஆதிமூல மொன்றலோ
அங்குமிங்கு மாகிரண்டு தெய்வமா யிருக்குமோ
வங்கவாரம் பேசுவர்கள் வாய்புழுத்து மாள்வரே.

இப்படியிருக்க மாட்சிமை தங்கிய தேவன் பலவிதவஸ்துக் களிலுந் தங்கியிருக்கிறரொன்னும்போது அவர் அமைந்திருக்கி

ருமொன்ற பொருளுக்குத் தக்கதாக "சிறியசுவாமி" என்றும் "பெரிய சுவாமி" என்றுஞ் சொல்வதுமன்றி, நடப்பன, ஊர்வன, நகர்வன, பறப்பன, நீந்துவன முதலாகியவற்றினும் வசிக்கிருமொன்றுநம்பி, பூசிப்பது எவ்வளவு கேவலமான செய்கை? ஞானவான்களே! உங்கள்புத்திக்கு இது ஒத்திருக்கிறதா? அப்படிநினைக்கில் சகலபொருட்களையுந் தேவனென்று தானே போற்றவேண்டும்? உரோமர். 1:23,25. அழிவில்லாத தேவனுடையமகிமையை அழிவுள்ளமனிதர்கள், பறவைகள், மிருகங்கள், ஊரும்பிராணிகள் ஆகிய இவைகளுடைய ரூபங்களுக்கு ஒப்பாகமாற்றினார்கள், தேவனுடைய சத்தியத்தை அவர்கள் பொய்யாக மாற்றி, சிருஷ்டிகரைத் தொழுது சேவியாமல், சிருஷ்டியைத்தொழுது சேவிக்கும் பயித்தியகாரரென்று சத்தியவேதம் பறையடிக்கின்றது.

பாலானந்தர் 182-ம். பாட்டு.

சொல்லினுங் கல்லினும் நில்லாதே பிர்ம
சோதியை ஆதியைத் தூய்வெளியை
வல்லதை தற்பிர காசம வனத்தை
வகையறிந்துகொள் ஞானப்பெண்ணே.

குதம்பையர்.

எங்குநிறைந்தே யிருக்கின்ற சோதியை
அங்கத்துட்காணேனடி குதம்பாய்
அங்கத்துட் காணேனடி.

எங்குமழியாமை எங்கு நிறைவாகி
நின்றதுபிர்மமடி குதம்பாய்
நின்றது பிர்மமடி.

அல்லாமலும், தேவன் தூணிலும், துரும்பிலும் இருப்பது மெய்யானால் அதற்குள் ஜீவனிருக்கவேண்டுமே. உங்களில்

எவராவது ஜீவனுள்ள ஓர் தூண் துரும்பைக், கண்டிருப்பது உண்டா ? அல்லது நீங்கள் பக்தியாய்ப்போற்றித் துதிக்கும் விக்கிரக சுவாமிகளிடத்திலாவது உயிருண்டா? அப்படிக்கில்லாமையால்தான் அவைகள் உட்கி உளுத்துக் கெட்டுப்போகிறது. அப்படியானால் கல்சுவாமி செத்துப்போயிருக்கும். ஆ! தேவன் சிருஷ்டித்தவைகளில் அற்பச்செந்துவாகிய சிற்றெறும்பைப் பாருங்கள் ! அதற்குள் உயிரிருப்பதினாலே தன்னைப்பத்திரமாய்க் காத்துக்கொள்ளுகிறது. அதுபோல அற்ப உயிராவது உங்கள் விக்கிரகங்களுக்கிருந்தால் அவைகள்அழிவுரு. அதனிலும் பெரிதான தேவவஸ்து அங்கு தங்கியிருந்தால் கதிரோனைப்போல பிரகாசிக்கவேண்டுமே. ஆனதால் இவ்விரண்டு ஜீவன்களில் ஒன்றாவது உங்கள் சுவாமிக்கில்லாமையால் பூசாசாரிகளால் எடுக்கவும், வைக்கவும், நிறுத்தவும், உப்பும், புளியும் போட்டுத் தேய்க்கவும், பழுதுபட்டால் கம்மாளனைக்கொண்டு சுவாமிக்கு மருத்துவம்பார்க்கவும், வாகனங்களில் சமர்ப்பிக்கவும், ஊரைச்சுற்றிப் பிரதட்சணஞ் செய்யவும் ஏதுவாகிறது. ஆனால், ஜீவதேவனோ அரூபமாகிய நித்தியவஸ்து நமக்கு அவருடைய சகாயம் வேண்டியதேதவிர, நம்மால் அவருக்கு யாதொரு உதவியொத்தாசையும் வேண்டியதில்லை. அவரெப்போதும் ஒரேகண்டசீராக மாருதிருக்கிறவர். அவருடைய ஆண்டுகளோ ஆதியும் அந்தமுமில்லாதது. இவ்வித மகிமையானவஸ்து ஒன்றில் தங்கியிருக்குமாகில் மிகவும் மாட்சிமை சிறந்ததாயிருக்குமே. ஓ!ஞானவான்களே! உங்களாற்செய்யப்பட்ட எத்தனையோ விக்கிரகங்கள் பழமைப்பட்டு நொறுங்கி, யழிந்துபோகிறது! இதை உங்கள்கண்கள் தெளிவாய்க்கண்டும் இன்னம் விழிப்படையாமல் மோசம்போகிறீர்களே ஆப்கூக். 2:18,19-ல் வார்க்கப்பட்டதும், பொய்ப்போதகம் பண்ணுகிறதுமான விக்கிரகமும் என்னத்துக்கு உதவும்?மரத்தைப்பார்த்து விழியென்றும், ஊமையான கல்லைப் பார்த்து எழும்பென்றும் சொல்லுகிறவனுக்கு ஐயோ ! அது

போதிக்குமோ? இதோ! அதுபொன்னும் வெள்ளியுமான தக ட்டால் மூடப்பட்டிருக்கிறது; அதற்குள்ளே சுவாசம் இல்லை யே" என்று தீர்க்கதரிசியானவர் பரிதாபத்தோடே எச்சரி க்கிறார்.

குதம்பையர். 144-ம். பாட்டு.

கல்லினைச் செம்பினைக் கட்டையைக் கும்பிடல்
புல்லறிவாகுமடி குதம்பாய்
புல்லறிவாகுமடி.

பத்திரகிரியார்புலம்பல். 19-ம். பாட்டு.

உளியிட்ட கல்லும் உருப்பிடித்தச் செஞ்சாந்தும்
புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம்.

சிவ்வாக்கியர்.

ஒருவனே திரும்புகொண் டுருதறித்து வைத்ததில்
பெரியபாவை பேசுமோ அறிவில்லாத பேதைகாள்
கரியமாலும் அயனுமின்னுங் காணொணாத கடவுளை
உரிமையாக வும்முளே யுணர்ந்துணர்ந்து கொள்ளுமே.

வேதசாஸ்: பராபரன்மாலை 2. பங்கு-23-கலித்துறை

கண்ட திசையெட்டுங் காணு வெளியுங் கடந்துபர
மண்டலம்யாவையுந் தாண்டியப்பால்நிற்கும் வல்லவனெம்
அண்டர்பிரானுமக் கொப்பெனச் செய்யு மகந்தையுருப்
பண்டறி வற்றப் பறையர் தொழிலென் பராபரனே.

ஓ! இந்துநேசரே! தேவன் தூணிலுந் துரும்பிலும் இருப்ப து உண்மையென்கில் புதிதாயுண்டுபண்ணும் விக்கிரகங்களை ஆலயங்களில் ஸ்தாபிக்கும்போது அதற்கு உயிர்கொடுக்கிறோ மென்று அநேகம் பொருள் செலவுசெய்து, பிராமணனைக்கொ ண்டு அட்டபந்தனம் செய்விப்பானேன்? அப்போது பிராம ணன்தான் உயிர்கொடுக்குந் தேவர்களென்று தோன்றுகிற தே. அப்படியானால் அச்சீவ மந்திரத்தைப் பார்ப்போம்.

ఓంహ్రీం క్రోంజం రంలం వంశం సోహం హంసః మమప్రాణా యిహప్రాణాః ఓంహ్రీం క్రోంజం రంలం వంశం సోహం హంసః మమసర్వేంద్రియాణి.

ఓంహ్రీం క్రోంజం రంలం వంశం సోహం హంసః శ్రీ జగన్నాథస్య.

ఓం ఊనశ్చ క్షుశ్రోత్ర రసనా ఘ్రాణప్రాణా ఇహాగత్య సుఖం చిరంతిష్ఠంతు స్వాహా.

ஓம், ஹ்ரிம், குரோம், ஜம், ரம், லம், வம், ஷம், ஸோஹம், ஹம்ஸஹ, மம, பிராணா, யிஹ, பிராணாஹ, ஓம், ஹ்ரிம், குரோம், ஜம், ரம், லம், வம், ஷம், ஸோஹம், ஹமஸ்ஹ, மம, ஸர்வேந்திரியானி, ஓம், ஹ்ரிம், குரோம், ஜம், ரம், லம், வம், ஷம், ஸோஹம், ஹமஸ்ஹ, ஷிரி, ஜகநாதஸ்யா, ஓம், ஊனஸ் சட்சு, ஸூரோத்ர, ரஸனா, குரூண, பிராணா, ஹிஹா, கத்யஸூகம், சிரம், திஷ்டந்து, ஸ்வாஹ.

இந்தப் பிராணபிரதிஷ்டை மந்திரத்தால் உங்கள் கல்சுவாமிக்கு ஜீவன்வருகிறதோ? அப்படியுமில்லையே; இதினால், மந்திரமும் அபத்தமென்று வெளியாகிறது, அப்படியானால் ஏன் வீண் பிரயாசையை யெடுத்துக்கொள்ளவேண்டும்? ஜெகநாதத்தில் வேப்பமரத்தினால் ஒரு விக்கிரகத்தை யுண்டுபண்ணி, மேலேகாட்டிய மந்திரத்தால் உருச்செபிக்கிறதாம். பின்பு நாலுவருஷத்துக்குள்ளே அந்த விக்கிரகம் கெட்டு, உளுத்துப்போகிறது. அதற்குப்பின்பும் இப்படிச்செய்கிறதாம். பார்த்தீர்களா ! இவையெல்லாம் பார்ப்பாரின் வயறு பிழைப்புக்கென்று கட்டிவைத்த பழங்கதை. இவைகளில் தேர்ந்த ஞானியாகிய தாவீது இராசன் "சங் 115:5-8. அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது ; அவைகளுக்குக் கண்களிருந்தும் காணாது; அவைகளுக்குக் காதுகளிருந்துங் கேளாது;அவைகளுக்கு மூக்கிருந்தும் முகராது. அவைகளுக்குக் கைகளிருந்தும் தொடா

து; அவைகளுக்குக் கால்கள் இருந்தும் நடவாது ; தங்கள் தொண்டையால் சத்தமிடவு மாட்டாது; அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிறவர்கள் யாவரும், அவைகளைப்போலவே யிருக்கிறார்கள்" என்கிறார். இவையெல்லாம் உண்மையென்று தெளிவாய் அறிந்தும் விழிகண் குருடரைப்போல் இன்னமும் தடவிக்கொண்டு திரிகிறீர்கள்.

ஓர்ஞானவான்சொன்னகண்ணி ௮.

மந்திரத்தா லுயிர்தந்தோ மென்கிறீரவற்றுள்
வந்துயிர்தங்கிற்றோ மனிதரே அவற்றுள்
வந்துயிர்தங்கியதற்கேதாகிலுங்குறிப்பு
வாய்க்கக் கண்டதுண்டோ மாந்தரே.

சிவவாக்கியர்.

எச்சவாய் துடைத்தகல்லை வைத்துலிங்க மிறைஞ்சுறீர்
மெச்சுதாகி லுங்கரங்கள் வெந்துகார்த லாய்விடும்
பச்சிலைகள் நிற்குமோ படுத்தசிலை நிற்குமோ
வைச்சதெய்வ மென்னதெய்வம் வாயில்லாத தெய்வமே.

வேதசாஸ்திரியார். சரணம் 4–5.

பித்தர்கள்சிலைகள்முற்றிலும்வீணே பேதமைஅதுகாணே
கற்றதுமில்லையோவானவர்கோனே கல்லதிலிருப்பானோ?
செம்பதுசிலையும்நம்பரனுமோ? தேறினஞானிகளே!
கும்பியில்விழுவீர்வீம்புசெய்யாதீர் குணப்படுமிதுநாளே.

பத்திரகிரியார் புலம்பல்.

கல்லிலேயும்செம்பிலேயும், கருத்தைவைத்துபோற்றாமல்
சொல்லரியபாழ்வெளியி, லூன்குவதுமெக்காலம்.

ஓ ! ஞானவான்களே ! இவையெல்லாம் சிறுபிள்ளைகளின் விளையாட்டுபோலிருக்கிறது. நட்டகல்பேசுமோ? இவ்வளவு சக்திஅதற் கிருக்குமாகில் முல்லாத்தெரு இரங்கநாயகரும், அவரின் ஆலயத்தில் அடைக்கலம்புகுந்த தாசிமுதலாகிய பக்

தர்களும் வெந்துருகிட்டோவார்களா! ரெங்கநாயகர்தப்பிஞரா? அவரும் வெந்து உருகிட்டோனர். ஐயோ! அக்காட்சியின பரிதாபத்தை விரித்துரைக்க நாவெழாது. ஆகையால் தேவன் சொல்வதென்ன? ஏசா 46-5-8 "யாருக்கு என்னைசாயலும் சமமுமாக்கி, யாருக்கு நான் ஒப்பாகும்படி என்னை ஒப்பிடுவீர்கள்? பையிலிருக்கிற பொன்னைக்கொட்டி, வெள்ளியைத்தராசில் நிறுத்து, தட்டானுடனே கூலிபொருந்தி கொள்ளுகிறார்கள்; அவன் ஒருதெய்வத்தை யுண்டாக்குகிறான்; அதைவணங்கிப் பணிந்துகொள்ளுகிறார்கள். அதைத்தோளின்மேல் எடுத்து, அதைச்சுமந்து, அதை அதின்தானத்திலே வைக்கிறார்கள்; அங்கே அதுநிற்கும்; தன்இடத்தைவிட்டு அசையாது;ஒருவன் அதைநோக்கிக் கூப்பிட்டால், அது மறு உத்தரவுகொடுக்கிறதுமில்லை,அவன் இக்கட்டைநீக்கி அவனை இரட்சிக்கிறதுமில்லை. பாதகரே! இதை நினைத்து நம்மிடம் திரும்புங்கள்" என்கிறார். ஊமைச்சுருபங்களைப்பற்றிய விஷயம் இப்படி யிருக்க வயறு வளர்க்கும் நிமித்தம் பஞ்சாங்கமுதலிய சாஸ்திரங்களை விபரீதமாயுண்டுபண்ணி, தங்களுக்கே பொருள்விளங்காத கிரந்த சுலோபங்களை யுச்சரித்து, நராத்துமாக்களைக்கெடுத்து, நரகிற்றள்ள நரனாய்ப்பிறந்த பார்ப்பாரின் தந்திர உபதேசங்களை நம்பி மோசம்போகிறீர்கள். நல்லது, அவர்களாவது பரிசுத்தமும் அழியாமலுமிருக்கும் நித்தியசீவிகளா? அப்படியுமில்லை, அவர்களைப்போல கேவலமான மனிதர் உலகத்தில் கிடையவே கிடையாது. "ஒருவாய்ச்சோற்றுக்கு ஊர்வழிபோவார்கள்" இவர்கள் தெய்வத்துக்கு உயிர்கொடுக்கும் பிர்மசாதியானல் கல்லுகளாகிய சிவலிங்கத்தை இவர்களேன் பூசிக்கவேண்டும்? ஆனதால், இவர்கள் பிர்ம சாதிகளென்றல்ல, கர்ம சாதிகளென்றே தீர்க்கமாய்ச் செப்பலாம். பொதுவாய் இவர்களைக் கவனித்தாலும் மற்றவர்களைப்போல் இவர்களும் துன்பத்தினல் பிடிபட்டும், அக்கிரம செய்கையால் அதிபதிகளி

னாலே தண்டிக்கப்பட்டும், எங்கும் திரிந்து இரந்துண்டும், மரணத்தினால் விழுங்கப்பட்டும், கடைசியில் அக்கினியினால் தகிக்கப்பட்டும் போகிறார்கள். இதில் சிவலிங்கமோ? சிவலிங்கத்துக்கு உயிர்கொடுக்கும் பார்ப்பானோ? யாரைப் பெரியவனென்கலாம்? தயைசெய்து நீங்களே நிதானியுங்கள்.

சிவவாக்கியர்.

பருத்திநூன் முருக்கியிட்டுப் பஞ்சையோதும் வஞ்சர்காள்
துருத்திநூன் முருக்கியிட்டு தூண்டியேற வல்லிரேல்
கருத்தினாலே யுங்கழன்று காலனாலே யும்மகன்
றொருத்திநூன் றலைப்படுமீ துண்மையுண்மை யுண்மையே.

குதம்பையர்.

பார்ப்பார்கள்மேலென்றும் பறையோர்கள்கீழென்றும்
தீர்ப்பாய்ச் சொல்வதென்ன குதம்பா
தீர்ப்பாய்ச் சொல்வதென்ன.

வே-சா-சாஸ்திரகும்மி 74.

சூத்திரர்மாத்திரம் சாத்திரம் பாராமல்
துஞ்சின ரொன்றுவைத்துவைப்போம்
சாஸ்திரஞ் சொல்கின்ற பார்ப்பாரச்சாதியுஞ்
சாகலாமோடி ஞானப்பெண்ணே.

அன்றியும், தேவனானவர் மனிதரிலும், மிருகம், பட்சி, ஊர்வன முதலாகிய எவ்வுயிர்களிலும் அமைந்திருக்கிறாரென்று தமிழ்சாஸ்திரம் கூறுவதைக்கவனித்தால் மாட்சிமையான கடவுளைப் புத்தியுள்ளவனென்றும், புத்தியற்ற வனவிலங்கென்றும் சொல்லவேண்டியதாய் வருமே. இதுசரியா? அப்படிநினைப்பதும், பேதைகள் இவ்விதம் சொல்வதைக் கேட்பதும் பாதகத்திலும் பாதகமே. இவ்வகையானபுத்தி இந்து நேசரில் குடிகொண் டிருப்பதினாலேதான் சத்திமங்கலக் கண வாய்க்கடுத்த நஞ்சுண்ட கூடலூரில் பிள்ளைவரத்துக்குப்போவோர் அக

கோவிலின் சமீபத்திலுள்ள மலத்துக்குத் தூபங்காட்டி, அதைச்சேர்த்து வறட்டி தட்டியகையால் மூன்றுகை ஜலம் உட்கொண்டால் புத்திரபாக்கியம் உண்டாருமென்கிற அசுத்த உபதேசத்தை உண்மையென நம்பி அதின்படிசெய்து வருகிறீர்கள். இதைக்கவனிக்கில் உங்களுக்குச் சுத்தமாய் ஞானக் கண்ணில்லையென்று தெளிவாய்விளங்குகிறது. ஐயையோ! இதென்ன அநியாயம்! அன்றியும் யாவருக்குந் தெளிவாய் விளங்கிய சாணிப்பிள்ளையாரைப் பாருங்கள்! அந்தஅசுத்தத்தை வினைதீர்ப்போனென்று வைத்துக் கும்பிடுகிறதுடன் டஸ்பமாகிப்போன அதின்சாம்பலைத் திருநீறென்று மணிந்து அதன்கோமியத்தையும் உட்கொள்ளுகிறீர்கள். என்றாலும் அதன் மூத்திரத்தைப்பார்க்க டஸ்பமானசாம்பல் மேன்மைதான். உண்மையைச்சொன்னேன், விசனப்பட வேண்டாம், ஆனால் ஜீவதேவன் எப்படிப்பட்டவர்?

### பத்திரகிரியார் புலம்பல்.

அட்டாங்க யோகமதற் கப்பாலுக் கப்பாலாய்க்
கிட்டா பொருள்தனையே கிட்டுவது மெக்காலம்.

### பட்டணத்தார் அருட்புலம்பல்.

சர்ட்சிக் கொளியான்காண் கண்டாலுங் காணான்காண்
மாட்சிமனம் வைத்தவர்க்கு மாணிக்கத் துள்ளொளிகாண்.
ஆதியாய் நின்ற வகண்டபரி பூரணத்தை
சாதியாய் நின்றவிடஞ் சார்புற்றாய் நெஞ்சகமே.

இப்படி மெய்த்தேவனின் மகத்துவமிருக்க:

### திருமூலர் விருத்தம்.

கழுதைமா டாடு பன்றி கரேமாம் பாம்பு பல்லி
பழுதுள்ள மிருகந் தன்னை பராபர மதுவே யென்று
முழுதுமே மதிக ளற்ற மூடரா மனிதர் கூடித்
தொழுதிடுந் தெய்வ மென்று சொல்லுவ தெந்தநீதம்.

வேதநாயக சாஸ்திரியார்.

கருடன்கழுகுமயில் திருடும்நாய்பெருச்சாளி
கடிக்கும்பாம்புகுரங்கு பிடிக்குங்குதிரையானை
குருடுகளேமாடுகளையும் அதின்சாணியையும்பெண்
குறியையுந்தெய்வமென்று வெறிகொண்டலையாதேயும்.

வே — சா — சாஸ்திரக்கும்மி.

மாட்டுச்சாணியுங் கோமியமுங்கொண்டு
வான்கதிபெறக்கூடுமென்றால்
மாட்டைத்தானே முற்றிலுந்தின்றவன்
வளம்பெறுனேடி ஞானப்பெண்ணே.

அல்லாமலும், சில பேதைகள் மனிதருடைய ஆத்துமாவை "தேவவஸ்து" வென்று சொல்லுவார்கள். தேவன் பரிசுத்தர், அவரே மனித ஆத்துமாவாயிருப்பாராகில் அப்போது மனிதனுஞ் சாகாமையோடுங் கூடிய பரிசுத்தனாயிருக்கவேண்டுமே. மனுமக்களில் எப்பாவமுஞ் செய்யாத ஒரு புண்ணியவானைக் கண்டதுண்டா! பொய், கொலை, களவு, கள், காமம், குரோத முதலிய பெரும்பாவங்களிற் சிக்குண்ட மிதமிஞ்சினரையேயாப் பார்க்கிறேம். அப்படிப்பட்டவர்களை "தேவவஸ்து" வென்னும் ஆத்துமாவை யுடையவர்களென்று எப்படிச சொல்லலாம்? பிர. 7: 20-ல் ஒரு பாவமுஞ் செய்யாமல் நன்மையையே செய்யத்தக்க நீதிமான் பூமியில் இல்லை; உரோ. 3: 12, 13. "எல்லாரும் வழிதப்பி ஏகமாய்க் கெட்டுப்போனார்கள்; நன்மைசெய்கிறவன் ஒருவனாகிலு மில்லை; அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட பிரேதக்குழியா யிருக்கிறது" என்று தேவன் கூறுகிறர். ஆனல் மனிதன் பாவிஷ்டியாயிருந்தாலும் சாகாமை யுள்ளவனே? அப்படியுமில்லை. ஆகையால் சங்கீதக்காரன் சொல்வதென்ன? சங். 146: 3, 4. "பிரபுக்களையும், இரட்சிக்கத் திராணியில்லாத மனுபுத்திரனையும் நம்பாதேயுங்கள். அவனுடைய ஆவி பிரியும், அந்நா

ல்லே அவன் போசனைகள் அழியும்". இப்படி இருப்பதினாலே ஜீவாத்துமாவாகிய மனிதன் பரிசுத்தமும், அழியாமையுமுள்ள வஸ்தென்று எப்படி சொல்லலாம்? சுயம்புவாகிய ஏகோவா தவிர, திரிமூர்த்திகளும், மற்றும் சகல மனிதர்களும் அழிவுக்குரிய பாபிஷ்டிகளாகவே யிருக்கிறார்கள்.

வேத-சாஸ்- ஞானவழிவெண்பா 31.

எந்த விடத்திலோ? வெப்போதோ? வெப்படியோ?
எந்தமண்ணி நேரமோ! ஏதாலோ!—வந்தவினைக்
கென்னமா யென்னிலையாய்ச் சாவா ரெனவறியார்
பின்னையும்வீம் பேன்பேசு வார்.

பத்திரகிரியார்.

அற்ப சரீரமிது ஆவி யொடுங்குமுன்னே
சற்குருவைப் போற்றித் தவம்புரிவ தெக்காலம்.

பாம்பாட்டிசித்தர் 4.

முக்கனியும் சர்க்கரையும் மோதகங்களும்
முதிர்சுவை பண்டங்களு முந்தியுண்ணவாம்
மிக்கவுயிர் போனபின்பு மண்ணைவிழுங்க
மெய்யாகக் கண்டோமென் றூதுபாம்பே.

மெய்ஞ்ஞானத்தங்கம். 7.

அந்தப்பிணத்தை அலங்காரஞ்செய்து
இந்தப்பிணங்களெல்லாம் - அடிதங்கம்!
ஏதுக்கழுகுதடி?
உடலைநினைந்து நினைந் தொழியா தழுதுவரும்
சுடலை நெருங்கிவிட்டால் - அடிதங்கம்!
சொல்லாமற் போவாரடி.

மேலும், எங்கும் வியாபகமாகிய கடவுள் உங்கள் கருத்தின்படி மனித ஆத்துமாவோடு கலந்திருப்பது மெய்யானாலும், தேகனும் ஒன்று, சாதியு மொன்றாகத்தானே யிருக்கவேண்

டும? அபபடியானால் ஜாதிப் பிரிவுக்கிடமில்லையே. பின்னையே ன் "உயர்ந்த சாதி" "தாழ்ந்தசாதி" யென்று வேற்றுமைப்ப டுத்திப் பேசவேண்டும்? உயர்த்தி, தாழ்த்தி என்கிற பேதத் தில் தேவனும் சேர்ந்திருப்பதினாலே அவரையும் அவ்வகையா ய்த்தானே உயர்வு தாழ்வாய் மதிப்பிட வேண்டும்? ஐயை யோ! இது உங்கள் புத்திக் கெட்டடி யிருக்கிறது? ஞானவா ன்களே! உங்கள் தேவர்களோ அனந்தம்! அவர்கள் சாதி பேத பலவிதம், அதை விஸ்தரிக்கில் உங்களுக்கே மனவருத் தம் உண்டாகும்.

அகப்பையர்.

சாதிபேதமில்லை - அகப்பே - தானவனானவற்கு
ஓதியுணர்ந்தாலும் - அகப்பே - ஒன்றுந்தானில்லையடி.

கடுவெளி சித்தர்.

எவ்வகை யானநன்னீதி அவை
யெல்லாமறிந்தே எடுத்துநீ போதி
ஒவ்வாதென் றேபல சாதி—யாவும்
ஒன்றென்றறிந்தே யுணர்ந்துநீசோதி. பாவம்

சிவவாக்கியர்.

சாதியாவதேதடா ஜலந்திரண்ட நீரலோ?
பூதவாச மொன்றலோ? பூதமைந்து மொன்றலோ!
ஓதுவேதகிதமு மூனுறக்க மொன்றலோ?
சாதியாவ தென்பதேது? சாதிவாழ்வுதிண்ணமே.

ஓ! ஞானவான்களே! தேவன் எப்பொருட்களையும் உள் ளும்புறம்புமாகத் தெளிவாய் பரிசோதித்தறிகிறவரா யிருந் தபோதிலும் மனிதர்கைவேலையான சுரூபங்களிலாவது, அசு த்தவஸ்துக்க ளிடமாயாவது அவர் அமைவானென்பது அவ ரின் திவ்வியதன்மைக்கு முற்றிலும் ஏலாததும், கனவீன முமானகாரியம். தேவன் மெய்யன்பர் உள்ளத்தில் வசிக்கி றார்; அது உண்மைதான், ஆனால் அவர்கள் ஆத்துமாவாச,

அல்லது ஆத்துமாவோடு நிர்மாணிக்கப்பட்டு வசிக்கிறுமென்றபொருளாய் நீங்கள் அர்த்தம்பண்ணிக்கொள்ளக் கூடாது; சுத்தவாளரில் எவரும் பிரியம் வைப்பதில்லையே, அதுபோல தேவனும் புறம்பாசவல்ல, இருதய சுத்தரிடத்தில் அவர் அதிக நேசத்தைக் காட்டுகிறர். ஏனென்றுல் "இருதயசுத்தன் சருவதுஞ்சுத்தன்" மனிதனே முழுவதுந் துற்குணத்திலேயே உருவாகிப் பிறந்திருக்கிறபடியால் இருதயசுத்தி மனிதனுல் அல்ல, தேவனுல்ஆகவேண்டியது. தேவசெயலால் ஒருவனிடத்திற் பாவத்தைப்பற்றிய துயரம் உண்டாகும்போது, தேவன் தமது திருவசனத்தை அருளுகிறர்; அதைக்கவனித்து அதின்மூலமாய் இவன்ஆறுதலேத்தேட முயலுகையில் சர்த்தராகிய இயேசு அவனில் உதயமாகி, அப்பக்தனுக்குத் தேறுதலேக் கட்டளேயிடுகிறர். மத். 11: 29. அப்போதிவன் கிறிஸ்தேசுவின் அடைக்கலத்தொதுங்கி, பாவத்துக்குச்செத்து, நீதிக்குப் பிழைத்தவனுக சீவித்துவாழத் தன்இருதயத்தைத் தேவனுக்கு ஆலயமாக ஒப்படைக்கிறுன். 1. கொரி. 6: 19. 20. விலேமதிக்கப்படாத கிறிஸ்துவின் திருவுதிரமே அதின்கிரயம். இதின்பேரில் சேர்ப்பட்ட இருதயம் சாத்தானுக்கல்ல, தேவனுக்கே ஆதீனமாகிறது; ஆனுல் நீங்கள் ஒன்றை மனதில்வைக்கவேணும். தேவன்பகுக்கக்கூடியவருமல்ல, ஒன்றில் அடங்கத்தக்கவருமல்ல, அவர் எங்கும்வியாபகமாயிருக்கும் அநாதியானதினுல் தமதுகிருபைதங்கிய ஆவியின்சுடரை அவனிடத்தில் வீசும்படிசெய்து, அவன்புத்தியின் கணகளைப் பிரகாசிப்பிக்கிறர்; அப்போதிவன் தன்பெலவீனங்களெல்லாவற்றையுந் தெளிவாயறிந்து, தன் ஆத்தும இரட்சிப்புக்குரிய விசுவாசத்தில் உறுதிபூண்டு, தேவனின் திருவாசகம் கற்பிக்கிறபடி அவருக்கு பயபக்தியாய் நடக்கப் பிரயாசப்பட்டு வருவான்; தேவனும் அவனில்அன்புகூர்ந்து, நெருங்கின ஐக்கியமாய் அவனேடே வாசஞ்செய்வார், யோவா. 14: 23.

இது ஓர்செடியில் நின்றெழும்பிய கொடிக்கொப்பாந்தமான ஐக்கியமானதால் தேவனோடிசைக்கப்பட்டவனைப் போன்ற புதுமனிதனைப், பரம சற்குருவால் வரும் புண்ணியபலன்களில் வாஞ்சையுற்று, இகத்தைப்பல்ல பரத்தைநாடிய பக்தனாயிருப்பான். இவ்விதமேயன்றி, மனிதாகளுக்குரிய சீவனே தேவஸ்துவாக ஒருபோதுமாறுகிறதில்லை.

வேத–சாஸ்–பராபரக்கண்ணி. 35–ம். பாட்டு.

உமக்குள் பிழைத்தசைந் தோங்கியிருக் கின்றோ
மெமக்கெவர்க்குந் தூரமில் லென்றோம் பராபரனே!

இடைக்காட்டார். 35–ம். பாட்டு.

எங்கும் சுயம்பிரகாசன் – அன்பர்
இண்டமிருதயத் திருந்திடும்வாசன்
துங்கவடியவர்தாசன் – தன்னைத்
துதிக்கின்றடத்தி யருளுவானீசன். பாவ

தேவன்எங்கும் வியாபித்திருக்கிறவிதம் ஞானிகளின்புத்திக்கு மெட்டாதிருக்கிறது; ஓ இதுநேசரே! தேவசிருஷ்டிப்புகளில் ஒன்றாகிய காற்றின்விரம் யாருக்குந்தெரியும்? அது எங்கேயிருந்து புறப்பட்டு எங்கேபோய்த் தங்குகிறது? அதின் தாபரிப்பின் ஸ்தலமெது? அறிந்தால் சொல்லுங்கள்? அப்படியிருக்க எப்பொருட்கு மிறைவனின் இருப்பிடஸ்தானத்தைஅறிய எவரால்முடியும்! ஏசா. 66: 1-ல் "வானம்எனக்குச் சிங்காசனம், பூமி யெனக்குப் பாதபடியா யிருப்பதால்," எரேமி 23: 24-ல் "நானேவானத்தையும் பூமியையும் நிரப்புகிறேனென்று எகோவாவே திருவுளம்பற்றுகிறார்" சங். 139: 7-ல். மகாஞானியாகிய தாவீது உம்முடைய ஆவிக்குமறைவாக எங்கேபோவேன்" என்கிறார். வித்துவசிரோமணியாகிய சாலோமோன் 1-இராசா.8:27-ல்" "இதோ! வானங்களும், வானாதிவானங்களும் உம்மை யடக்கிக்கொள்ளக்கூடாதே" என்று

ர். இப்படியிருக்க, ஓர் அற்பசிருஷ்டியின் அகத்தில் அடங்குவா
ரோ! அல்லது தமது திவ்விய தன்மையை ஓர் சிருஷ்டிக்குக்
கொடுப்பாரோ? அல்லது, விக்கிரகங்களிலும், புத்தியற்ற வன
விலங்குகளிலும் தேவன் குடிகொண்டிருப்பது கூடாமையே
னச் சொன்னாலும், மனிதர்களின் இருதயத்தில் ஏன் அமைய
மாட்டார்? இக்காலத்தில் மனிதர் புத்தியினால் யோசித்துச்
செய்யும் அநேக காரியங்கள் மிகவும் ஆச்சரியத்தையுண்டு
பண்ணத்தக்கதா யிருக்கிறதே என்பீர்கள். இது நல்லகேள்
விதான், நீங்கள் பார்க்கு மிவைகளெல்லாம் தேவனுடைய
கிருபையினாலேயே ஆகிற காரியம்; மனிதர்கள் யாவரும் புத்
தியுஞ் சித்தமு முடையவர்களாகச் சிருஷ்டிக்கப்பட்டிருந்த
போதிலும், அதோடுங்கூட தேவனால் அருளப்பட்ட உன்னத
அறிவுநல்கிய வேதசாஸ்திரம் புகட்டு மேலான ஞானத்தினா
லேயே இவைகள் நடக்கிறது. இன்னமும் பெரிய அதிசயங்க
ளைப் பார்க்கப்போகிறீர்கள். ஆனால் நீங்கள் பார்க்குஞ் சக
ல விசேஷணங்களும் அவைகளைச் செய்து நடப்பிக்கும் சகல
மனிதர்களும், மறைந்துபோகும் புகைகொட்டா யிருக்கிறார்
கள். ஒன்றைக் கவனிக்கவேண்டும். தேவன் யாரிடத்தில் சரி
யானபடி அமைந்திருப்பாரோ அவரும் திவ்விய தன்மையுள்
ள தேவனென்றே சொல்லவேண்டும். புத்திமான்கள் யாவ
ருக்குந் தெளிவாய்த் துலங்கிய ஒருவரிருக்கிறார். அவர்யார்?
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவே; இந்த இம்மானுவேலாகி
ய தேவன் உலகத்தில் மனுஷீகத்தை எடுத்து வசிக்கையில்,
அவருடைய பரிசுத்த நடக்கையும், அவரின் திருவாய்க்கனிக
ளும்; அவர்செய்த பலத்த அற்புதங்களும், அவரை மெய்யான
தேவனென்று ரூபகாரப்படுத்திற்று. சங்கத்தலைவனும், வேத
சாஸ்திரியுமாகிய நீக்கோதேமு இயேசுநாதரைப் பார்த்து
பரி: யோவா-3: 2. இரபி! தன்னுடனே தேவனிராவிட்டா
ல் நீர் செய்கிற இப்படிப்பட்ட அற்புதங்களை ஒருவனும் செ

ய்யமாட்டான். ஆகையால், நீர் தேவனுல்வந்த போதகரென்று மெய்யாகவே சொல்லுகிறேன்" என்ருன். சொல்ல வேண்டுமானுல், இன்னமும் அனந்தம் திருஷ்டாந்தரங்களுண்டு. ஆனதால் அவரையின்றி மற்றெவரிலும் தேவன் அமைந்திருக்கிருரென்று சொல்லவுங்கூடாது. அப்படிச் சொன்னுல் அது தேவதூஷணமாயிருக்கும். ஜேசுநாமம் விசுவாசியின் காதுக்கெத்தனையோ யின்பம்! தீர்த்திடும் பயத்தையாத்து மரணத்தைச் சேர்க்குமே பேரின்பம்.

இரக்ஷண்யநவநீதம். 96-ம். பாட்டு.

அன்பு மயமாந் திருமேனி அருளுக் குறையுள் திருநயனம்
இன்பு தருமெய்ச் சஞ்சீவி யெழில்வாய் கனியுந் திருவாக்கு
மன்பு வுலகுக் கஞ்சலென வழங்கும் அபய வரதாஸ்தம்
துன்பே னுமக்கிவ் வெம்பெருமான் றுணைத்தாள் தொழுமின்
[ஜகத்தீரே.

ஓ! ஞானவான்களே! உங்கள் கண்களை மேலேநோக்கி சமுத்திரதீரத்தை ஏறிட்டுப்பாருங்கள்! ஆகாயவிரிவானது பூதலத்தைக் கவிழ்ந்திருப்பதுபோலவும், சமுத்திரமானது இப்பெரிதானப் பூமியைச் சூழ்ந்திருப்பதுபோலவும், இருக்கிறதே, அவ்வண்ணம் தேவன் எங்கும் வியாபகமாய் நிறைந்திருக்கிருர். எல்லாம் அவர் பார்வையிலடக்கம், உற்றுப் பார்க்கும் எவ்விடத்திலும் தேவனைக்காணலாம். "ஒருவன் தன் சினேகிதனுகிய ஒரு ஞானியைச் சந்திக்க வந்தபொழுது அவன் குடிசைக்குட்போகப் பயப்பட்டான். ஞானியோ அதையறிந்து, "உள்ளேவா தேவன் இங்கேயு மிருக்கிருரொன்ருன்" அதென்ன? சமாதானக் கடவுளிங்கே யிருக்கிருர், அஞ்சாமல் உள்ளே வா என்பதாம். அன்றியும் மாம்பழக் கதையை உங்களி லனேகர் பார்வையிட் டிருப்பீர்கள். ஒரு தோட்டத்தில் மாம்பழந் திருடும்படியாக தகப்பனும், மகனும் போனதில் ஆள்வருகிறதோ டாவென்றுசொல்லி தக

ட்டன் மரத்திலேறினன். மரத்திலேறிய பின்னும் "யாராவது பக்கத்திலே நிற்கிறார்களோ?" வென்று கேட்க மகன் "ஒருவரு மில்லை" யென்றான்; பின்னும் "நாலாபக்கமும் நன்றாய் நோக்கிப்பா" ரென்றான், அவன் அப்படியே பார்த்து "அதோ ஒருவர் பார்க்கிறா" ரென்றான், அவர் யார்! என்று கேட்க, மகன் "தேவன் பார்க்கிறா" ரெனறான்; உடனே தகப்பன் திடுக்கிட்டு, அந்நிமிஷமுதல் சன்மார்க்கனாய் நடந்துவந்தான். இச்சிறிய சரித்திரத்தினாலே தேவனானவர் எங்கும் நிறைந்திருக்கிறாரென்பது தெளிவாய்த் துலங்குகிறதே. அல்லாமலும் ஜலத்தில் சஞ்சரிக்கு மீன்களைக் கவனியுங்கள்! அவைகள் தண்ணீரினாலே சூழப்பட்டும், அதின் ஆதரிப்பினாலே காக்கப்பட்டும் வருகிறது; ஆனால், அவைகளின் வயிற்றினுள் ஜலப்பிரவாகமுண்டோ? இல்லையே, பின்னை யெப்படி அவைகள் ஜீவிக்கின்றன? தண்ணீரைவிட்டுக் கரைசேர்ந்தால் உடனே அவைகளின் ஜீவனுக்கு மோசம்வரும். இவ்விதமாகவே சகல ஜீவாத்மாக்களும் தேவபராமரிப்பினால் காக்கப்பட்டும், ஆதரிக்கப்பட்டும் வருகின்றன; அவரைவிட்டுக் கொஞ்சம்விலகினால் மனிதர் முதலிய சகல ஜீவாத்மாக்களும் மோசத்துக்கும், நித்திய நாசத்துக்கும் ஏதுவாக வேண்டும். இதே பிரகாரம் தேவன் எங்கும் வியாபகமா யிருக்கிறாரேயன்றி ஊமைச் சுரூபங்களில் வசிக்கிறாரென்பது சுத்த அபத்தம்.

இடைக்காட்டார். 33, 34-ம் பாட்டு.

ஆதிபகவனையே - பசுவே - யன்பாய்நினைப்பாயேல்
சோதிபரகதிதான் - பசுவே - சொந்தமதாகாதோ
எங்குநிறைபொருளை - பசுவே - யெண்ணிப்பணிவாயேல்
தங்கும்பரகதியில் - பசுவே - சந்ததஞ்சாருவையே.

பட்டணத்தார் அருட்புலம்பல். 82, 83.

நீரொளிபோ லெங்கும் நிறைந்த நிராமயன்காண்
டாரொளிபோ லெங்கும் பரந்த பரிபூரணன்காண்

நூலா லுணர்வரிய நுண்மையினு நுண்மையன்காண்
பாலாறு சக்கரைபோற் பரந்தபரி பூரணன்காண்.

ஓ! இந்துக்களே! தேவன் எங்குமிருக்கிறானென்பதை சற்றே கவனமாய் நோக்கினால் தெளிவா யறியலாம்; ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற சூரியனில் உங்கள் கண்ணை யேறெடுங்கள், சூரியப்பிரபை யானது மறைவிடமற்ற வெளிகளிற்றன் றிட்சணியத்தை அதிகக் காங்கையாய்க்காட்டினாலும், மறைப்பால் சூழப்பட்டிருக்கும், உள்ளான அறைவீடுகளிலும் அதின் ஒளிப் பிரகாசிக்கிறதே. அதெப்படி? அதின் பிரகாசத்திலே யாவரும் நடமாடித்திரிகிறோமே, அங்கே யொரு சூரியனுண்டோ! இல்லையே. அப்படியில்லை என்று எவர் மறுக்கலாம்? நீங்கள் பார்க்கும் இந்தச்சூரியனைப் படைத்த ஞானக்கதிரோன் அவ்வண்ணமாய் எங்கும் தன்னுடைய றிட்சணியத்தோடுங்கூடிய ஒளிபோற் பிரகாசித்து, சகலத்தையும் ஊடுருவிப்பார்க்கும் ஒளியாயிருக்கிறார். இதற்கு ஒரு சிறிய திருஷ்டாந்தத்தைப் பாருங்கள்! சிறுவயதிலே பத்தியுள்ள தாய் தகப்பன்மாரால் வளர்க்கப்பட்டு, ஹல்லேபட்டணத்து சாஸ்திரபள்ளிக்கூடத்தில் படித்த ஒரு தேவபத்தியுள்ள ஒரு வாலிபனை அவன் வீட்டிலே அவன் வளர்ப்புக்குமரியா யிருந்தவள் இவன்பேரில் மோகமுற்று, இவனைக் கறைப்படுத்தப் பார்த்தாள். அவன் இவள் அலட்டுதலைச் சகிக்கமாட்டாமல் ஒருவரும் பாராத இருட்டறையில் கூட்டிப்போனால் உன்னிஷ்டப்படி செய்வேன் என்றான். அவள் சந்தோஷத்தோடு முதலாவது ஒரு அறையில் அழைத்துப்போனாள் அப்போதிவன் "பக்கத்தில் மனிதசத்தங் கேட்கிறதே என்றான்; பின்பு வேறொரு அறையிற் கூட்டிப்போனாள். "இந்த இடத்திலேயும் யாராவது நம்மைக்கண்டுபிடித்துக்கொள்வார்களென்று பயப்படுகிறேன்" என்றான், பின்பு ஒருவரும்வரவும், பார்க்கவும் ஏதுவிலாத ஒரு இருட்டறையைக்காண்பித்து "இங்கேபயமில்லையே"

என்றுள் அப்போதந்த வாலிபன் தன்யோசனையை வெளியிட்டு "இதுமெத்தவும் இருட்டான அறைதான் ஆனால் தேவன் இல்லாத இடமாயும் அவரின்பார்வை செல்லாத மறைவிடமானவிடத்திலே என்னைக்கூட்டிப்போக மாட்டாயா? என்றான். மகா இளமையும் பாரித்தன்மையுமுள்ள இவ்வாலிபன் வாயிலிருந்து புறப்பட்டசொல் அவனிருதயத்திலே ஒருவாள்போல்பட்டுருவி, உடனே உத்தம மனஸ்தாபப்பட்டு, உண்மையாய்க் குணப்பட்டான். இதைக்கவனித்து அவனெங்கும் நிறைந்திருக்கிறானென்பது எவ்விதமென்று அறிந்துகொள்ளுங்கள். இதைப்பார்வையிடும் சகலஅன்பரும் மனதில்வைக்கவேண்டியது யாதெனில், கண்ணையுண்டாக்கினவர் காணாரோ! காதையுண்டாக்கினவர் கேட்கமாட்டாரோ! என்பதுதானே.

## பட்டணத்தார்.

இருட்டறைக்கு நல்விளக்கா யிருக்குமுன்றன் வல்லமையை
அருட்டுறையி லிருந்திவிளக்காக்குநீ புல்லறிவே.

## வேத–சாஸ்–பராபரக்கண்ணி. 26.

ஆழம் ஒளிப்பிடமானத்தை வெளியாக்கி
சூழிருளி லுள்ளதுவுந் தோன்றும் பராபரனே.

ஓ! என் அன்பரே! இன்னமும் உங்களுக்குத் தெளிவாக வேண்டுமாகில் வேறொரு திருஷ்டாந்தத்தைக் கேளுங்கள். இதோ பலவிதசாமான்கள் நிறைந்திலங்கிய ஓர்கண்ணாடி அல்மேறு வினோதசாலையி லிருக்கிறது பார்த்தீர்களா? அதிலுள்ள எப்பொருளும் உங்களுக்குத் தெளிவாய்த் தோன்றுகிறதில்லையா? அதுபோல இகபர பாதாளமும் அவைகளிலுள்ள சகலபொருட்களும், எல்லாஉயிர்களின் செய்கையும் அவரின் திருப்பார்வையில் வெளியரங்கமாய்த் தோன்றும் அந்தக் கண்ணாடிப் பாத்திரம்போலிருக்கிறது, சிவதேவனுக்கு மறைவிடமானது யாதொன்றுமில்லை; சகலமும் அவருக்கு முன்பாக நிருவாணமாயும் வெட்டவெளியுமா யிருக்கிறது;

ஞானியாகிய தாவீதரசன் தேவனைப்பற்றிச் சொல்வதே ன்ன? சங் 139. 8. 16 நான்வானத்துக்சேறினாலும் நீர் அங் கேயிருக்கிறீர் நான் பாதாளத்தில் படுக்கைப்போட்டாலும், நீர்அங்கேயுமிருக்கிறீர். நான் விடியற்காலத்துச் செட்டைக ளை எடுத்து சமுத்திரத்தின் கடையாந்தரங்களிலே போய்த் தங்கினாலும், அங்கேயும் உமதுகை யென்னை நடத்தும், உம துவலதுகரம் என்னை பிடிக்கும். என்தாயின்கர்ப்பத்தில் என் னைக் காப்பாற்றினீர். என்கருவை உமதுகண்கள்கண்டது. உம க்குமறைவிடமானது யாதொன்றுமில்லை'' யென்கிறார்.

பாம்பாட்டிச்சித்தர். 3-ம் பாட்டு.

பொன்னிலொளி போலவெங்கும் பூரணமதாய்
பூவின்மணம் போலதங்கும் பொற்புடையதாய்
மன்னும்பல வுயிர்களின் மன்னிப்பொருந்தும்
வள்ளலடி வணங்கிநின் றுடுபாம்பே.

வேத-சாஸ்-பராபரக்கண்ணி. 1, 15, 16.

பொங்குபர மண்டலங்கள் பூதலங்கள் பாதலங்க
ளெங்கும் நிறைந்த இறையே பராபரனே.

வானத்துக் சேறிலங்கும் வைகின்றாய் பாதலத்தின்
றுன்த்திற் சென்றுந் தரிப்பாய் பராபரனே.

கூறும் விடிகாலைச் செட்டைகள்கொண் டேகடலி
னீறுகடை சென்று மிருப்பாய் பராபரனே.

ஓ! ஞானவான்களே! மேற்காட்டிய வகையாய்த் தேவ ன் எங்கும் நிறைந்திருப்பதேதவிர சடப்பொருட்களில் அடங் கியிருப்பானொன்று ஒருபோதும் நினைக்கவேகூடாது; அப்படி நினைத்தால் தேவனை குக்கக்கூடிய ஓர் அநித்தியவஸ்துவெ ன்று லேசாயெண்ணலாமே. வானமும் பூமியும் அவனையட க்கிக்கொள்ளக் கூடாதிருக்க, மனிதர்கைவேலையான விக்கி ரகத்தில் அவர் அடங்குவதியல்போ? இது உண்மையாகில்

ஒரு ஒட்டகமானது ஊசியின்காதில் நுழைவது வெகு எளி தென்கலாம். ஓ! இந்துநேசரே! இவ்வித நம்பிக்கையானது பரிசுத்ததேவனின் கோபத்தை வருவிக்குமென்பதாக நன்றாயெண்ணுங்கள். நான்சொல்வது உண்மையோவென்று உங்களுடன் தோழராகிய பிர்மசமாஜத்தாரைக் கேளுங்கள். அவர்கள்சொல்வதென்ன? "ஊமையான விக்கிரகங்களைச் சட்டோடே ஒழிக்கவேண்டும். அதில் தேவன் வசிப்பதில்லை. எந்தத்தாழ்ந்த ஜெந்துவையாவது படைப்பிலடங்கிய எப்பொருளையாவது ஆராதிக்கச்கூடாது. இவ்விதமாய்த் தேவனைஆராதிப்பது மகாதோஷம், அரூபமாயிருக்கிற தேவனை நமது வாக்கு மனது மொந்து ஆவியினாலே அவரைத்தொழுதேற்றவேண்டு" மென்பதாய் வற்புறுத்திப் பேசுகிறார்கள்.

வேத-சாஸ் 1. பங்கு. பராபரன்மாலை.
11, 12, 13-ம். பாட்டு.

விக்கிரக மூர்த்தனக்கு மெய்ப்பாக பாவனையென்
றக்கிரமக் கார ரழிசுரூப மாக்கினதா
லுக்கிரம நீதிபெரிந் தோர்நொடியி லேயவரை
நிக்கிரகஞ் செய்யா நிறையேன் பராபரனே.

வானுலகும் பூவுலகு மற்றுலகுங் கொள்ளாமற்
றானதாய் நின்ற சருவ வியாபியுனை
யீனமரங் கல்லி லிருப்பாயென் றெண்ணுவது
ஞானமற்ற மூடர்களி னுட்டம் பராபரனே.

அண்டமெல்லாங் கொள்ளா தனைத்திடமுந் தாங்காது,
மண்டலங்கள்கொள்ளாது, வான்முங்கொள்ளாதுனைத்தான்,
கண்ட வுருவிற் கலந்திருப்பா யென்றுசொன்னாற்
றண்டரிக்க மானபெருந் தோஷம் பராபரனே.

கடைசியாக நீங்கள் கவனிக்கவேண்டியது, சகல மகாத்துமாக்களும் தொழுதேற்றிய கருணாநிதியான கடவுள், ஞா

ஞானசமுத்திரம்; அநாதியான சுயம்பு; அவரின் வல்லபத்துக் கோரளவில்லை; அரூபமாகிய இறைவன்; அவர் ஒன்றில் அமையவுமாட்டார்; அவரை யடக்கிக்கொள்ளத்தக்க வஸ்து இகபரபாதாளம் எவற்றினுமில்லை யென்பது குன்றாசத்தியம்; அவரைப்போல் ஒரு சாடலை யுண்டுபண்ண வேண்டுமானாலும் அவருடைய வடிவம் எவருக்குந் தெரியாது; ஏசா. 46: 5. "இப்படியிருக்க, தேவனை யாருக்கு ஒப்பிடுவீர்கள்" ஏசா 44. 10, 11. "ஒன்றுக்கும் உதவாத தெய்வத்தை உருவாக்கி, விக்கிரகத்தை வார்ப்பிக்கிறவன் எப்படிப்பட்டவன். அழிவுக் குரிய நரசீவன்கள்தானே." 14: 16. வச. "இவர்கள் தேவனுக்குப்பிரியமாக அசோகமரத்தை வளர்த்து, சமயம் வரும்போது ஒரு துண்டை அடுப்பில் எரிக்கிறான், ஒரு துண்டினால் இறைச்சியைச் சமைத்துப் புசித்து குளிர்காய்கிறான், மீதியான துண்டை விக்கிரக தெய்வமாகச்செய்து, அதற்குமுன் விழுந்து வணங்கி, நீ என்தெய்வம், என்னை இரட்சிக்க வேண்டுமென்கிறான்." 19-ல் "இந்த மரக்கட்டையை வணங்கலாமா? என்கிற அறிவும் சொரணையும் இல்லையே" யென்று தேவன் பரிதபிக்கிறார். ஆனதால் அழிவுக்குரிய விக்கிரகங்களின் மூலமாய்த் தேவனைப் போற்றாமல், அவர் எங்கும் நிறைவாகிய அரூபியானதினாலே யோவா. 4: 24. "அவரைத் தொழுது கொள்ளுகிறவர்கள் ஆவியோடும் உண்மையோடும் தொழுது கொள்ளவேண்டும்." இப்படிச் செய்வதே கடவுளுடைய சித்தமும், அவரின மாறாப்பிரமாணமுமா யிருக்கிறது.

சிநேகிதரே! ஒன்றைக் கவனியுங்கள். நமது தேசம் மகா மேன்மைபொருந்திய அரசியாகிய விக்டோரியா இராக்கினியவர்கள் ஆளுகைக்குட்பட்டிருக்கிறது; அவர்கள் இங்கேயில்லை; நம்மிலனேகர் அவர்களைப் பார்த்திருக்கவு மாட்டோம். அப்படியிருக்க, அவர்கள் நம்முடைய நடுவில் வசிக்கிறபாவனையாய் அவர்கள் கட்டளையிடும் சகல பிரமாணங்களுக்கும்

பக்தியாய் கீழ்ப்படிந்து வருகிறோமல்லவா? ஏன்? அதற்கு விரோதஞ்செய்தால் நாம் தண்டனைக்குட்படுவது நிச்சயம். அதுபோல நாம் தேவனை நமது பாவக்கண்ணால் காணாவிட்டாலும் அவர் கட்டளையிட்டருளிய பரிசுத்த பிரமாணங்களுக்கு நமது செவியைச்சாய்த்து, அதின்படி நடப்பது அவசியம்; தேவனை யெவரும் கண்ணினாற் காண ஏதுவில்லை. ஆனதால் சுரூபங்களின் மூலமாய் அவரை மகிமைப்படுத்துகிறேனென்பீர்களோ! இப்படிச்செய்வது தேவனுக்கு மகா கஷ்டம்; உங்களுடன் தோழராகிய பாப்புமதத்தாரும் இந்து மதத்தாரும் பரிசுத்தவான்களைப்போல சுரூபங்களைச்செய்து, வணங்குகிறார்கள். ஏன! இவர்கள் ஸ்நானத்தினால் மோக்ஷ சந்ததி கிடைக்குமாம். ஓ! இது தேவனைப் பரிகாசம்பண்ணுவதுபோ லிருக்கிறது! எப்படியென்றால், நமது தேசத்து அரசனுக்கு செலுத்தவேண்டிய இறைவரி, தீர்வைமுதலானவைகளை அரசனைப்போல ஒரு சுரூபத்தை தங்கத்தினாலுண்டாக்கி, பிராணபிரதிஷ்டையும்செய்து ஓர் ஆலயத்திலிருத்தி, அரசனுக்குரிய சகலகாரியங்களையும் அதற்குமுன் வைத்துப் படைத்தெடுத்துக்கொண்டு, பொருளுக்குடையோன் கேட்கும்போது “மகாஇராசனே! உமக்கு மகிமையாக பொன்னாற்செய்த உமது சுரூபத்துக்குப் பதின்மடங்காய்ச் செலுத்தியிருக்கிறேன்” என்றுசொன்னால், அப்படிப்பட்டவன் ஆக்கினைக்குத் தப்புவானோ? இதைச்சற்றே ஊக்கமாய்க்கவனித்து, காலத்தை வீணில் கழியாமலும், உங்கள் ஆத்துமாவுக்குக் கேடுதியை வருவித்துக்கொள்ளாமலும், விழிப்பாகக் கிருபையின் ஒளிதங்கிய இயேசு இரட்சகனில் நாட்டமுற்று, அவர் மூலமாய் சீவதேவனின் ஆசீரைப் பெற முயலுவீர்களாக. அவரின் பேரன்பைப் பாருங்கள்; மத். 11: 28. “வருத்தப்பட்டுப் பாரஞ்சுமந்துகொண்டிருக்கிறவர்களே, நீங்களெல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நானுங்களை இளைப்பாற்றுவேன்” என்கிறார். ஆ

கையால் காலதாமதஞ்செய்யாமல் அவரில் அடைக்கலம் புக ஆவல்கொள்ளுங்கள்; உலகத்துக் கஞ்சவேண்டாம். ஒருவரும் வேலைசெய்யக்கூடாத இராக்காலமாகிய மரணம்வரும்; அது எப்போவருமென்றறியோம், அது வரும்போது நமது புத்தியின்கண் இருண்டு நமது அறிவு மங்கிப்போகும், அச்சமயத்தில் நாம் ஒன்றையும் யோசிக்க ஏதுவிராது. இது நற்சமயம், நற்காரியங்களை கிரகிக்கத்தக்க தெளிவானபுத்தி இப்போது நமக்கிருக்கிறது. ஆகையால் தற்கரிசனத்தோடு வருந்தியழைக்கும் புண்ணிய இரட்சகனின் சத்தத்திற்கு உங்கள் செவிகளைச்சாய்த்து, அவரையே உங்களின் அடைக்கலமாக அங்கிகரித்து, அவர்மூலமாய் எங்கும் வியாபகமாய் நிறைந்திருக்கும் சீவதேவனின் ஆசீரைப்பெற ஆவல்கொள்வீர்களானால் யாதொருதடையுமின்றி நித்தியானந்தமாகிய பேரின்பத்தைப் பெற்று என்றுஞ் சுகித்துவாழ்வீர்கள்.

## ஔவை வெண்பா.

கூவி யழையுங்கள் கூப்பிட்டுச் சொல்லுங்கள்
ஆவியுள்ள நாளெல்லா மார்ப்பரித்துப்—பாவிகாள்!
கல்லோ தொழுகிறீர் கர்த்தா வொருவனன்
றல்லோ தொழுவ தடுக்கும்.

## வெண்பா.

சீர்சமையீ ரொன்பானூற் றேழுடன் ஞன்குமதி
நேர்செறிந வம்பரீ ரேழ்தெய்தி—வார்சிறந்த
அந்தன் றிருப்பரமன் அஞ்சரிதை முற்றுபெறச்
சித்தமுற்றோர்க் கெஸ்தோத் திரம்.

முற்றிற்று.

# ப தி த ன்.

## பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பதிவிரதா தத்துவங் குன்றிக்கா வல்நீங்கிப்
பாரிற்ப ரத்ரியாகிப்
பலபேரை யும்வஞ்சித் தோரியாய் நின்றீரப்
பற்றனுவு மற்றகங்காய் !
நதபுகழ் சேர் வீரரை மன்னரைப் பலவிஞ்சை
சாரமுணர் மனுமக்களைத்
தைவதா தொண்டரை யவர்கடசை யென்புகச்
சைத்தடிபல் லுச்சிகை பொருள்
விதமனைத் தும்பரம வஸ்தெனவுன் னிப்பணிசெய்
விபரமென் கொல்! பர்தல
வேதாளத் தோழியாய்ப் பாதாளத் தாழிகால்
வீழ்பவரல் லோ! பதிதர் மா
துதிபரவு சச்சிதா னந்தபரி பூரண
சுபோதயவே சுக்கிறிஸ்து
சுவாமியைக் கைதொழுஞ் சீரியோர் பதிதரோ!
சொர்கிளர்த் தல்வேண்டுமே.

